# பக்தி சக்தி முக்தி

(சிறுகதைத் தொகுப்பு, விளக்க உரையுடன்)

இறை நெறிச் செல்வர்

டாக்டர் நாகு ஆறுமுகம்

டில்லி பதிப்பகம்

'ஏ' 2/80, சிட்கோ நகர்,

வில்லிவாக்கம், சென்னை-600 049.

முதற்பதிப்பு : ஆகஸ்ட் 1994

விலை : ரூ. 36-00

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Bakthi Sakthi Mukthi |
| Language | : | Tamil |
| Author | : | Naku. Arumugam. |
| Date of Birth | : | 15th August 1947 |
| First Edtition | : | August |
| Copy Right Holder | : | Author |
| Paper Used | : | White Painting |
| Printing Type Used | : | 10 Point |
| Size of the Book | : | Demy |
| No of page | : | 192 |
| Price | : | Rs. **36-00** |
| No of Copies | : | 1000 |
| Publisher | : | DILLI PATHIPPAGAM<br>2/80 Sidco Nagar<br>Villivakkam, Madras-49 |
| Printer | : | MOOVENDHAR ACHAGAM<br>Madras-14 |
| Subject | : | Small Stories |

ISBN : 85801. New Delhi-110 001

அச்சிட்டோர் : மூவேந்தர் அச்சகம், சென்னை-600 014


THIS BOOK
Is printed and
published with
the financial
assistance of
Tirumala-Tirupati
Devasthanams
under their scheme
"Aid to publish
religious books".

# சற்குரு வணக்கம்

உடல் என்ற கூட்டைத் தந்து—அதில்
உயிர் என்ற உறவை வைத்து
கடல் போன்ற துயரில்—எனக்குக்
கடமைகளைக் கூட்டி வைத்த,
உடமைக்கும், உயிருக்கும் சொந்தமான
உன்னத ஸ்ரீமத் பாம்பன்
குமர குருதாச சுவாமிகளுக்கு—என்
சற்குரு வணக்கங்கள்.

—ஆசிரியர்

---

# சமர்ப்பணம்

என்
ஜனனம் தாய் நாகம்மாளுக்கும்
தந்தை குப்புசாமிக்கும்

என்
ஜீவனம் ஸ்ரீமத் பாம்பன் குமரகுருதாச
சுவாமிகளுக்கும்
இன்னும்
இறை உணர்வு மிக்க உள்ளங்களுக்கும்,

என்
மரணம் இயற்கை வகுத்த வழிமுறைக்கும்
என் முதிர்வுக்கும்,

என்
உணர்வுகளைச் சமர்பிக்கின்றேன்.

—ஆசிரியர்

# பொருளடக்கம்

# வள்ளுவர் வள்ளலார் வழிபாட்டு மன்றம்

**4/148, கவியரசு கண்ணதாசன் நகர், சென்னை-600 051**

விடுநர் :
திருநெறித் தொண்டர், திருக்குறள் படைப்புச் செம்மல்,
இராம. கவிச் செல்வர், இன்னிசைப் புலவர்,
**கா. ச. கசேந்திரன்** M.A., B.Ed.,
Phone : 577154

பெறுநர்
இறைநெறிச் செல்வர்
**டாக்டர் நாகு. ஆறுமுகம்** அவர்கள்,

எந்த ஒரு செயலைச் செய்தாலும் அதன் மூலம் எது கிடைக்கும்? எப்படிக் கிடைக்கும்? என்று ஆதாயத்தோடு வாழும் இக்காலத்தில் இறைநெறிச் செல்வர் டாக்டர். நாகு ஆறுமுகம் அவர்கள் தான் செய்யும் மருத்துவப் பணியுடன் அன்பர் பணி செய்யவும் தன்னை ஆளாக்கிக் கொண்டிருக்கிறார். காட்சிக்கு எளியவராக, இன்சொல் பேசுபவராக, இறை பணியில் பெரிதும் ஈடுபாடு உடையவராக, பொதுநலத் தொண்டராக விளங்கும் அன்னவர் தன்னுடைய இரண்டாவது படைப்பாக ''பக்தி சக்தி முக்தி'' என்னும் நூலை அளித்திருக்கிறார்.

இந்நூல் 'பக்தி' குறித்த விளக்கங்களையும் 'சக்தியின்' பிரயோகங்களையும் பக்தியும் சக்தியும் இணைந்ததால் பெறக் கூடிய முக்தியையும் சுவைப்படக் கூறுகிறது. இந்நூல் அடங்கிய சிறு கதைகள் பக்தியின் பெருமைகளை மட்டுமென்றி, சமூகப் பிரச்சினைகளையும் முற்போக்கு எண்ணங்களையும் மருத்துவக் கருத்துக்களையும் கொண்டு பின்னப்பட்டுள்ளது. சுருக்கமாகச் சொன்னால் இது ஜாதி, மனோரஞ்சிதம், ரோஜா, மருக் கொழுந்து, சேர்ந்த மலர்க் கதம்பம்.

கதாபாத்திரங்களின் பெயர்கள் ஆசிரியரின் தமிழ்ப் பற்றை தெள்ளத் தெளிய விளக்குகிறது. 'சம்மதம்' 'உண்மை' போன்ற சிறு கதைகள் ஆசிரியரின் மத நல்லினக் கருத்துக்களையும் முற்போக்கு எண்ணங்களையும் வெளியிடுகின்றன.

ஆசிரியர் இறைநெறிச் செல்வர் டாக்டர் நாகு. ஆறுமுகம் அவர்கள் தம்முடைய மேலான பணியைத் தொடர்க! அவர் பணி வெல்க! அவர் தொண்டு சிறக்க! என்று நெஞ்சார வாழ்த்துகிறேன்.

**—கா. ச. கசேந்திரன்**

T. NEELAKANTAN
Secretary, The Asoka Society,
Hony, Magistrate-1957 to 1968,
Member Central Board of Film Censors
Advisory Panel-1967 to 1978.

20, Viswanathapuram Third Street
Kodambakkam, Madras-600024
Tel.No.P.P.835015
19th June 1994

Dear Mr. Nagu Arumugam,

I had the Pleasure of going through your book "Manidha Dharma Thathuvam" in Tamil. It contains very useful information as to how one should Conduct himself in Society. I highly appreciated your advise to the younger generation to Show respect and others. Your latest book in Tamil under the title "Bakthi, Sakthi and Mukthi" Contains Valuable Information on topics like this. I heartly appreciate your references about the importance of Spiritralisor in the ferm of small. Stories with illustrations. I am easily imagine the pains you shouldhave taken to publish a book like this for the benefit of the younger generation. I am anxious that a large number of people, should read this book. I will be happy if yor are encouraged to publish more such books. I wish this book all success.

yours sincerely

T. Neelakantan

# தெய்வத் தமிழ்ச் சங்கம்

(சாய் சக்தி மருத்துவமனை)
நெ. 65, 12-வது மேற்கு குறுக்குச்சாலை
மகாக்கவி பாரதி நகர், சென்னை-600 039.
Ph : 577269

புரவலர் டாக்டர் நா. பாரி
M.B.B.S., F.R.S.H. (இலண்டன்)

## வாழ்த்துரை

உலக வாழ்க்கைக்கு ஒளியூட்டுவது விஞ்ஞானம். ஆன்மீக வாழ்வுக்கு அடிப்படையானது. மெய்ஞ்ஞானம், விஞ்ஞானம் அளவிட்டு ஆய்ந்தறியக்கூடியது, புறக்கருவிகளால் ஆய்ந்து அறியக்கூடியது. ஆனால் மெய்ஞானம் புறக்கருவிகளால் அளக்க இயலாதது.

அகக்கருவிகளால் ஆய்ந்து உணரக் கூடியது, உள்ளத்தால் உணர்வால் மட்டுமே அறிந்து கொள்ள இயல்வது. இந்த விஞ்ஞான மெய்ஞ்ஞான கருத்துகளை இணைத்து 'மனித தர்மதத்துவம்' தந்த டாக்டர் ஆறுமுகம் இப்போது 'பக்தி சக்தி முக்தி' என்னும் நூலினைப் படைத்துள்ளார்.

ஆன்மீக உள்ளம் அனைவர்க்கும் வாய்ப்பது அரிது— அருந்தவப் பயனால் ஆன்மீக உள்ளம் அமையப் பெற்ற நாகு ஆறுமுகம் அவர்கள் தம் உள்ளத்தில் தோன்றும் அரிய தத்துவங் களை ஆற்றல் மிக்க எண்ணங்களை எல்லாரும் அறிந்து பயன் பெறத்தக்க அளவில் நூல் வடிவில் வழங்குவது பாராட்டத்தக்க செயலாகும்.

**இனிய இதயம் பெற்றவர்,**
**என்றும் அன்பே உற்றவர்**
**நலமார் கலைகள் கற்றவர்**
**நாளும் சிறக்கும் நற்றவர்**

நாகு. ஆறுமுகம் நூல் என்றும் வாழ்க!
நலமே எப்பொழுதும் சூழ்க! என வாழ்த்துகிறேன்.

—டாக்டர் நா. பாரி

# LIONS CLUB OF
# MADRAS GANDHI AVENUE

Club No : 044488 Region 11

ZONE III

District + 324—A1

**Ln. T.K. DHIVAKARAN**
President
5/553. East Avenue
Mahakavi Bharathi Nagar. Madras-39
Phone : O : 6423191, R : 577430


திருமிகு. ஆசிரியர்
டாக்டர் நாகு. ஆறுமுகம் அவர்கள்
பக்தி, சக்தி, முக்தி
சென்னை—49.

நிறை அன்புடையீர், நல் வணக்கம்.

தாங்கள் இயக்கி வெளியிட உள்ள பக்தி, சக்தி, முக்தி என்ற நூல் நல்லோர் பலர் போற்றவும், ஆன்மீக அருளாளர்கள் அருளடையவும், அருளுடையோர் முக்தி பெறவும் இந்நூல். சீர்பெற்று விளங்கும் என்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறேன். நூலின் சிறப்பம்சமே, அதன் தலைப்பில் அமையப் பெற்று போற்றுதற்குரியது.

பக்தியிருந்தால்தான் சக்தியுடையவராகவும், பக்தியும் சக்தியும் ஒருங்கிணைந்து இருந்தால்தான் முக்தி அடைய முடியும் என்பதையும் சூசகமாக விளங்க வைத்திருக்கின்றீர்கள்.

தங்கள் சீரிய தொண்டு, செயலாக்கும் முறை, சொல்லப் போகும் கருத்துக்கள், இச்சமுதாயத்திற்குப் பேருதவியாக இருக்கும் என அகமகிழ்கின்றேன்.

தங்கள் நூல் சிறப்புற்று ஓங்கவும், தாங்கள் இப்பூவுலகில் நீண்டநாள் வாழ்ந்து வழிகாட்டிடவும் தங்கள் எழுத்துப்பணி கலைவாணிக்கும் சம்ரக்ஷணம் செய்ய எல்லாம் வல்ல இறை அருளை வேண்டி என் அன்பான வாழ்த்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். நன்றி.

இவண்

**த.கு. திவாகரன்**

*அரிமா சங்கத்தலைவர்*

புலவர்க்கரசன்
புலவர் பொன்னரசன் M. A. BEd.,
தலைவர்-தெய்வத் தமிழ்ச் சங்கம்,
69, மூன்றாவது குறுக்குத் தெரு,
எம். ஆர். நகர், சென்னை-600 051

# வாழ்த்துரை

உடற்பிணி நீக்கும் ஓமியோபதி மருத்துவராக வில்லிவாக்கம் பகுதியில் வெற்றிக்கொடி நாட்டியுள்ள டாக்டர் நாகு. ஆறுமுகம் உளப்பிணி நீக்கும் மருத்துவராகவும் விளங்கித் தம் சிந்தனைச் செல்வங்களைச் செந்தமிழ் நூலாக்கித் தரும் வித்தகர். இவர் காட்சிக்கெளியவர்; கடுஞ்சொல் பேசாதவர்; மாட்சிமிகும் பண்புநலன் வாய்க்கப்பெற்றவர்; அடக்கம் மிகுந்தவர்; ஆன்மீக உணர்வு நிறைந்தவர். இவர் முன்னர் யாத்து வெளியிட்ட 'மனித தர்ம தத்துவம்' என்னும் நூல் நல்லோர் பாராட்டுதலையும் ஞானியர் வாழ்த்துதலையும் பெற்றது. அது போலவே இப்போது வெளியிடும் "பக்தி சக்தி முக்தி" என்னும் நூலும் நல்லோர் இல்லங்களிலும் உள்ளங்களிலும் இடம்பெற்றுச் சிறக்க இறையருளை வேண்டி வாழ்த்துகிறேன்.

அரிய தத்துவங்களையும் எளிதில் விளங்கும் வண்ணம் எடுத்துக் கூறும் ஆற்றல் பெற்ற சிந்தனைத் தென்றல்—செந்தமிழ்ச் செல்வர்-நற்றமிழ்ச் சோலை நாகு. ஆறுமுகம் அவர்கள் முயற்சி வாழ்க! வளர்க! வெல்க! விளங்குக! என வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்
பொன்னரசன்

**இலக்கியச் சுடர்**
**டாக்டர் மூவேந்தர் முத்து**
*துணைத் தலைவர்*
*அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம்*

# பாராட்டுரை

''பக்தி, சக்தி, முக்தி'' என்று தலைப்பிட்டு, பலவிதமான அறிவுரைக் கதைகளை ஆசிரியர் நாகு. ஆறுமுகம் அவர்கள் நமக்கு அளிக்கிறார்.

பக்தி என்பது என்ன, அதன் பலன் யாது, அதனால் பெறும் நன்மைகள் எப்படிப்பட்டவை, நாடும் மக்களும் பக்தியால் பெறும் மாற்றங்கள் என்னென்ன, பக்தியும் மூட வழக்கங் களுக்கு உறைவிடமாக இருக்கக் கூடாது என்பதை இதில் உள்ள கதைகள் நிரூபிக்கின்றன.

சக்தி என்பது என்ன? மனிதர்கள், பிறந்தோம், வளர்ந்தோம் என்று வெறுமனே இராமல், பிறந்ததன் பயனை என்னவென்று உயர்த்தி, உலகுக்குக் காட்டுவதே பிறப்பின் வெளிச்சமாகும்.

எல்லாவற்றுக்கும் சக்தியாக இருக்கும் இறைவனை எண்ணிக் காரியமாற்ற வேண்டும். மேல்நாட்டில் எவ்வளவுதான் அறிவியல் முன்னேற்றம் ஏற்பட்டாலும், அந்தச் சக்திகள், மனிதனின் சக்தியாக இருந்தாலும், அது இறைவன் அளித்ததே என்று பெருமை கொள்கிறான்.

அந்தச் சக்திதான் இன்று உலகை முன்னேற்றப் பாதையில் கொண்டு சென்று வீறு நடை போட வைக்கிறது. சக்தி இல்லை யேல் மனிதன்கூட நடமாட முடியாது. தொழிலுக்கும் மற்ற எல்லாவற்றுக்குமே சக்தி தேவை.

முத்தியால் நாம் பெறும் பயன்கள் யாது? இதையும் நாம் சிந்திக்கவேண்டும். நாம் மறைந்த பிறகு பெறும் பயன் என்று கொள்வதைவிட, இந்த உலகத்துக்கு நம்மால் என்ன பயன் என்று இறுதியில் நினைக்கிறோமே அதுதான் முக்தி.

பிறந்து, வளர்ந்து, இந்த உலகத்தையே கிடுகிடுக்க வைத்தோமே, இப்போது எப்படி இருக்கிறோம் என்று, வாழ்க்கையின் கடைசிப் படியில் நின்று கொண்டு சிந்திக்கின்றோமே, அதுதான், முத்தி. ஒவ்வொருவர் செய்யும் செயலுக்கேற்பவே வாழ்க்கையில் பயன் ஏற்படுகிறது. அதைக் கண்கூடாகவும் காண முடிகிறது. அதனால், முடிந்தவரை பாவம் செய்யாமல் பயனுள்ள பிறவியாக இருக்க வேண்டும் என்று நினைத்து வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவேண்டும்.

இப்படிப்பட்ட அறிவுரைகளைக் கதைகளின் வாயிலாகத் தமிழ் மக்களுக்கு அளிக்கிறார் ஆசிரியர் நண்பர் நாகு ஆறுமுகம் அவர்கள். செய்யும் தொழிலோடு நிற்காமல், மக்கள் நல்வாழ்வு வாழ உடம்புக்கு மருத்துவம் செய்யும் அவர், உள்ளத்துக்கும் அறிவு என்னும் மருந்தையும் அளித்திருக்கிறார்.

தமிழுக்கு எத்தனையோ எழுத்து எண்ணங்களின் வரவுகள். அத்தோடு இந்த ''பக்தி—சக்தி—முக்தி'' நூலும் சேர்ந்து உயர்வை உருவாக்குகிறது.

எந்தத் தொழில் செய்பவராக இருந்தாலும், வியாபாரத்தில் உழல்பவராக இருந்தாலும், பதவியில், பணியில் இருப்பவராக இருந்தாலும், அவர்கள் அனைவருக்கும் இலக்கிய உள்ளம் இருக்க வேண்டும். அப்படி இருக்குமேயானால், மற்றவர்களின் பசி தெரியும். உலகம் புரியும். அதனால் நாடும் மக்களும் நலம் பெறுவர்.

இந்த முயற்சியில் வெற்றி கண்டுள்ள நாகு. ஆறுமுகம் அவர்கள் பெருமைக்குரியவர்—பாராட்டுக்குரியவர்.

வளர்க அவர்தம் எழுத்துப்பணி!

—மூவேந்தர் முத்து

ஜி. சாரதா M. A. MEd.,
தமிழாசிரியை,
அரசினர் மகளிர் மேனிலைப் பள்ளி
சிட்கோ நகர், வில்லிவாக்கம்
சென்னை-600 049

# நகலுரை

திரு. நாகு. ஆறுமுகம் அவர்கள் மிகச் சிறந்த எழுத்தாளர் என்பதற்கு அவருடைய 'மனித தர்ம தத்துவம்' என்ற முதற் படைப்பே சான்றாகும். பக்தி, சக்தி, முக்தி என்னும் இவ்வினிய நூல் இவ்வாசிரியரின் இரண்டாவது படைப்பாகும்.

"இராமனுக்குப் பாலம் கட்ட அணில் மணல் கொண்டு வந்தாற் போல", அவருக்கே உரித்தான சிறந்த மொழி நடைக் கூறுகளைக் கொண்டு எழுதப்பட்ட அன்னாரின் இரு நூல் களுக்கும் "பிழை நீக்கித் தரும்" சிறிய உதவியை என்னால் செய்ய முடிந்ததை எண்ணி மிகவும் பெருமையுறுகிறேன்.

ஆசிரியர் தனது சத்தான மொழி நடையால் முத்து முத்தான கருத்துக்களை இந்நூலிலும் அள்ளி அள்ளி வழங்கியுள்ளார்.

பக்தியையும், சக்தியையும், முக்தியையும் கருப்பொருளாகக் கொண்டு இன்றைய சமுதாயத்தில் வாழும் மனிதர்கள் தீமையை விட்டு நன்மையைக் கடைப்பிடிப்பதற்கு ஏற்ற நற்கருத்துக் களைக் கொண்டு ஒவ்வொரு கதைக்கும் உயிர் ஊட்டியுள்ளார் என்று சொன்னால் அது மிகையாகாது.

கதைக்கொரு நீதியைச் சொல்லி படிப்பவர் பயன்பெறும் உத்தியைக் கையாண்டுள்ளார். மொத்தத்தில் பக்தி, சக்தி, முக்தி இச்சிறுகதைத் தொகுப்பைத் தொட்டுவிட்டால் படித்து முடிக்காமல் கீழே வைப்பதற்கு மனமிராது என்றுதான் சொல்ல வேண்டும். அத்தகைய அருமையான கருத்துக்களைக் கொண்ட இந்நூல் சிறார் முதல் பெரியவர் வரை அனைவருமே படித்துப் பயன் பெறக் கூடிய மிகச் சிறந்த நூலாகும். இக்கதைத் தொகுப்பை நீங்களும் படித்துப் பயனடைய வேண்டாமா?

முதற் படைப்பு ஓர் முத்தான படைப்பு.
இரண்டாம் படைப்பு ஓர் இனிய படைப்பு.
மூன்றாம் படைப்பு மிக விரைவில் வெளிவரவும்,

இன்னும் இவை போன்ற எண்ணிலா படைப்புகள் ஆசிரியர் திரு. நாகு. ஆறுமுகம் அவர்கள் படைத்திடவும் இறையருளை வேண்டுகிறேன்.

—ஜி. சாரதா

டாக்டர் T. A. சிங்காரவேலு, M.B.B.S.,

Govt. Dispensary
T.I. Ambattur
MADRAS-98

பிளாட் எண். 1749
13வது மெயின் ரோடு,
அண்ணாநகர்,
சென்னை-600 040.

# வாழ்த்துரை

தம்பி டாக்டர் நாகு. ஆறுமுகம் அவர்கள் எழுதிய இரண்டாவது படைப்பான ''பக்தி சக்தி முக்தி'' என்னும் தட்டெழுத்து பிரதி நூலைப் படித்துப் பார்த்தேன். இந்த நூலில் மனித வாழ்க்கையில் ஏற்படும் நடைமுறை நிகழ்ச்சி களை, கற்பனை வடிவில் சிறுகதையாக எழுதியுள்ளார். சிறு கதைகள் அத்தனையும் சத்தானது. சமுதாயத்திற்கு வித்தானது. வாழ்க்கை நெறிமுறைக்கு வழிகாட்டுவது. ஒவ்வொரு மனிதனும் படித்து பயன்பெற வேண்டியது.

இந்த நூலில் பக்தி சக்தி முக்தி என்ற தலைப்பில் வரும் விளக்கங்கள் படிப்பவர் மனதிற்கு நிறைவை தரும் என்பதோடு, சில விஞ்ஞான குறிப்புகள் பயன்தரும் என்று நினைக்கின்றேன்.

இவரின் முதல் புத்தகமான 'மனித தர்ம தத்துவன்' என்ற நூலுக்கு அணிந்துரை தரும்போது ''இந்த நூலாசிரியருக்கு ஒளிமயமான எதிர்காலம் உண்டு'' என்று வாழ்த்தினேன். அந்த வாழ்த்து இன்று வெற்றி பெற்றுள்ளது என்பது அவரின் இரண்டாவது படைப்பில் தெரிகிறது.

தம்பி நாகு. ஆறுமுகம் மேலும் மேலும் ஹோமியோபதி மருத்துவ பணியோடு எழுத்துப் பணியும் செய்து உடல் நலத்தோடு வாழ்வு வளத்தையும் பெற இறைவனை வேண்டு கின்றேன்.

**T. A. சிங்காரவேலு**

# ஆசியுரை

## திரு. து. பரமசிவம்

சாய் இண்டஸ்டீஸ் 196 வன்னியர் தெரு, பாடி, சென்னை—50

Phone : 655509

## ஓம் ஸ்ரீ சாய்ராம்

திரு. நாகு. ஆறுமுகம் அவர்கள் பக்தி, சக்தி, முக்தி என்னும் நூலை எழுதியுள்ளார். இந்நூல் அன்னாரின் இரண்டாம் படைப்பாகும். ஏற்கெனவே 'மனித தர்ம தத்துவம்' என்னும் முதல் நூலை எழுதியுள்ளார்கள்.

முதலாவதாக பக்தி, அதற்கு எளிய உதாரணங்களும், உண்மையான பக்திக்கு விளக்கமாக சிறுகதைகள் மூலம் விளக்கி படிப்பவர்கள் உள்ளம் தோயும்படி எழுதியுள்ளார்.

அடுத்து சக்தியைப் பற்றி காலத்தை வீணாக்காமல் தன்னுள் ளிருக்கும் சக்தியைப் பயன்படுத்துதல் பற்றி சிறுகதைகள் மூலம் எளிய நடையில் யாவரும் பின்பற்றும் முறையில் எழுதியுள்ளார்.

கடைசியாக முக்தி; பக்தி முற்றினால் முக்தி என்பர். ஒவ்வொருவரும் அடைய முயல்வது முக்தி. அந்த முக்தி நிலையை அடைய அழகாக சிறுகதைகள் மூலம் பாமர மக்களும் ஆர்வத்துடன் படித்துத் தெளிவு பெறுமாறு வரைந்துள்ளார்கள். மேலும் அவதார புருஷர்கள், மகான்கள், சித்தர்கள், பொன் மொழிகளையும் இதனுள் சேர்த்திருப்பது ஒரு முக்கிய அம்ச மாகும்.

பொதுவில் அன்னாரின் மன எழுச்சி எல்லோரும் ஆன்மிகப் பாதையில் முன்னேற வேண்டும் என்ற நல்லெண்ணத்தைப் பாராட்டுகிறோம்.

மேலும் சில நூல்கள் பலர் பயன் அடைய எழுதும் வாய்ப்பு பகவான் ஸ்ரீ சத்திய சாயி அருள்புரிய வேண்டுகின்றேன்.

**ஜெய் சாய்ராம்**

அன்பன்

**து. பரமசிவம்**

**புயல் சிங்காரவேலு,**
திருவருள் நிலையம்,
நெ. 70, செல்லியம்மன் நகர்,
(ஐ. சி. எப் காலனி அருகில்)
சென்னை-58.

# மதிப்புரை

அன்புள்ள டாக்டர் நாகு. ஆறுமுகம் அவர்களுக்கு, தங்களுடைய "பக்தி—சக்தி—முக்தி" என்கின்ற இரண்டாவது வெளியீட்டு நூலின் தொகுதியில் உள்ள அனைத்துக் கதை கட்டுரைகளை வாசித்துப் பார்த்து என்னுடைய "மதிப்புரை" எழுதி உள்ளேன்.

தாங்கள் ஒரு மருத்துவர் என்கின்ற நிலையில், ஒவ்வொரு கட்டுரை, கதைகளிலும் மருத்துவத்தையும் ஆன்மீகத்தில் அதிக ஈடுபாடு கொண்டிருப்பதால் ஆன்மீகக் கருத்துக்களையும், விஞ்ஞான சம்பந்தப்பட்ட மருத்துவக் குறிப்புக்களையும் இப்புத்தகத்தில் வாரி வழங்கியுள்ளீர்கள்.

எளிய முறையில் "பக்தி"யைச் சித்தரித்து, அந்தப் பக்தியின் வாயிலாகச் "சக்தி"—யைப் பெற்று, அந்தச் "சக்தி"—யின் மூலமே "முக்தி"—யைப் பெறும் மார்கத்தினைச் சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

உங்களது 'காலம்' தொனிக்கிறது. இனி வரும் நூல்களிலும் எழுத்தை இயக்கும் கோர்வையை எதிர்பார்க்கின்றேன்.

"இரைத்த கிணறு ஊறும் என்பதற்கேற்ப"—இனி வரும் அனைத்து நூல்களிலும் கருத்து ஊற்றுக்கள் சுரந்து கொண்டே இருக்கும் என நம்புகின்றேன்.

உங்களுடைய முயற்சிகள் வெற்றியடைய எனது இனிதான வாழ்த்துக்கள். தாங்கள் எழுத்துப்பணியில் சீரும், சிறப்பும் பெற எல்லாம் வல்லவனை உளமார வேண்டுகின்றேன்.

வணக்கம்.

அன்பன்,
**புயல் சிங்காரவேலு,**
சென்னை-58

# பக்தி சக்தி முக்தி

## பக்தி ஒரு விளக்கம்

### பலன் தரும் பக்தி :

**''ஓம் பக்த பதயே நமமோ நம ''**

*பரந்தாமனை நாடும் பக்தி பரமானந்தம் ஆனது.*
*படிப்பை நாடும் பக்தி பட்டத்தைத் தருகிறது.*
*கருமாவை நாடும் பக்தி கர்ம யோகியாகிறது.*
*மடியைத் தேடும் பக்தி கன்றை வளர்க்கிறது.*

*''**தாய்**'' சேய்மீது கொண்ட பக்திக்குப் பெயர் ''**பாசம்.**''*
*''**சேய்**'' தாய்மீது கொண்ட பக்திக்குப் பெயர் ''**நேசம்.**''*
*''**உடல்**'' மீது உயிர் கொண்ட பக்திக்குப் பெயர் ''**உறவு.**''*
*''**உயிர்**'' மீது உடல் கொண்ட பக்திக்குப் பெயர் ''**பிரிவு.**''*

*உயிர் ஜீவானந்தம் ஆகும்போது அது பேரானந்தமாகிறது.*
*பேரானந்தமே வீட்டின் பேரின்பமாகும்.*
*அன்பு, கருணை, பண்பு, பாசம்—இவைகள்*
*பக்திக்கு வழிசொல்லும் வாய்பாடு.*

### பக்தி என்பது என்ன?

*பக்தி என்ற எழுத்தில் வருகின்ற ''ப''—என்பது பஞ்சமமாகும். பஞ்சமம் என்பது குறிஞ்சி அல்லது பாலை நிலத்தில் வாழுகின்றவர்கள் இசைக்கும் ''பண்''—வகையாகும். இதை இளி இசையின் எழுத்து என்றும் கூறலாம்.*

*இளி என்பது சிரிப்பு என்றும், இகழ்ச்சி என்றும் கூறலாம். பிறரை மகிழ்விக்கும் நகையோடு கூடிய எழுத்தே 'ப' — என்பதாகும்.*

'ப'—வுக்கு அடுத்துவரும் 'க'—தமிழில் உயிர் எழுத்தும் முதலெழுத்துமான 'அ'—வும், மெய்யெழுத்தின் முதலெழுத்தான 'க'—வும் சேர்ந்த எழுத்தே 'க'—முடிவெழுத்தாகும். 'அ'—முதல்னௌள என்ற எழுத்துவரை உள்ள எழுத்துக்கள் மொத்தம் 216—(இருநூற்று பதினாறு) ஆகும். இதன் கூட்டுத் தொகை ஒன்பது (9) ஆகும்.

நாம் இன்று நடைமுறையில் பயன்படுத்தும் அரபிய எண்ணில் ஒன்பது (9) எழுதுகின்றபோது 0—பூஜ்யத்தில் ஆரம்பித்து (1)—ஒன்று என்கின்ற நேர்க்கோட்டை கீழ்நோக்கி எழுதுகின்றோம்.

பூஜ்யமான சூனிய மனதிற்குள் அசைவு என்ற உயிர் ஒன்று சேர்ந்தால்தான் உலகம் என்ற ஒன்று உருவாகி இருக்கமுடியும்.

உலகம் என்ற ஒன்று உருவாக பூஜியத்தின் சூத்திரமான சூரியனே மூலக்காரணமாகும். அந்த சூரியனை இயக்கும் சக்தி சூத்திரதாரியான இறைவனே மூலமாகும்.

உலகத்திற்கு உயிராவது பக்தி. பக்தி என்ற ஒன்று இல்லையேல் உலகில் பாசம், உறவு, நேசம் எதுவுமில்லை. பிறப்பு முதல் இறப்புவரை இருந்து வருவது பக்தியேயாகும்.

பக்தியில் வரும் 'தி'—என்பது ஒரு பெண்பால் விகுதியாகும். உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிடத்திலேயும், அல்லது உயிர்களிடத்திலேயும் மூன்று வேறுபாடுகள் உண்டு. ஒன்று ஆண் என்பது; ஆண் தன்மையாவது. ஆரம்பத்திற்கு ஆரம்பமாவது. மற்றொன்று பெண் தன்மையானது. அது உயிர்களின் உற்பத்திக்கு முழுமை சேர்ப்பது. அதுவே எல்லா உறவுக்கும் கருவானது. அதுவே பெண் சாதியாவது. அடுத்து ஆண் தன்மையும் இல்லாமல், பெண் தன்மையும் இல்லாமல் ''அலி'' என்ற அமைப்பைக் கொண்டது. உலகத்தில் இந்த மூன்று தன்மைகள் அல்லது சாதிகளைத் தவிர வேறு சாதிகள் கற்பனையானவை.

தீமைகளை அழித்து, நன்மைகளைச் செய்ய ஆண்டவனை அடைய பக்தி என்பது தோணியாகும்.

பக்தி என்ற'ப'—எழுத்தில் வருகின்ற மகிழ்ச்சியான இயக்கம் சக்தியானது.

'க'—என்ற எழுத்தில் வருகின்ற ஒன்பது சக்திகளையும் இயக்கும் இயக்கமே பிரம்மமானது,

'தி'—என்ற எழுத்தில் வருகின்ற இயக்கத்தின் இலக்குவே திருமகள் தேவியின் திருத்தேவன் (திருமால்) ஆனது.

படைத்தலைச் செய்யும் பிரம்மமான சைவமுடன் சக்தியும்,

காத்தலைச் செய்யும் வைணவமான திருமாலுடன் இலக்குமியும்,

தீமைகளை மறையச் செய்யும் சிவனுடன் பார்வதியும், நமக்குப் பக்தியை மட்டும் சொல்லித் தரவில்லை. வாழ்வின் வகைகளையும், வழிமுறைகளையும் சொல்லித் தரும் பாடங்களாகும்.

## பக்தியின் பார்வை பலவிதமாகும் :

மலரின் மகரந்தம் காற்றைப் பற்றுகிறது, அல்லது வண்டின் கால்களைப் பற்றுகிறது. அது அடுத்த மலரின் கருவைத் தொடுகிறது. அதுவே பிறப்பாகிறது. பிறப்பே மலராகிறது. அந்த மலரே காயாகி, கனியாகிறது. இது சேர்க்கையை நாடுகின்ற பக்தியாகும்.

கருவிலே உருவான ஓங்கார நாதமான பூஜியத்துக்குள்ளே ஒரு இராஜ்ஜியத்துடன் சேர்கின்ற 'கரு' ஒன்பது '9' என்கின்ற வடிவமான விந்தின் உருவே தாயின் கருப்பையை விட்டு வெளி வருகின்றபோது அது ஆறு '6'—என்கின்ற அமைப்பில் தலையை முன்பக்கமாகவும், வால் (கால்) என்கின்ற பகுதியை பின்பக்கமாகவும் கொண்டு வெளியே வருவது இறைவன்பால் இயற்கை கொண்ட பக்தியாகும்.

ஒன்பது மாதங்கள் முழுமையோடு கருப்பையில் குடியிருந்து உருவானது, பத்தாம் மாதம் உலகத்தின் பற்றை, பாசத்தை பற்ற பக்தியோடு வருவதே விதி செய்த வினையின்மீது பக்தி கொண்ட பற்றாகும்.

ஒன்றைப் பற்றி, அதை அழுத்தமாகக் கைப்பற்றி சரணடைவதே பக்தியாகும். கண்களுக்குத் தெரியாத அணுக்களுக்குள்ளே கருவாய் இருப்பதை கண்டுபிடித்து உலகத்திற்கு அளிக்க வல்ல அறிஞனே; அவன் ஆராய்ச்சியின்மீது கொண்ட பக்திக்கு சக்தியாகும்.

கரிக்கின்ற நீரை கார்மேகம் கவர்ந்து உவர்ப்பைப் போக்கி உலகத்தின் உயிரைக் காக்கும் செயலைச் செய்யும் மேகம்

செய்யும் மோகமே இறைவனிபால் இயற்கை கொண்ட பக்தியாகும்.

சுரங்களை மீட்டும் கரங்களைப் பற்றிய கீதமே, நாதனை மயக்கும் பக்தியின் தேனிசை ஊற்றாகும்.

## பக்தியின் செயல் பலவிதமாகும் :

கண்ணப்பநாயனாரின் மூர்க்கமான பக்தி மோக்ஷத்திற்கு முக்தியானது.

கண்ணபிரான்மீது கொண்டபக்தி பாஞ்சாலியின் மானத்தை மட்டுமா மீட்டது! அது பாரதத்தின் மானத்தையே காத்தது.

இராமபிரான்மீது கொண்ட பக்தி வானவர் சேனைத் தலைவனை கடல் தாண்டும் சக்தியைத் தந்தது.

கோவலன் மீது கொண்ட பக்தி கண்ணகியின் கதை ஒரு பெருங்காப்பியமானது.

நீதியின்மீது கொண்ட பக்தி—பாண்டிய நெடுஞ்செழியனை நீதிமானாக்கியது.

தமிழ் அன்னை முப்பாலின்மீது கொண்ட பக்தி உலகத்திற்கு உயிர் நூலானது.

முருகப்பெருமான் மீதுகொண்ட பக்தியே பாம்பன் ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள் ஆறாயிரத்து அறுநூற்று அறுபத்து ஆறு பாடல்கள் தரக் காரணமானது.

## பக்தி ஒன்பது வகையானது :

1. பிறர் கூறக் கேட்டு பக்தி கொள்வது.
2. தானே ஆடிப்பாடி பரவசமாகி பக்தி கொள்வது.
3. தியானித்து பக்தி கொள்வது.
4. உருவத்தைக் கொண்டு பக்தி கொள்வது.
5. உருவத்திற்கு அர்ச்சனை செய்து பக்தி கொள்வது.
6. தலை வணங்கி, கைகூப்பி பக்தி கொள்வது.
7. பணிவிடை செய்து பக்தி கொள்வது.
8. அன்பும், உருக்கமும், ஈடுபாடும் கொண்டு பக்தி கொள்வது.
9. சரணாகதி அடைந்து பக்தி கொள்வது.

## பக்தி யோகம் :

யோகத்திலே கர்மயோகம், ராஜயோகம், ஞானயோகம், பக்தியோகம் என பல வகை உண்டு. இதில் பக்தி யோகமே பரமனைக் காணும் சிறந்த வழியாகும்.

## சித்தர்களின் பக்தி :

தென்பழனியை நோக்கிப் போங்கள்; போகர் பெருமானின் பக்தியின் உயர்வு தெரியும்.

அழகர்மலை ஆண்டவன் அருளில் இராம தேவரின் பக்தி புரியும்.

திருவண்ணாமலையை நோக்கிப் போங்கள், இடைக் காடரின்பக்தி தெரியும்.

சிதம்பரத்தைக் காணும்போது திருமூலரின் பக்தியை அறிய முடியும்.

ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கமான, உலகத்தின் பெரு அரங்கத்தைப் பாருங்கள். அங்கே சட்ட முனியின் பக்தி தெரியும்.

எட்டுக்குடியை நாடுங்கள்; அங்கே வான்மீகரின் பக்தியின் உயர்வு தெரியும்.

மயிலாடுதுறையிலே குதம்பைச் சித்தரின் பக்தியைக் காணுங்கள்.

விருத்தாச்சலம் தேடிப் போங்கள்; அங்கே பாம்பாட்டி சித்தரின் பக்தியின் பரவசம் புரியும்.

திருவாரூர் சென்று பாருங்கள்; கமல முனியின் பக்தியை அறிய முடியும்.

மதுரை மாநகர் செல்லுங்கள். அங்கே சுந்தரானந்தரின் பக்தியை அறிந்து கொள்ள முடியும்.

காசி மாநகரிலே குடி கொண்ட ஆண்டவனின் பக்திக்கு நந்தி தேவரே சாட்சி.

## பக்தி எனும் கவசம் எக்காலத்தும் காக்கும் :

அநேக மனிதர்கள் தங்களுக்குள் துன்பமோ இன்னலோ வரும் பொழுதுதான் கடவுளை நினைக்கின்றனர். ஒருவகையில்

இதுசரிதான். தம்மைப் போலவே துன்பத்திற்கும் துயரத்திற்கும் ஆளாகக் கூடிய பிற மனிதர்களின் உதவியை நாடுவதைவிட தெய்வத்தின் அருளை நாடுவது மேலானதே. ஆனால் துன்பமோ, இன்பமோ, துயரமோ, மகிழ்ச்சியோ. அமைதியோ, போராட்டமோ எந்த நிலையிலும் கடவுளை இடைவிடாது துதித்தல் சாலச் சிறந்தது. மழை பெய்வதற்கு அடையாளம் நிலத்தில் ஈரம் காண்பதே. அதேபோல் பக்தியின் சிறப்பு ஒருவர் பெறும் அமைதியிலேயே காணப்படும். இந்த சாந்தி ஒரு பக்தரை எல்லா நிலைகளிலும் எக்காலத்துக்கும் வெற்றி, தோல்வி, புகழ்ச்சி, இகழ்ச்சி, லாபம், நஷ்டம் போன்ற பாதிப்புகளிலிருந்து காக்கும் ரக்ஷை•(கவசமாக)யாக விளங்கும்.

—பகவான் சாய்பாபா.

## பக்தி அறநூல்கள் :

தெய்வமணி மாலை, இராமலிங்க அடிகளாரின் பக்தியின் தேன் ஊற்றானது கந்தர் கலிவெண்பா குமரகுருபரசுவாமி களின் பக்தி பரவசமூட்டும் அமுத ஊற்றானது திருமங்கையாழ் வாரின் பக்திக்கு சிறிய திருமடலே சாட்சி. அருட்பெருஞ்சோதி தனிப் பெரும் கருணை இராமலிங்க சுவாமிகள் எழுதிய (5818), ஐயாயிரத்து எண்ணூற்று பதினெட்டு பாடல்களும் பக்தியை ஊட்டும் திருவருட்பாக்களாகும்.

வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட இராமாயண இதிகாசம் இருபத்தி நான்காயிரம் (24,000) பாடல்களும் சத்தியத்தை நிலைநாட்ட வந்த பக்தியின் போற்றல்களேயாகும்.

வேத வியாசர் எழுதிய மகாபாரதம் ஒருலட்சம் (1,00,000) பாடல்களும் தர்மத்தின் மீது கொண்ட பக்தியின் பெரும் கருணையேயாகும்.

## பதி, பசு, பாசம்

### பதி-என்பது கடவுள்.

கடவுளின் மீது மனிதன் கொண்ட பக்தியே; அவன் அறிவின் மீது கொண்ட பக்திக்கு சான்று. பசு என்பது உயிர்.

உயிரின் மீது மனிதன் கொண்ட பக்தியே, அவன் துயரத்தின் மீது கொண்ட பக்தியாகும்,

## பாசம்-என்பது மலம்

உறவு மீது மனிதன் கொண்ட பக்தியே பாசமான பிரிவைத் தரும் அழிவாகும்.

பக்தியின் சாரல்களில் நனைந்து, நெஞ்சம் உருகி இருக்கும் நமக்கு, பக்தியின் வேகம் தன்னைக் காண வாழ்க்கையின் சிறு சிறு சம்பவங்கள் என்னும் சிறு கதைகளுக்கு செல்வோம். ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையும் அல்லது ஒவ்வொரு சம்பவமும் கதைகள் தானே.

சஞ்சலப்பட்ட மனம், அடுத்தவனின் சம்பவங்களை நினைத்து ஆறுதல் அடைகிறது அல்லது வேதனைப்படுகிறது. ஆறுதலும் வேதனையும் மழையும், வெய்யிலும் போலானாலும் வெய்யிலில் இளைப்பாற நிழலைத் தேடுகிறது மனம். மழையில் நனையாதிருக்க ஒரு குடையை நாடுகிறது உடல்.

**நாடுவதும், தேடுவதும் ஒன்று**
**பாடுவதும் பரவசமாவதும் மற்றொன்று.**

பாதைகள் வெவ்வேறானாலும் பயணம் ஒன்றுதானே. திசை, கள் வெவ்வேறாயினும் சூரியன் ஒன்றுதானே. வாழ்க்கை ஒன்றா னாலும் சம்பவங்கள் வேறுதானே.

அந்த சம்பவங்களை நாடி, மனதின் மாசுக்களை போக்க நிழலைத் தேடுவோம், நிம்மதியை நாடுவோம்.



# உண்மை பக்தி

அது ஒரு சிறிய கிராமம். கிராமத்தை ஒட்டி ஆறு ஓடிக் கொண்டு இருந்தது. ஆற்றங்கரையின் அருகில் ஒரு அரச மரம். அரச மரத்தின் அடியில் ஒரு பிள்ளையார் கோவில்.

வினை தீர்க்கும் பிள்ளையார் என்று பெயர் பெற்ற அப்பிள்ளையார் கோவில் அருகில், காவி உடை, கழுத்தில் ருத்திராட்சை, முகத்தில் வெண்தாடி தோற்றம் கொண்ட ஒரு சாமியார் தியானம் செய்தபடி இருந்தார்.

அன்று காலை வேளை பிள்ளையார் கோவில் பக்கம் அந்த ஊர் குப்புசாமி சென்று கொண்டு இருந்தார்.

தவம் செய்யும் சாமியாரைப் பார்த்ததும் குப்புசாமிக்கு அவர் அருகில் செல்ல வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது.

சாமியார் தியானத்தில் ஆழ்ந்து இருந்தார். தியானம் செய்து கொண்டிருந்த சாமியாரைச் சுற்றி குப்புசாமி மூன்று முறை வலம் வந்தார். பக்தி மிகுதியால் குப்புசாமி சாமி யாரிடம் மெய்யன்பு கொண்டார். மானசீகமாக சாமியாரின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து எழுந்தார்.

சாமியாரிடம் தெய்வீகத் தன்மை அபரிமிதமாக இருப்ப தாக குப்புசாமி பரிபூரணமாக நம்பினார். உண்மையான தெய் வத்தைக் கண்டது போன்ற எண்ணம் கொண்டார். குப்புசாமி சாமியாரை வணங்கியது சாமியாருக்குத் தெரியாது. சாமியார் கண் விழித்துப் பார்த்த பொழுது குப்புசாமி சாமியாரின் எதிரில் பக்தியோடு நின்று கொண்டு இருந்தார். சாமியார் ''அப்பனே! தாங்கள் யார்? தங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டார். அதற்கு குப்புசாமி ''ஐயா! தங்களுடைய பெரும் கருணை மட்டும் எனக்கு இருந்தால் போதும். தங்களுடைய முகத்தைப் பார்க்கும்போது பேரின்பமாக இருக்கிறது. ஆகவே என் சிறு இல்லத்திற்கு வந்து உணவருந்துமாறு கேட்டுக் கொள் கிறேன்'' என்றார். சாமியார் ''அப்படியே ஆகட்டும்'' என்று கூறி குப்புசாமி வீட்டிற்குச் சென்றார்.

சாமியார் குப்புசாமி வீட்டிற்கு வந்து உணவருந்திய நாளி லிருந்து, குப்புசாமியின் வாழ்க்கையில் செல்வம் கொழித்தது. குடிசை கோபுரமானது.

சில நாட்கள் அவ்வூரில் தங்கியிருந்த சாமியார் வேறு ஊருக்குச் சென்று விட்டார். அதனால் குப்புசாமியின் மனம் வாடியது.

சாமியாரைத் தேடிப் பல ஊர்களுக்கு அலைந்தார். ஒரு நாள் மாலை நேரத்தில் குப்புசாமி காட்டுப் பகுதியில் உள்ள ஒரு மலையடிவாரத்தில் சாமியார் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தார்.

சாமியாரைப் பின் தொடர்ந்து நான்கு முரடர்கள் சென்று கொண்டிருந்தார்கள், குப்புசாமி வேகமாகச் சென்று சாமி யாரின் முன் நின்று அவர் பாதத்தைத் தொட்டு வணங்கி "ஐயா! ஏன் எங்கள் ஊரைவிட்டு வந்து விட்டீர்கள்? நீங்கள் இல்லாமல் என் மனம் வேதனைப்படுகிறது. ஆகவே எங்கள் ஊருக்கு எழுந் தருள வேண்டும்!" என்று குப்புசாமி கூறினார்.

இந்த நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருந்த நான்கு முரடர்களும். குப்புசாமியையும் சாமியாரையும் கேலியும், கிண்டலும் செய்தார்கள். அதைக் கண்ட குப்புசாமிக்கு மனம் கொதித்தது. அந்த நான்கு பேரையும் அடித்து துரத்த முனைந்த குப்புசாமியை சாமியார் தடுத்து "அவர்கள் அறியாமல் செய்கிற தவறை நாம் பொருத்தருள வேண்டும்" அதுதான் மனிதா பிமானம்" என்று கூறி சாமியார் தடுத்தார்.

நான்கு முரடர்களின் ஒருவன் சாமியாரைப் பார்த்து "நீ போலி சாமியா? நிஜ சாமியாரா?" என்றுகேட்டான். குப்புசாமி அவனைப் பார்த்து, "சாமியார் போலியா. நிஜமா என்று நான் நிரூபிக்கிறேன். நீ எந்த சோதனை வைத்தாலும் அதை நான் நிரூபிக்கிறேன். அதில் என் உயிர் போனாலும் பரவா யில்லை" என்று கூறினார்.

அந்த நான்கு முரடர்களும் தங்களுக்குள் ஏதேதோ பேசி தென்னை மரம் வைக்க குழிகள் தோண்டியுள்ள பகுதிக்கு இவர் களை அழைத்துச் சென்றார்கள். முரடர்களில் ஒருவன் குழிக்கு அருகிலிருந்த மண்வெட்டியை எடுத்து குழியை இன்னும் ஆழமாக வெட்டினான். மற்றொருவன் சாமியாரைப் பார்த்து "நீங்கள் உண்மையான சாமியாராக இருந்தால் இந்தக் குழியில் இறங்குங்கள். குழியின் மேல் ஓலைகளை வைத்து மண்ணால் மூடிவிடுவோம். அரை மணி நேரம் கழித்து குழியைத் தோண்டும் போது நீங்கள் உயிருடன் இருந்தால் நீங்கள் உண்மை சாமியார்" என்று கூறினான்., அதற்கு சாமியார் என்ன செய்வு

தென்று தெரியாமல் முகம் வெளுக்க, உடல் நடுங்க, குப்புசாமியைப் பார்த்தார்.

குப்புசாமி சாமியாருக்கு வைத்த சோதனையைத் தான் ஏற்றுக் கொள்வதாக கூறி குழியினுள் இறங்கினார். சாமியாரின் உள் மனம் நடுங்கியது. தன் பக்தனின் உயிர் என்ன ஆகுமோ என்று மனம் கலங்கியது.

குப்புசாமியைக் குழியில் வைத்து மூடினார்கள். அரைமணி நேரம் கழித்து தோண்டிப் பார்த்தார்கள். குப்புசாமி குழியில் ஆழ்ந்த தியானத்தில் இருந்தார். எந்த ஒரு பாதிப்பும் இல்லாமல் தியானத்தில் இருந்து வெளியே வந்தார்.

அவரைக் கண்ட நான்கு முரடர்களுக்கும், சாமியாருக்கும் ஆச்சரியமானது. அவர்கள் குப்புசாமியின் கால்களில் விழுந்து வணங்க முற்பட்டபோது, குப்புசாமி ''என்னை வணங்குவது தவறு; எனக்கு முழுசக்தியையும், பலத்தையும் கொடுத்தது நான் சாமியாரின் மீது வைத்திருந்த பக்தியும், நம்பிக்கையும் தான். சாமியாரே உலகத்தின் தீர்க்கதரிசி என்று கூறி சாமி யாரின் கால்களில் விழுந்து பக்தியோடு வணங்க முற்பட்டபோது அந்த நான்கு முரடர்களும் சாமியாரின் காலில் விழுந்து சாஷ்டாங்கமாக வணங்கினார்கள்.

சாமியாரின் சக்தி குப்புசாமி போன்ற உண்மையான பக்தர் களின் பக்தியில்தான் உள்ளது என்பதை சாமியார் அறிந்துக் கொண்டார்.

சாமியாரின் கண்களுக்கு குப்புசாமி ஒரு ''**மகான்**'' போல வும், குப்புசாமியின் கண்களுக்கு சாமியார் ''**தேவதை**'' போல வும் தோற்றம் கண்டனர்.



# தெய்வ பக்தி

வேலுசாமி என்கின்ற அச்சு எழுத்து கோர்க்கும் தொழிலாளி ஒரு ஊரில் வாழ்ந்து வந்தார். அவருக்கு மனைவியும், ஒரு மகனும் உண்டு. அதிக தெய்வ நம்பிக்கை கொண்ட அவருக்கு சோதனை மேல் சோதனை ஏற்பட்டது.

நன்றாக வாழ்ந்து வந்த அவர் மனைவிக்கு திடீரென்று மன வியாதி ஏற்பட்டு, உடலும், உள்ளமும் சோர்ந்து ஒரே இடத்தில் அமர்ந்து இருப்பார், அல்லது படுத்து இருப்பார்.

எத்தனையோ வைத்தியம் பார்த்தும் மனைவி குணம் அடைவதாகத் தெரியவில்லை. கடைசியில் ஆண்டவன் விட்ட வழி என்று விட்டு விட்டார்.

மனைவியின் நிலை இப்படி என்றால், தன் ஒரே மகனின் வாழ்க்கையுமா பாதிக்கப்பட வேண்டும்? திருமணம் செய்து வைத்த நாளிலிருந்து இருவருக்கும் மனம் ஒத்துப் போகாததால் எலியும், பூனையுமாக இருந்து வந்தார்கள்.

திடீரென்று ஒரு நாள் அவர் மருமகள் தன் தாய் வீட்டிலிருந்து எடுத்து வந்த எல்லா பொருள்களையும் எடுத்துக் கொண்டு தாய் வீடு புறப்பட ஆய்த்தமானாள். ஏன் அப்படி செய்கின்றாய்? என்று அவர் கேட்டதற்கு ''வேலை வெட்டி இல்லாமல் உன் மகனுடன் வாழ்வதை விட, ஒரு பாழும் கிணத்தில் விழுந்து சாகலாமே'' என்றாள்.

மனம் நொந்து போன வேலுசாமி இறைவன் சன்னதியை நோக்கிப் போனார். இந்த நிலை வேறு யாருக்கும் ஏற்பட வேண்டாம் என்று ஆண்டவனை வேண்டிக் கொண்டார்.

வாழ்க்கையே இருண்டு விட்டதாக வெளி மனம் நினைத்தாலும், அவரின் உள்மனம் இறைவனின் ஞான ஒளியைப் பெற்று பிரகாசமாகவே இருந்தது.

தன் வேலை நேரம் போக, மற்ற நேரத்தில் கோவிலுக்கு செல்வது, அர்ச்சனை செய்வது, தியானத்தில் ஆழ்ந்து இருப்பது அவரின் நடைமுறை பழக்கமானது.

வேலைதேடி அலையும் மகன் ஒரு பக்கம். சுயநினைவு இன்றி இருக்கும் மனைவி ஒரு பக்கம். அக்கம், பக்கத்து வீட்டுக் காரர்கள், தன் சுற்றத்தாரின் கேலியும், கிண்டலும் ஒரு பக்கம் ஆனால் இவரின் மனமோ இறைவன் பக்கம்.

வேலுசாமி ஒரு நாள் தான் பிறந்த ஊரான தாம்பரம் அடுத்த மஞ்சரிக்கு சென்றுக் கொண்டிருந்த போது, யாரோ கூப்பிடும் சத்தம் கேட்டு திரும்பி பார்த்தார். யாரும் அங்கு இல்லை. எனவே தொடர்ந்து செல்ல முற்பட்டபோது ஒரு சிறுவன் மிக வேகமாக ஓடி வந்து துணிப்பையில் உள்ள ஒரு மூட்டையை அவரிடம் கொடுத்து விட்டு வேகமாகச் சென்று விட்டான். வேலுசாமிக்கு என்ன செய்வதென்றே தெரியா வில்லை. பிறகு அந்த துணி மூட்டையைப் பிரித்து பார்த்தார். அதில் அவர் எந்த நேரமும் நினைத்துக் கொண்டிருக்கும் முருகப் பெருமானுடன் வள்ளி, தெய்வயானையுள்ள பஞ்சலோக சிலை யாகும்.

''குழந்தை உருவில் வந்தது அந்த முருகப் பெருமான்தான். இந்த ஊர் உலகத்திற்கு அருள்பாலிக்க கந்தவேலே இங்கு வந்து காட்சி தந்து கோவில் எழுப்ப ஆணை தந்துள்ளார்.'' என அவர் மனம் எண்ணியபோது அந்த ஊர் பஞ்சாயத்து தலைவர் பொன்னம்பலம் அங்கு வந்து, நடந்ததை அறிந்து, அங்கேயே திருக்கோவில் கட்ட ஊர் பஞ்சாயத்தைக் கூட்டி முடி வெடுப்பதென கூறி சென்றார்.

மறுநாள் அங்கு ஊர் பஞ்சாயத்து கூடியது. கோவில் கட்டு வதென முடிவெடுத்து, அந்த கோவிலின் முழு பொறுப்பையும் வேலுசாமியிடமே ஒப்படைத்தது. மேலும் தங்கள் உழைப்பை யும், உதவியையும் தருவதாகக் கூறியது. ஒரு நல்ல நாளில் பார்த்து திருக்கோவில் கட்டும் பணி சிறப்புடன் நடைப் பெற்றது.

தன் உடலில் உயிர் இருப்பதற்காக உணவு, உழைப் பிலே உயிர் வாழ்ந்துக் கொண்டிருக்கும் தன் மனைவி மகன். இப் பிறவி எடுத்த பெரும் பயனைப் பெறுவதற்காக இறைவன் திருப்பணி வேலுச்சாமியின் வாழ்க்கைச் சக்கரம் சுழன்று கொண்டே இருந்தது. வேதனைகளுக்கிடையே ஒரு சாதனை யுடன், பள்ளி படிப்பு படித்துக் கொண்டு இருந்த காலத்தில், தன் தந்தையாரின் நாத்திக வாடையின் காற்றைச் சுவாசித்து அதனால் கடவுளை நினைப்பவன் சுபோதி, கடவுளே இல்லை

என்று நினைத்து செயல்பட்டதையும், வீண் பேச்சுப் பேசிப் பேசி காலத்தையும், கடவுளின் பெருமைகளையும் அறியாமல் போனதையும் நினைத்து வேலுசாமி வருந்திய நாட்கள் ஏராளம்.

காய்க்கின்ற மரத்திற்குத் தானே கல் அடி அதிகம். சூடுபட்டு சுத்தியில் அடிபட்ட தங்கம் தானே கையிலும், கழுத்திலும் மின்னுகிறது. அது போல் சோதனையே வேலுசாமியின் வாழ்க்கையானது.

மஞ்சரியை விட்டு சென்னைக்கு வந்த வேலுசாமி, அச்சகத்திற்கு சென்று மாலையில் வீடு திருப்பியபோது, தன் மனைவி மனநிலை அதிகம் பாதிக்கப்பட்டு சுவரில் மோதிக் கொண்டதில் வீடு முழுவதும் இரத்தமாகக் காட்சி அளித்தது. வெளியில் சென்ற மகனையும் காணவில்லை. அக்கம், பக்கம் இருந்தவர்களை அழைத்துக் கொண்டு மருத்துவமனைக்குச் சென்று மனைவியை மருத்துவமனையில் சேர்த்தார்.

தாய்வீடு சென்ற மருமகளைக் கண்டு பேசி, மகனையும், மருமகளையும் சேர்க்க எண்ணி அவர்கள் வீடு சென்றபோது அங்கே தன் மகனுக்கும், அவர் மாமியார் வீட்டிற்கும் ஒரு யுத்த (கள)மே நடந்து கொண்டு இருந்தது.

''பாசம், பந்தம், உறவு என்பதெல்லாம் உள்ளத்தின் அன்பினால் ஏற்பட வேண்டுமே தவிர பிறர் உபதேசத்தால் உண்டாகாது'' என எண்ணிய வேலுசாமி அங்கிருந்து புறப்பட்டு தன் வீட்டிற்கு வந்தார்.

தன் வருகைக்காகக் காத்திருந்த மஞ்சரியின் ஊர் பஞ்சாயத்து தலைவர் பொன்னம்பலமும், மற்றும் சிலரும் தன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து இருந்ததைக் கண்டார்.

''ஐயா, நாங்கள் தங்கள் மூலம் திருக்கோவில் கட்ட ஊரில் ரூபாய் ஒரு லட்சம் வரை வசூலித்து வைத்திருக்கின்றோம். நீங்கள் உடனே புறப்பட்டு நம் ஊருக்கு வந்து திருப்பணியைத் தொடங்க வேண்டும்'' என கூறி முடித்தார் பொன்னம்பலம்.

மருத்துவமனையில் இருக்கும் மனைவியைப் பார்ப்பதா? வாழாத மருமகளைத் தேடிச் சென்ற மகனைப் பற்றிச் சிந்திப்பதா? தனக்கும், தன்னை நம்பி இருக்கும் இரண்டு ஜீவன்களுக்காக உழைக்காமல் இவர்கள் பின் செல்வதா? என எண்ணிய வேலுச்சாமியின் மனம் சட்டென இவர்கள் பின் சென்று திருப்பணியைத் தொடங்குவதே சிறந்தது என முடிவெடுத்து, அன்றே அவர்களுடன் சென்றார், வேலுச்சாமி.

மனைவி, மகன் இருவரையும் அழைத்துக் கொண்டு தன் சொந்த ஊரான மஞ்சரி கோவிலிலேயே சில காலம் தங்கினார் வேலுசாமி.

பார்க்கும் இடமெல்லாம் முருகன் தோற்றம். கேட்கும் ஓசையெல்லாம் அவன் நாதம். உடையோ காவி உடை, தாடியோ வெள்ளி இழை, பார்வையோ, ஞானப் பார்வை, உடலோ தள்ளாட்டம், மனமோ தேரோட்டம்.

திருக்கோவில் கட்டும் திருப்பணி மிக விரைவாக நடந்தேறியது. கும்பாபிஷேகம் நடத்த வேண்டியது தான் பாக்கி.

ஓங்கார நாதம் உலகெங்கும் கேட்க மந்திர ஒலிகள் விண்ணில் மிதந்து வர, அபிஷேக ஆராதனை நடந்து கொண்டிருந்த போது வேலுசாமி கும்பாபிஷேக வேலைகளைக் கவனித்துக் கொண்டு இருந்தார். அப்பொழுது அவர் கண்கள் இருள் அடைய, காது மந்தப்பட, தலை சுற்ற அங்கு உள்ள தூணைப் பற்றி அப்படியே சாய்ந்து உட்கார்ந்தார் வேலுசாமி.

''உன் வாழ்க்கையில் ஏற்பட்ட சோதனைக்கெல்லாம் யான் மட்டும் காரணம் அல்ல. முன் செய்த வினைப்பயனை அனுபவிக்கவும், இப்பிறப்பில் நீர் செய்த, நீர் எண்ணிய நல்ல எண்ணங்களும் உம்மை எம் திருப்பணிக்கு உட்படுத்திக் கொண்டோம். இந்த உலகத்தில் மனிதன் அனுபவிக்கும் செயல்கள் அனைத்தும் அவன் மனதின் சக்தியால் நடைபெறுகிறது. அது நல்லதாக இருந்தால் மட்டுமே யான் துணை நிற்பேன். தீயதாக இருந்தால், தீயதை மாற்றி அமைக்க பல சோதனைகளையும், நல்லதிற்கு பல வேதனைகளையும் யாம் செய்து பரிசோதிப்போம். நல்ல செயல்கள் இன்பத்தையும், தீய செயல்கள் துன்பத்தையும் தருவது இயற்கையின் நியதி.

தர்மத்தையும், நியாயத்தையும் நிலை நாட்டவே, யாம் உண்மையான பக்தர்களின் பணியின் மூலம் திருக்கோவில்களாக காட்சி தருகின்றோம். உனக்கு ஏற்பட்ட சோதனைகள் இனி விலகும் காலம் வந்து விட்டதால், இனி உன் மனைவி, மகன் வாழ்க்கை ஒளி பெறும்.

சோதனைகள் பல கண்டு நீ தளராததால் எனக்குத் தொண்டு செய்ய உம்மை யான் தேர்ந்தெடுத்தேன். மேலும் நீ முன் ஜென்மத்தில் பல புண்ணிய நலன்கள் செய்துள்ளதால் நீ என் பணியைச் செய்து கொண்டே உன் இல்லப் பணியையும்

செய்யலாம் என்று ஒளிமயமான அருட்பெரும் ஜோதியான, தனிப் பெரும் கருணையான முருகப் பெருமான் அவர் நினைவில் தோன்றிக் காட்சி தந்தார்.

கண் விழித்து பார்த்த வேலுசாமிக்கு அதிர்ச்சியும், ஆனந்த மும் ஆனது. ஆம்! அவர் மனைவி, மகன், மருமகள் ஆகியமூவரும் திருமுருகப் பெருமானை வலம் வந்து கொண்டு இருந்தார்கள்.

''கும்பாபிஷேகம் வேலை ஆயிரம் இருக்கு; நீங்கள் இங்கு உட்கார்ந்து என்ன செய்து கொண்டு இருக்கின்றீர்கள்''—என் றார் அவர் மனைவி.

''மாமா, நான் செய்ததெல்லாம் தவறு; வீண் கற்பனைகளை மனதில் வளர்த்து, என் வீட்டுக்காரரைப் பிரிந்தது தவறுதான். இனி அப்படி செய்ய மாட்டேன்''—என்று கூறி மருமகள் அவர் கால்களில் விழுந்து வணங்கினாள்.

''அப்பா, நானும் பொறுப்பான முறையில் நடக்காமல், கிடைக்கும் வேலையை ஒழுங்காக உறுதியாகச் செய்யாமல், ஊர் சுற்றி வந்தது தவறு; வயதான உங்களையே நம்பி வாழ்ந்தது, அதை விட தவறு, எனவே என்னை மன்னியுங்கள். இனி கிடைக்கும் வேலையை ஒழுங்காகச் செய்து நம் குடும்பத்திற்கும், இந்த உலகத்திற்கும் நன்மை செய்வேன்'' என்று கூறி, அவரின் பாதங்களில் விழுந்தான். எல்லாமே அந்த முருகப் பெருமானின் திருவிளையாடல்கள்தான்.



# மெய் பொய்

ஒரு ஊரிலிருந்து இரண்டு வாலிபர்கள் வேலை தேடி, அடுத்த ஊரை நோக்கிச் சென்று கொண்டு இருந்தார்கள். அவர் களில் ஒருவன் பெயர் மெய்யப்பன். மற்றொருவன் அரிச்சந்திரன்.

"சொந்த ஊரில் பிழைக்கத் தெரியாத இவர்கள், அசலூருக் குச் சென்று எதைச் சாதிக்கப் போகிறார்கள் என்று ஏசிய தன் சொந்தக்காரர்கள், நண்பர்கள் முகத்தில் கரியைப் பூச வேண்டும். எப்படியும் பெரிய செல்வந்தனாக இவ்வூருக்கு வர வேண்டும்" என்ற எண்ணத்தில் புறப்பட்டாலும், இவர்கள் பெயருக்கு ஏற்றாற்போல் உள்ளத்தில் உண்மை இல்லை. உழைப்பில் உறுதி இல்லை.

மெய்யப்பனும், அரிச்சந்திரனும் பேசுவதெல்லாம் பொய் யானவைகளே, செய்வதெல்லாம் ஏமாற்று வேலைகளே.

கடும் வெய்யிலில் நடந்து கொண்டு இருந்த அவர்களுக்கு தண்ணீர்த்தாகமும், பசியும் எடுத்தது. அவர்கள் சென்று கொண் டிருந்த பாதைக்கு அப்பால் ஒரு சிறு குளமும், குளத்தின் அருகில் ஒரு பெரிய புளியமரமும் தென்பட்டது.

அந்த இருவரும் குளத்தில் இறங்கி நீர் பருகினார்கள். பின் கரைக்கு வந்து புளிய மரத்தின் நிழலில் ஓய்வு எடுத்துக் கொண் டிருந்த போது மெய்யப்பனுக்கு திடீரென்று ஒரு ஞானோதயம் ஏற்பட்டது. உடனே அரிச்சந்திரன் காதில் ஏதோ கிசு கிசுத் தான். "அதற்கு அது தான் சரியான வழி" என்றான்.

அந்த வழியாக வந்து கொண்டிந்த வழிப்போக்கனிடம், அரிச்சந்திரன் "ஐயா! அந்த மரத்தடியில் அமர்ந்திருக்கும் அவர் மிக சாதாரணமானவரில்லை. அவர் தாடி வைக்காத பெரிய மகான். கமண்டலம் இல்லாத ஞானி, உத்திராட்சை இல்லாத யோகி, அவர் காவி அணியாத சன்னியாசி, அவர்

குளத்திலிருந்து தரும் நீரும், புளியமரத்திலிருந்து தரும் காய் களும் மிக சக்தி வாய்ந்தது. முன்பு அவர் எனக்குக் கொடுத்த மாந்திரிக நீரும், புளியங்காய்களும் எனக்கு நீண்ட ஆயுளையும், பல லட்சம் சொத்துக்களையும் கொடுத்தது. அந்த மகானைத் தரிசிக்க நான் இப்பொழுது இங்கு வந்தேன். நீங்கள் அவரைத் தரிசித்து ஆசிர்வாதம் பெற்று நீரையும், புளியங்காய்களையும் பெற்றுச் செல்லுங்கள்'' என்று மெய்யப்பனைக் காட்டிக் கூறி முடித்தான்.

வழிப்போக்கன் அவன் கூறியதை அப்படியே நம்பினான். அவ்விதமே பயபக்தியுடன் மெய்யப்பனிடம் சென்று நீரையும், புளியங்காய்களையும்பெற்று,காணிக்கையாகக் காசும் கொடுத்து விட்டுச் சென்றான். வழிப்போக்கன் சென்று கொண்டிருந்த போது, எப்பொழுதோ காணாமல் போன அவன் காளை மாடுகள் அந்த வழியில் மேய்ந்து கொண்டிருந்தது. வழிப் போக்கனுக்குக் காலும் புரியவில்லை; தலையும் தெரியவில்லை. தன் மாடுகள் பல வருடங்களுக்கு முன் காணாமல் போனது, இனி கிடைக்காது, இருந்தாலும் தேடிப் பார்ப்போம், என எண்ணித் தேடிவர அங்கு புளியமரத்து மகானின் அருளால் மாடுகள் கிடைத்தது என மனப்பூர்வமாக நம்பினான்.

இந்தச் செய்தியை அவன் சொந்த ஊர், அக்கம் பக்கத்து ஊர்களுக்குத் தெரிவித்தான். இச்செய்தி காட்டுத் தீ போல ஊர் முழுக்கப் பரவியது.

மறுநாளிலிருந்து புளியமரத்தருகே பெரும் கூட்டம் கூடி விட்டது மகானைத் தரிசிக்க. கூட்டத்தைக் கட்டுப்படுத்தவரிசை வாரியாக விடப்பட்டது. வரிசையில் செல்பவர்கள் ஐந்து ரூபாய், பத்து ரூபாய், டிக்கட் வாங்கித்தான் தரிசிக்க முடியும் என்ற நிலை ஏற்பட்டு விட்டது.

நாட்களும் சென்றன. வெய்யிலும் அதிகமாக, குளத்தின் நீரும் வற்றியது. புளியங்காய்களும் பறித்துத் தீர்ந்து போனது.

மெய்யப்பன் இப்பொழுது மாமுனியாகி விட்டான். அரிச் சந்திரன் அவருக்கு சிஷ்யராகி விட்டான். மூட்டை, மூட்டை யாகப் பணம் சேர்ந்த இவர்களுக்குச் சிலகாலம் ஓய்வு எடுக்க எண்ணமும், குளத்தில் நீர் வற்றியதாலும், புளியமரத்தில் காய்கள் தீர்ந்ததாலும், தன் சுற்றத்தாரைக் காண வேண்டும், தன் பெருமைகளையும், புகழையும் சொல்ல வேண்டும் என்றும் தோன்றியது. அவர்கள், தங்களைத் தரிசிக்க வரும் பக்தர் களுக்கும் சில பொய்யான காரணங்களைக் கூறிவிட்டு, பணத்தையும் தங்க நகைகளையும் எடுத்துக் கொண்டு புறப்

பட்டார்கள். அவர்களின் பக்தர்கள் அவர்களுக்கு ஊர் எல்லை வரை வழித் துணையாக வந்து வழியும் அனுப்பி வைத்தார்கள்.

மற்றவர்களை நம்பாத இவர்கள் தங்களுக்குத் துணையாக யாரையும் அழைத்து வரவில்லை.

பல மைல் தூரம் நடந்து வந்த அவர்களுக்குக் கால்கள் வலித்தது. உடல் சோர்ந்தது. ஆகவே தங்களுக்குப் பாதுகாப்பாக இருக்கும் பொருட்டு, அந்த ஊரில் உள்ள தர்மகர்த்தா பரமசிவம் கட்டிய சத்திரத்தில் தங்கினார்கள்.

இவர்கள் தங்கி இருந்த பகுதிக்கு அப்பால் ஒரு சாது படுத்து இருந்தார். அவர் இவர்களைப் பார்த்து, ''தம்பிகளா! எங்கு இருந்து வருகின்றீர்கள், மூட்டையில் என்ன வைத்திருக்கின்றீர்கள்'' என்று கேட்டார்.

''வேறு ஒன்றுமில்லை, ஒரு மூட்டையில் புளியங்காய்களும், மறு மூட்டையில் தாகத்திற்கு நீர் அருந்த நீர்க் குவளையும் மட்டுமே உண்டு'' என்று கூறி முடித்தனர்.

அன்று விடியற்காலை ஐந்து மணிக்கு சத்திரத்தில் பரப்பரப்பான ஓசை கேட்டு இருவரும் எழுந்து, தங்கள் மூட்டைகளைச் சரிபார்த்தனர். அப்பொழுது பத்துப் பதினைந்து ஊர்க்காவலர்கள் இந்த இருவரையும் சூழ்ந்து நின்று, ''மூட்டைகளில் என்னவைத்திருக்கின்றீர்கள்? நீங்கள் எந்த ஊர்? இந்த ஊரின் தர்மகர்த்தா பரமசிவம் வீட்டில் பல லட்சம் நகைகளும் ரூபாயும் திருடு போய் விட்டது. உங்கள் மூட்டைகளைத் திறந்து காட்டுங்கள்'' என்று கூறி மூட்டைகளைப் பிடுங்கிப் பிரித்துப் பார்த்தார்கள்.

இவர்கள் மூட்டையில் நகைகளும், ரூபாயும் இருந்ததால் இருவரையும் பிடித்து ஊர் பஞ்சாயத்துத் தலைவரின் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். இவர்கள் ஊர்மக்களை ஏமாற்றிச் சேர்த்ததைச் சொல்லியும் பார்த்தார்கள். புளியங்காய்களையும், தண்ணீரையும் கொடுத்து இவ்வளவு செல்வம் சேர்த்து இருக்க முடியாது என அவர்கள் நம்பியதால் இந்த இருவரையும் அங்கு உள்ள பஞ்சாயத்து பொது மரத்தில் கட்டி சவுக்கால் அடி, அடியென்று பலமாக அடித்தார்கள். அவர்கள் அடித்த ஒவ்வொரு அடியும் அவர்களின் உடம்பில் புளியங்காய் தோற்றமாக வீங்கியது.

வெய்யில் ஏற ஏற இவர்களின் உடம்பிலிருந்து வேர்வையும், அடித்த அடியிலிருந்து கெட்ட நீரும் ஆறாய் வெளியே வந்தது.

உண்மையில் அவர்கள் திருடாவிட்டாலும், பொய்களை விற்று மூட்டையாகச் சேர்த்த பணமும், நகையும் போய், இன்று

புளியங்காயை நினைவுபடுத்தும் தழும்புகளைச் சுமந்து கொண்டு அந்த ஊரைவிட்டு வரும் போது, தர்ம சத்திரத்தில் கண்ட சாது இவர்களை நோக்கி வந்துகொண்டு இருந்தார்.

''ஐயா, எங்களை மன்னியுங்கள். பொய்கள் சபைக்கு வராது என்பதை இருவரும் இப்பொழுது உணர்ந்து திருந்தி விட்டோம். எங்களுக்கு நல் அருளும் நல் ஆசியும் வழங்க வேண்டும்'' என்று கூறினார்கள்.

''திருடி, பொய்பேசி, கோடி சேர்த்தாலும் உண்மையோடு, கடின உழைப்போடு வரும் ஒரு சில காசே உன்னுடன் வரும். அன்று சத்திரத்திலே படுத்திருந்தபோது உங்களுடன் இருந்தது நான்தான். அந்த சத்திரத்தையும், கட்டிய பரமசிவமும் நான் தான்'' என்றார் மாறு வேடத்தில் இருந்த பரமசிவம்.

''கோடி கோடியாகச் சொத்து வைத்திருந்தாலும் மனதிற்கு அமைதியும் ஆனந்தத்தையும் தருவது தர்மகாரியங்களே ஆகும். ஆகவேதான் ''நான்'' என்ற அகந்தையை விட கோவில், குளம், தர்மசத்திரம், பள்ளிக்கூடம் பல கட்டி அதை பராமரிக்கும் பொறுப்பையும் நானே ஏற்று அன்று உங்களுடன் நான் தங்கினேன்'' என்று கூறி முடித்தார் சாது பரமசிவம்.

''ஐயா, இனி நாங்கள் உத்தமர்களாக வாழ்வோம். அதற்கு நீங்கள் எங்களுக்கு ஒரு தொழில் தந்து உதவ வேண்டும்.''

''அப்படியே ஆகட்டும்'' என்றார் தர்மசீலர் பரமசிவம்.

''மெய் பொய்யாகலாம், ஆனால் பொய் என்றும் மெய்யாகாது''

> **''சிலரை சிலகாலம் ஏமாற்றலாம்**
> **பலரைப் பலகாலம் ஏமாற்றலாம்**
> **ஆனால், எந்நாளும் ஒருவரையும்**
> **ஏமாற்ற முடியாது.''**



# திரும்பிப் பார்

''டொக், டொக், டொக், யாருங்க வீட்டிலே, வைத்தியர் ஐயா இருக்காங்களா?''

''காலை நேரத்திலே பெரிய தொல்லையா போச்சு. நேரம், காலம் இல்லாம யாரோ கதவை தட்றாங்க'' என்று மனம் சலித்துக் கொண்டு, தூக்கக் கலக்கத்தில் எழுந்து கதவைத் திறந்தாள், வைத்தியர் வேதாசலத்தின் மனைவி பூங்கொடி.

''ஓ பரம்பரை வைத்தியர் வைத்தியலிங்கத்தின் மகன் வைத்தியநாதன்தானே நீங்க?''—மறுபடியும் பூங்கொடி.

வயிற்றைக் கையில் பிடித்துக் கொண்டு, கேள்விக் குறி போல் வளைந்து, நெளிந்து நெட்டையான உருவமான, பரம்பரை வைத்தியத்தில் முழுகி வந்த சாட்சாத் வைத்தியநாதனேதான் அன்றி, வேறு யாருமில்லை, கதவைத் தட்டியது.

பத்துப் பதினைந்து குக்கிராமங்களுக்கு சிறுவஞ்சிபட்டி வைத்திய குடும்பமே வைத்தியத்திற்குப் பேர்போன குடும்பமாய் இருந்தது. ஆனால் இன்றோ பக்கத்து ஊரிலிருந்து வந்த வேதாசலமே வைத்தியத்திற்குப் பேர் போனவர் என்று பெயர் எடுத்தார்.

இவர் சித்த வைத்தியம், ஹோமியோபதி, ஆயுர்வேதம், இயற்கை மருத்துவம் இன்னும் பல மருத்துவங்களை விட்டு வைப்பதில்லை. ஆனால் ஆங்கில மருந்தை மட்டும் தொடுவதில்லை.

வைத்தியர் வேதாசலம், மருந்தைக் காசு ஆக்குவதை விட, தன் வாய் சாமர்த்தியத்திலேயே பணம் குவித்தார்.

''இது தேறாது'' என்று கைவிட்ட கேஸ்களைத் தைரியமாக எடுத்து வைத்தியம் செய்வதிலே வல்லவர்.

அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் இவரைப் பற்றிப் பொறாமைப் பட்டாலும், அசலூர்க்காரர்கள் இவரைப் பாராட்டவே செய் தனர். டவுனில் உள்ள சிந்தாமணி நர்சிங் ஹோம் கூட இவரின் புகழில் செவி சாய்த்ததுண்டு. அப்படி இருக்க, இங்கு பரம்பரை வைத்தியர் வந்துதானே தீர வேண்டும்.

"நீ பரம்பரை வைத்தியரா? ஏது இந்தப் பக்கம்? நான் இந்த ஊரில் வைத்தியம் செய்ய ஆரம்பித்தபோது எனக்கு எதிராகக் கொடி பிடித்தவர் அல்லவா? பல வைத்தியம் செய்யும் என்னிடமா உங்கள் பரம்பரை வைத்தியம் ஜெயிக்கும். என்றாவது ஒரு நாள் நீர் என்னிடம் வந்தே தீர வேண்டும் என்று நான் நினைத்தது எவ்வளவு உண்மையானது." இது வைத்தியர் வேதாசலம் தன் மனதிற்குள்ளேயே சொல்லிக் கொண்ட உரையாடல்.

வயிற்றுவலியைத் தீர்க்க ஹோமியோபதியில் அனகார்டியம், பயோ மருந்து மெக்னீசியா பாஸ், மற்றும் காலோசிந் போன்ற மருந்துகளுடன், சித்த மருத்துவத்தில் சூரணம், பஸ்பம் என்ற பெயரில் பவுடரைக் கொடுத்து அனுப்பினார்.

என்ன செய்வது? தன்னால் முடிந்த மட்டும் வயிற்றுவலிக்கு வைத்தியம் பார்த்த வைத்தியநாதன் கடைசியில் இவரிடம் வர வேண்டியதை நினைத்து வருத்தப்பட்டாலும், "கைராசி ஒன்று இருக்கிறதே, அது எல்லோருக்கும் கிடைக்காது". இதை எண்ணியவாறே மருந்தைப் பெற்றுக்கொண்டு ஊர் போய்ச் சேர்ந்தார் வைத்தியநாதன்.

## 2

"வணக்கம், நர்சம்மா! டாக்டர் இல்லீங்களா? என் மகனுக்கு மார்புவலி. வலி தாங்காமல் துடிக்கின்றான். என்னால் முடிந்த மட்டும் வைத்தியம் பார்த்தேன். நோய் தீர்ந்தபாடில்லை. டாக்டரைப் பார்த்து ஊசி போட்டால் நோய் நீங்கும்." இது கைராசி வைத்தியர் வேதாசலத்தின் குரல். அவர் பேசிய இடமோ டவுனில் உள்ள 'சிந்தாமணி நர்சிங் ஹோம்'. பாவம் வேதாசலம் என்ன செய்வார். ஒரே மகனின் மார்புவலியை அவனால் தாங்க முடிகிறதோ இல்லையோ ஆனால் இவரால் எப்படித் தாங்க முடியும்? வாரிசு இல்லாத குடும்பமாகி விட்டால் என்ன செய்வது என்று மனதில் பயம் வேறு. ஆகவேதான் தன்னால் வைத்தியம் பார்த்துக் காலத்தை

வீணாக்க விரும்பவில்லை. இதை எப்படி வெளியே சொல்வது. ஆகவே இதை மறைக்க ''தன் வைத்தியம் தன் குடும்பத்திற்குப் பலிக்காது'' என்று கூறிவிட்டால் வைத்தியர்மேல் பழி இல்லை.

இதுவே வேறு ஒருவர் மகனானால் ''என்னால் கண்டிப்பாக நோயைத் தீர்க்க முடியும். ஆனால் பணம் மட்டும் கொஞ்சம் அதிகம் ஆகும். செந்தூரம் செய்ய இரண்டு ஆயிரமும், ஜெர்மன் மருந்து வாங்க மூன்று ஆயிரமும் இருந்தால் நோயைச் சரி செய்து காப்பாற்றி விடலாம்'' என்று கூறி, பணம் வாங்கி வைத்தியம் செய்ய வேண்டியது. நோய் தீரவில்லையானால் அது ஆண்டவன் செயல் என்று கூறித் தப்பித்துக் கொள்வது. இது தன் மகனாயிற்றே, என்ன செய்வது?

டவுனில் உள்ள வைத்தியத்தை, வைத்தியரைக் குறை சொல்லியே பல ஆயிரம் சம்பாதித்த வைத்தியர் வேதாசலம் தன்னால் தீர்க்க முடியாத நோயாளிகளை டவுன் ஆஸ்பத்திரிக்குச் சென்று பார்க்கச் சொன்னதில்லை. தன் வைத்தியத்தில் சிவலோகம் போனவர்களுக்கு இவர் சொல்லும் ஆறுதல் ''அல்ப ஆயுசு. ஆண்டவன் அழைத்துக் கொண்டான்'' என்பது மட்டுமே.

இன்று இங்கு வைத்தியர் வேதாசலத்தைப் பார்த்த டாக்டர் முருகானந்தம், எம். பி. பி. எஸ்., (தன் மனதிற்குள் நினைத்துக் கொண்டது) ''இந்த உலகத்திலே இவர் வைத்தியத்தைத் தவிர வேறுவைத்தியமே உயர்வாவது இல்லைஎன்ற எண்ணம்; ஆங்கில மருத்துவத்தையும், மருத்துவர்களையும் கேலியும், கிண்டலும் செய்வது, நவீன மருந்தும், ஊசியும், மாத்திரைகளையும் இழித்துப் பேசுவது. ஆங்கில மருத்துவத்தில் ''பக்க விளைவு வரும்'' என்று கூறி, தன் பக்கம் அப்பாவி மக்களைக் கவர்ந்து இழுப்பது, பல வைத்தியம் செய்வதாகக் கூறி எந்த வைத்தியத்திலும் உருப்படி இல்லாமல் மக்களின் நோய்களை அதிகரிக்கச் செய்து, மக்களைக் கொல்வது, இவரின் வாடிக்கையாயிற்றே எப்படி இன்று இங்குவந்தார்'' என்று நினைத்த நினைப்பிலிருந்து விடுபட்ட டாக்டர் முருகானந்தம், ''நர்ஸ், நம்ம டாக்டர் வேதாசலம் நமக்கு மிக வேண்டியவர், சீக்கிரம் அவர் மகனுக்( டெஸ்ட் ஊசி போட்டு, டெஸ்டில் ஓகே ஆனால மருந்தைச் செலுத்துங்க. மேலும் உயர்ந்த மாத்திரையைக் கொடுங்க'' என்று கூறினார். அவர் மனம் பேசியதை உதடு பேசவில்லை. மருந்தைப் பெற்றுக் கொண்டு வைத்தியர் வேதாசலம் மகனை அழைத்துக் கொண்டு ஊர் போய்ச் சேர்ந்தார்.

# 3

டாக்டர் ஜெகன்மோகன் M.D.,F.R.C.S.-சை அறியாதவர்கள் தமிழ் நாட்டில் மிகக் குறைவு. அவர் வைத்திய சம்பந்தப்பட்ட பேட்டிகள், மருத்துவ ஆராய்ச்சி பற்றிய கருத்தரங்குகள், வானொலி, டெலிவிஷன், மற்றும் பத்திரிகைகளில் மருத்துவ கட்டுரைத் தொகுப்பு, சிறு கூட்டம் முதல் மருத்துவ மாநாடு வரை பட்டி தொட்டி முதல் பட்டிமன்றம் வரை இவரின் தொண்டைக் காணலாம்.

முழு நேரமும் இயங்கும் "நித்தியா இதய நோய் மருத்துவ மனை" இவர் இயக்கி வருகிறார். இவரிடம் பரிசோதனை பெற மட்டும் ரூபாய் நூறு. மருந்து மாத்திரைகள் தனி. மருத்துவ மனைக்கு முன்புறமே மருந்துக் கடையும் வைத்துள்ளார்.

ஒரு நேரத்தில் ஈ ஓட்டிக் கொண்டிருந்த இவரின் மருத்துவ மனையில் இன்று தேனைச் சுற்றும் எறும்பு போல மக்கள் கூட்டம். அந்தக் கூட்ட வரிசையில் வரிசை எண் அட்டையை (டோக்கன்) கையில் வைத்துக் கொண்டு காத்திருந்தார் திருமதி கல்யாணி முருகானந்தம்.

டாக்டர் முருகானந்தம் எம்.பி., பி.எஸ்., முன்கூட்டியே தன் மனைவி அங்கு வருவதை போனில் தெரிவித்திருந்தாலும், டாக்டர் ஜெகன்மோகன் வெளியில் சென்று உள்ளதால், கல்யாணி முருகானந்தமும் தனக்குரிய டோக்கனைப் பெற்றுக் கொண்டு வரிசையில் காத்திருந்தார்.

நோய் என்பது எல்லோருக்கும் பொதுவானது. அது ஆஸ்தி, அந்தஸ்து, சாதி, மதத்தைப் பார்ப்பதில்லை. இந்த உலகத்தில் அது ஒன்றுதான் உயர்வு, தாழ்வு பார்க்காமல் சோஷலிச முறையில் செயல்பட்டுக் கொண்டு இருக்கிறது.

டாக்டர் ஜெகன்மோகன் அவர் அறைக்குச் சென்றதும் காத்திருக்கும் கூட்டத்தில் விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. முதல் வரிசை எண் பெற்றிருந்த திருமதி. கல்யாணி முருகானந்தம் டாக்டரின் குளிர்சாதன அறைக்குச் சென்றார்.

"டாக்டர் முருகானந்தம் மிஸஸ்தானே நீங்க? என்ன உடம்பிற்கு?" இது டாக்டர்.

"அடிக்கடி இடது பக்க மார்பில் இழுத்துப் பிடிப்பது போன்ற வலியும் மூச்சுவிட சிரமமும், தலைசுற்றலுடன், கழுத்து,

இடுப்புவலியும் ஏற்படுகிறது. இந்த வலி ஏற்படும்போது உடல் முழுக்க வியர்த்துப் போகிறது டாக்டர்'' என்றார் திருமதி. கல்யாணி. மேலும் ''என் கணவரிடம் கேட்டதற்குச் சரியான காரணம் சொல்லத் தயங்குகின்றார். தயவு கூர்ந்து இந்த நோய்க்குரிய காரணத்தையும் சொல்லுங்கள் டாக்டர்'' என்றார்.

''அதிக கவலை, அதிக வேலை, வாயு அல்லது வாத சம்பந்தப் பட்ட சுரம், மூத்திரக்காய் நோய், டிப்தீரியா, இன்புளுவென்ஸா போன்ற நோய்களாலும் இருதய நோய் வர வாய்ப்பு உள்ளது. இது இருதயத்தைச் சுற்றி இருக்கும் தோல் வீங்குவதாலும், இருதயம் வீங்குவதாலும் அதிக வலியை வெளிக் காட்டுகிறது. இன்று இந்த நோயைப்பற்றிப் பயப்படத் தேவையில்லை. இந்த நவீன காலத்தில் நல்ல மருந்துகளும், வசதிகளும் அதிகம் உண்டு. ஆகவே கொஞ்சமும் கவலைப்படத் தேவை இல்லை.'' இது அவர் உதடு பேசிய பேச்சு. இனி அவர் உள்ளம் பேசுவதைக் கேட்போமா!

''மூச்சு விடச் சிரமம், நிறைய வியர்வை, இறுக்கிப் பிடிக்கும் மார்பில் கடுமையான வலி போன்ற குறிப்புக்களே போதும் இருதய நோய்க்கான அறிகுறிகள். அப்படி இருக்க ஒரு டாக்டர் இதைக் கண்டுபிடித்து முதலிலேயே வைத்தியம் செய்யத் தெரிய வில்லை. இவனெல்லாம் ஒரு டாக்டர். முறைப்படி கல்லூரிக்குச் சென்று படித்திருந்தால்தானே. டாக்டர் முருகானந்தம் பசுத் தோல் போர்த்திய புலி. ஒரு நேரத்தில் என் மேல்படிப்புக்குச் செய்த வந்த உதவியைத் தடுத்தவர் ஆயிற்றே. என்னைப் பற்றி அமைச்சரிடம் இல்லாததையும், பொல்லாததையும் கூறி என் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்தவர் அல்லவா இந்த முருகானந்தம். எனக்கு செய்த துரோகத்திற்கு பரிகாரம் காணவே இன்று அவர் மனைவிக்கு இருதய நோய். மற்ற நோய் வந்திருந்தால் அவர் என்னிடம் அனுப்ப வேண்டிய அவசியம் ஏற்படாமல் போகுமே என்றுதான் ஆண்டவன் பார்த்து இவர் மனைவிக்கு இருதயநோயை வரவைத்தான்.'' அவரின் உள் மனம் பேசியதைக் கேட்டோம். ஆனால் மருத்துவருக்கு உரிய கடமை களையும் பொறுப்புகளையும் கொஞ்சம் கூட தட்டிக் கழிக்க வில்லை டாக்டர் ஜெகன் மோகன்.

நித்தியா இருதய நோய் மருத்துவமனையில் சில நாள் தங்கி பூரண குணம் பெற்று டாக்டர் முருகானந்தத்தின் மனைவி இல்லம் போய்ச் சேர்ந்தார்.

# 4

சென்னை விமான நிலையத்தில் விமானம் புறப்படும் நேரத்திற்கு முன்பே வந்து விட்டார்கள் டாக்டர் ஜெகன் மோகனும், அவர் தந்தையாரும்.

அவருடைய தந்தையைக் கைத்தாங்கலாகப் பிடித்துக் கொண்டு, விமான கதவுகளை நோக்கி அழைத்துச் சென்றார் டாக்டர் ஜெகன் மோகன்.

கிராமத்தில் இருந்த சொத்துக்களை விற்று, தன் படிப் பிற்கும், தன் வசதிக்கும் வழி வகுத்த தந்தையின் உழைப்பு கொஞ்சமா? குறைவானதா, இல்லை. தாய் இல்லாத என்னை அவரே தாயாய் இருந்து சீராட்டி, சிந்தனை அறிவை ஊட்டி, படிக்க வைத்த தந்தைக்கு இந்த சிறு கைம்மாறும் செய்யாமல் போனால் உலகம் என்னை மன்னிக்காது. பணம் இன்று வரும், நாளை போகும். தந்தை இனி வருவாரா? எத்தனை இலட்சம் ரூபாய் ஆனாலும் பரவாயில்லை. தந்தையின் உயிரைக் காப்பாற்றியே தீர வேண்டும் என்ற அவரின் முடிவே, இன்றைய அமெரிக்கப் பயணம்.

நம் நாடு விஞ்ஞானத்தில் பல முன்னேற்றங்கள் அடைந் திருந்தாலும், இது போதாது. நவீன கருவிகள் வாங்குவதிலே கால தாமதம்; புதுப் புது மருந்துகள் பெறுவதிலே அலட்சியம். எதிலும் குறுக்கே நிற்கும் அரசியல்வாதிகள். இருட்டில் பெற்ற சுதந்திரம் இனி எப்பொழுது வெளிச்சத்திற்கு வரப் போகிறதோ என்று அவர் மனம் எண்ணிக் கொண்டே விமானத்தில் போய் அமர்ந்தார், டாக்டர் ஜெகன்மோகன்.

விமானம் பறந்து கொண்டிருந்த போது டாக்டரின், எண் ணங்களும் தந்தையின் நோயின் தன்மையைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டே இருந்தது. அவரின் தந்தைக்கு வந்திருக்கும் "பிளாஸ்டிக் அனிமீயா" என்பதாகும். அதாவது உறையச் செய்யும் பிளேட்லெட்கள் சராசரியாக ஒரு கன மில்லிமீட்டரில் 1.5 இலட்சம் இருக்க வேண்டும். இந்த நோயில் பாதிக்கப்பட்ட வர்களுக்கு மிகக்குறைவாக இருக்கும். இதற்குக் காரணம் இரத்த அணுக்களை உற்பத்தி செய்யும் எலும்பு மஜ்ஜை இறுகிப் போய் இருக்கும். இதனால் உற்பத்தியும் பாதிக்கப்பட்டு விடும்.

இவரின் தந்தைக்கு மிக குறைவாகத்தான் உள்ளது. இறுகி விட்டு செயலைக் குறைத்துக் கொண்டுள்ள எலும்பு மஜ்ஜையை மறுபடியும் இயங்கச் செய்து பிளேட்லெட்களின் உற்பத்தியைப் பெருக்கி...நம் நாட்டில் மருத்துவ வசதியை விட அமெரிக்காவே சிறந்தது என முடிவுக்கு வந்தார் டாக்டர் ஜெகன் மோகன்.

'இருபது நாட்களுக்கு ஒரு முறை இரத்தத்தை மாற்றி புது இரத்தம் செலுத்துவதால் அவரின் தந்தையின் உயிரை இதுவரை தக்க வைத்துக் கொண்டிருந்தார். வெளிநாட்டிலிருந்து மருந்து களை வரவழைத்து டாக்டர்களை வரவழைத்து வைத்தியம் பார்ப்பதைவிட அந்த நாட்டிற்கே செல்வது மேல்' என்ற அவரின் முடிவே அவரை அமெரிக்க மருத்துவமனையில் கால் வைக்க வைத்தது.

டாக்டர் ஆல்பர்ட் வில்லியம் என்ற அமெரிக்க டாக்டர் இவர்களின் வருகையை முன்கூட்டியே அறிந்திருந்ததால், இவர் களை வாசல் வரை வந்து தன் அறைக்கு அழைத்துச் சென்றார். பின் மருத்துவப் பரிசோதனை பல செய்தார். நவீன விஞ்ஞான கருவிகளைக் கொண்டு புதுப் புது சோதனைகள் செய்தார். ஆறு மணி நேர சோதனைக்குப் பின் டாக்டர் ஆல்பர்ட் வில்லியம் ''உங்கள் நாட்டில் உள்ள சக்தி வாய்ந்த குதிரையின் சிரம்தான் இதற்கு மருந்து, பல்வேறு மூலிகைகளைக் கொண்டு நடத்தப் படும் அக்னி ஹோமம் தான் இதற்கு சிறந்த சிகிச்சை. காலை அருகம்புல் ஜுஸும், பின் யோகாசனம், சூரிய நமஸ்காரம் போன்ற பயிற்சியும்தான் உங்கள் தந்தையின் உயிரை நிரந்தர மாகக்காப்பாற்றும். உங்கள் தந்தைக்கு வயது அதிகம் ஆகிவிட்ட தால் இன்றைய நவீன மாத்திரைகள் அதிகம் வேண்டாம். எங்கள் நாட்டிலுள்ள, உங்கள் நாட்டவர் நடத்தும் ஆசிரம்தான் எனக்குச் சொல்லித் தந்தது. இதை நீங்கள் இந்தியாவிலிருந்தே செய்து இருக்கலாம். தமிழ் நாட்டு சித்தர்கள் செய்யாததை இந்த அமெரிக்கா ஒன்றும் புதியதாக கண்டுபிடித்துவிடவில்லை. மருந்து மாத்திரை இல்லாமலே சர்க்கரை வியாதி, அல்சர், ஆஸ்துமா, இரத்த அழுத்தம், மூட்டுவலி, வயிற்றுவலி போன்ற நோய்களைப் போக்குகின்றனர் சித்தர்கள். உங்கள் தந்தையின் நோயையும் அவர்களால் போக்க முடியும். நீங்கள் தமிழ் நாட்டிலுள்ள ஒரு நல்ல பரம்பரை வைத்தியரைப் பார்த்து இதற்கு வைத்தியம் செய்து கொள்ளுங்கள்.''

''மேலும் நானும் மூலிகைமணி சித்தர் பரம்பரை வைத்தியர் கண்ணப்பனாரின் புதல்வர் டாக்டர் க. வெங்கடேசன் அவர் களைச் சந்தித்துச் சில ஆலோசனை பெற போகின்றேன்'' என்று கூறி முடித்தாரே பார்க்கலாம். அமெரிக்காவில் வசிக்கும் வெளி நாட்டவருக்குத் தெரியும் நம்நாட்டுப் பெருமை தனக்குத் தெரிய வில்லையே என எண்ணியபோது டாக்டர் ஜெகன்மோகனுக்கு இந்த ஜெகமே சுற்றியது.

★★★

# சந்தேகம்

காரிருள் சூழ்ந்து, கருமேகம் கருத்துவர, மங்கம்மா தள்ளாத எண்பது வயதில் தன் தம்பி மகன் இளங்கோ பற்றி எண்ணி ஏங்கினாள்.

"மழை வரும் இந்த நேரம் பார்த்து, இந்தப் பாவிப்பய போய் எப்ப வருவானோ தெரியலியே" என்று உள் மனம் மட்டும் சொல்லவில்லை. அவள் உதடுகளும் முணுமுணுத்தன.

தன் ஒரே தம்பி சாமிநாதனுக்குப் பாசத்தை ஊட்டி வளர்த்தாள் மங்கம்மாள். அந்தப் பாழாய்ப்போன குடியாலேயே அவன் உயிரும் போயி, அவனுக்கு வாழ்க்கைப்பட்டவளும் போயி, இன்று அனாதையாக நிற்கும் இளங்கோவைத் தன் மடிமீது தாலாட்டி, தோள்மீது ஆட விட்டு, கண்ணின் மணி போல வளர்த்து வந்தாள் தன் பேரனை.

இளங்கோ தன்னுடைய ஊரில் படிக்க வேண்டிய படிப்பைப் படித்து முடித்துவிட்டு, பக்கத்து ஊரில் இருக்கும் வேம்பூரில் சென்று தொழிற்பயிற்சி படிப்பைப் படித்துக் கொண்டிருந்தான்.

மங்கம்மாள் பாட்டியின் தூரத்து உறவுக்காரன் மருதமுத்து. மங்கம்மாளுக்கு நல்லது கெட்டது எது ஆனாலும் உறவு என்று இன்று சொல்லிக் கொள்ள மருதமுத்து. அவன் மகன் முத்துக் கனியைத் தவிர வேறு உறவு இல்லை. அவள் வாழும் அந்த அனகாபுத்தூரில்.

இளங்கோவைவிட மூன்று நான்கு வயது இளையவள் முத்துக்கனி. சிறுவயதில், இருவரும் சேர்ந்து விளையாடினாலும் இன்று ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்வது கடினம்.

மழையில் நனைந்து வந்த பேரனின் தலையைத் துவட்டி விட்டு, சாம்பிராணி புகை காட்டி இளங்கோவின் தலையின் ஈரத்தைப் போக்கிக் கொண்டிருந்த பாட்டியிடம்,

"பாட்டி! முத்துக்கனி அனகாபுத்தூரிலிருந்து வேம்பூருக்கு சைக்கிளில் சென்று படித்து வருவது அவ்வளவு சரி இல்லை,

என்னுடன் வருவதற்கும் வெட்கப்படுது. அவள்கூட படிக்கும் மற்ற பிள்ளைகளின் கேலி, கிண்டலைத் தாங்கிக் கொள்ளாமல் அழுது வடியுது."

''அவ! யார் சொல்வதையும் கேட்கமாட்டாள். நாம் அதற்கு என்ன செய்வது விட்டுத் தொலை. கழுதைக்குப் பட்டா தான் தெரியும்.''

''மருதமுத்து மாமாவிடம் இதைப்பற்றிப் பேசி ஒரு முடிவு கட்டி விட வேண்டியதுதான்.''

''டேய்...டேய்...அப்படி ஏதாச்சும் செய்துடாதேடா. அவன் முன்கோபக்காரன். பற்றாக்குறைக்குத் தண்ணி போட்டுட்டான்னா! அவ்வளவுதான்'' என்று கூறினாள் மங்கம்மாள்.

மறுநாள் காலை சைக்கிளை இளங்கோ ஓட்ட, அவன் பின் சீட்டில் முத்துக்கனி அமர சைக்கிள் வேம்பூர் பள்ளிக்கூடத்தை நோக்கிச் சென்றது.

மாலை வேளையில் அவன் தொழிற்படிப்பு வகுப்பை முடித்துக் கொண்டு, முத்துக்கனி பள்ளிக்கூடத்தில் வந்து பார்க்க அங்கு முத்துக்கனி இல்லாததால், அங்கிருந்து, நடந்தே வீடு வந்து சேர்ந்தான் இளங்கோ. இரவு ஏழுமணி ஆகியும் முத்துக்கனி வீடு வந்து சேராததால் மங்கம்மாள், மருதமுத்து, இளங்கோ ஆகியோர் ஆளுக்கு ஒரு பக்கம் தேட வீட்டை விட்டுச் சென்ற சிறிது நேரத்தில், ராஜ்தூத் மோட்டார் வண்டியில் ஒரு புது வாலிபனுடன் வந்து இறங்கினாள் முத்துக்கனி.

அக்கம் பக்கம் உள்ளவர்கள் முத்துக்கனியின் உடல் அலங்கோலக் காட்சியைக் கண்டு அதிர்ச்சி அடைந்தார்கள். முத்துக்கனியின் பக்கத்து வீட்டு வேலம்மாள், ''என்னம்மா ஆச்சி முத்துக்கனி, ஏன்? இந்தக் கோலத்திலே இருக்க, இப்ப உன்னை விட்டுவிட்டுச் சென்றவன் யாரும்மா?''

''ஆபத்து சமயத்தில் கடவுள் போல் என்னை வந்து காப்பற்றியவர் அவர்தான் அக்கா! அவர் பேரு சுகுமாராம். நான் இதற்கு முன் பார்த்தது இல்லை. நான் பள்ளிக்கூடத்தை விட்டு பனைமரச் சாலை வழியாக வந்து கொண்டு இருந்தபோது நான்கு முரட்டு ரவுடிப்பசங்க என்னைப் பலவந்தமாகப் பிடித்து இழுத்துக் கொண்டு அங்கு உள்ள பாழடைந்த பங்களாவின்

பக்கம் இழுத்துக் கொண்டு சென்றார்கள். என் வாயில் துணி வைத்துக் கட்டிவிட்டதால் என்னால் சத்தம் போட முடியவில்லை. அந்த நேரத்தில் மோட்டார்பைக் சத்தம் வருவதைக் கேட்டதும் அந்த நான்கு ரவுடிகளும் என்னை விட்டு விட்டு ஓடி விட்டார்கள். மோட்டார் பைக்கில் வந்தவர் பெயர் சுகுமார் என்று கூறினார். அம்மூரில் உள்ள இன்ஜினிரியங் காலேஜில் படிக்கிறாராம் அக்கா" என்று தேம்பித் தேம்பி அழுது கொண்டே சொல்லி முடித்தாள் முத்துக்கனி.

முத்துக்கனியை தேடிச் சென்ற அந்த மூவரும் வீடு சேர்ந்து சேதியை அறிந்து அதிர்ச்சி அடைந்தார்கள்.

மறுநாள் முதல் முத்துக்கனி இளங்கோவுடன்தான் பள்ளிக் கூடம் போவதும், வருவதுமாக இருந்தாள். முத்துக்கனியைக் காப்பாற்றிய சுகுமார் என்பவரைச் சந்தித்து நன்றி சொல்ல வேண்டும் என்ற ஆசைதான். இளங்கோவிற்குச் சரியான அடையாளமோ, விலாசமோ இல்லாததால் அது முடியாமல் போய் விட்டது.

இளங்கோ தொழிற்பயிற்சி வகுப்பை முடித்துவிட்டு சென்னையில் உள்ள ஒரு பெரிய தொழிற்சாலையில் அப்பரண்டீசாக வந்து சேர்ந்து ஒரு ஆண்டு முடிகின்றபோது முத்துக்கனியும் தன் பள்ளி இறுதி ஆண்டு படிப்பை முடித்துக் கொண்டு ஆசிரியை பயிற்சிக்காக சென்னை செவ்வாய்பேட்டை அருகில் உள்ள திரு ஊரில் உள்ள ஆசிரியர் பயிற்சி மையத்தில் பயிற்சிக்கு வந்து சேர்ந்தாள்.

இளங்கோவும், முத்துக்கனியும் தனித்தனியாக வேறு ஊரில் இருந்தாலும் வாரத்தில் ஒரு நாள் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொண்டார்கள்.

''முத்துக்கனி, உன்னை நம்மூரில் காப்பாற்றிய சுகுமார்தான் நான் வேலை செய்யும் கம்பெனிக்கு இன்ஜினியர்''.

''அது எப்படி அந்த சுகுமார்தான் காப்பாற்றினார்" என்று வியப்போடு கேட்டாள் முத்துக்கனி.

''நாங்க இரண்டு பேரும் பக்கத்து பக்கத்து ஊர் என்பதால், எங்களுக்குள் ஒரு அன்பான உறவு ஏற்பட்டது. நம்முடைய ஊரைப்பற்றிப் பேசும் போது, சுகுமார் உன் பெயரைச் சொல்லி நான்கு முரடன்களிடமிருந்து உன்னைக் காப்பாற்றியதைக் கூறினார்'' என்றான் இளங்கோ. மேலும் ''முத்துக்கனி! அந்த

சுகுமார் ஒரு விதத்தில் நம் தூரத்து உறவினர். நம் சொந்தத்தில் நல்ல பெண்ணிருந்தால் திருமணம் செய்து கொள்ள விருப்பமாம்".

"பெண்ணிருந்தால் உடனே திருமணம் முடித்து விட வேண்டியதுதானே! இன்ஜினியரை காக்கா பிடித்தாப் போல இருக்கும், உனக்குப் பதவி உயர்வும் கிடைக்கும்."

"ஏய் போக்கிரிப் பெண்ணே! எதிலும் கிண்டல்தானா?" என்று அவள் காதைச் செல்லமாகத் திருகுகினான் இளங்கோ.

உதவி இன்ஜினியராக இருந்த சுகுமார், சீனியர் இன்ஜினியர் பதவி கிடைத்ததை மகிழ்ச்சியோடு கொண்டாட, இளங்கோவை யும், மற்றவர்களையும் விருந்துக்கு அழைத்திருந்தான். விருந்து முடிந்து எல்லா நபர்களும் வீட்டிற்குச்சென்றபின், இளங்கோவை மட்டும் தனியாக அழைத்து சுகுமார் "நான் என் திருமண விஷயமாகச் சொன்னதைப்பற்றி என்ன தகவல் கிடைத்தது இளங்கோ" என்றான்.

"உங்கள் தகுதிக்குத் தகுந்த பெண் பார்த்துக் கொண்டு இருக்கின்றேன். இன்னும் சரியான தகவல் கிடைக்கவில்லை, கிடைத்ததும் சொல்கின்றேன்."

"கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு அடுத்த ஊருக்கா நெய்க்கு அலைவது?"

"நீங்க என்ன சொல்றீங்க!"

"ஆசிரியை பயிற்சி பெறும் முத்துக்கனி உங்கள் உறவுப் பெண்தானே! அதைப்பற்றிச் சிந்திக்காமல் ஊரில் பெண் தேடுவதா?"

"நீங்க என்ன சொல்கின்றீர்கள்" நாகுழைய, உள்ளம் நடுங்கக் கேட்டான் இளங்கோ. முத்துக்கனி விரும்பினால் தான் திருமணம் செய்து கொள்ளலாம் என்று நினைத்து இருப்பதை எப்படிக் கூறிவிட முடியும்? முத்துக்கனி மனசில் யாரை நினைத்துக் கொண்டிருக்கிறதோ? எதிர்பாராத சுகுமாரின் கேள்வியில் தடுமாறிய இளங்கோ, எதை எதையோ பேசி, சமாளித்து வீடு வந்து சேர்ந்தான்.

பல வருடங்களாக முத்துக்கனியைத் தன் மனதில் வைத்து கட்டிய கோட்டையைப்பற்றி யாரிடம் கூறுவது. ஜாடையாக முத்துக்கனியிடம் சொல்ல நினைத்த போதெல்லாம், பயம் வந்து தடுத்தது. மனம் விட்டு அவளிடம் கூறி, அவள் அதை

தவறாக எடுத்துக் கொண்டால், தன் குடும்ப உறவு பாதிக்குமே என்ற எண்ணம். அதிகம் உண்டு இளங்கோவுக்கு உறவை மட்டும் வைத்துக் கொண்டு, ஒரு பெண்ணின் மனதைப் புரிந்து கொள்ளாமல், திருமணத்தைப் பற்றிப் பேசுவது நாகரிகம் அல்ல என்பதும் அவனின் எண்ணம். அலை திரண்டு வரும் போது எப்படி அணை போடுவது. அலை எப்பொழுது ஓய்வது, அணை எப்போது போடுவது. குழப்பம் மேல் குழப்பம் இளங்கோவிற்கு.

மூன்று ஆண்டு ஆசிரியை படிப்பை முடித்துவிட்டு ஊருக்குப் புறப்படும் முன் தன் உறவுக்காரர் இளங்கோவைச் சந்தித்து விட்டுப் போக வந்தாள் முத்துக்கனி. முத்துக்கனியின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த இளங்கோ ''முத்துக்கனி! நான் சுற்றி வளைத்துக் கேட்காமல் நேரிடையாக ஒரு கேள்வி கேட்கின்றேன்; அதாவது, உன் திருமணத்தைப்பற்றி நீ ஏதாவது சிந்தித்தது உண்டா? அதைப்பற்றி உன் முடிவு என்ன?''

''என்ன மாமா! சுற்றி வளைக்க மாட்டேன் என்று நீங்க சுற்றி வளைத்துத்தானே பேசறீங்க!'

''அது இல்லை முத்துக்கனி, நான் கேட்க வந்தது என்ன என்றால்?''

''போதும்! போதும்! முகத்திலே அசடு வழியுது நிறுத்துங்க! இப்போது நான் நேரிடையாக என் முடிவை சொல்றேன். அதை கேட்டுக்கங்க'' என்றாள் முத்துக்கனி.

''மாமா, நான் சொல்றதை தப்பா நினைக்காதீங்க! நான் ஸ்கூலில் படிக்கும்போது என்னை முரடன்களிடமிருந்து காப்பாற்றியவரையே நான் மனசிலே நினைத்துக்கொண்டு இருக்கேன். உங்களை நான் உறவுக்கார மாமாவாகத்தான் நினைத்துக்கொண்டு இருக்கேனே தவிர, தாலிகட்டி உரிமை கொள்ளும் அளவுக்கு மனசிலே நினைக்கலே மாமா! நீங்க தப்பா நினைக்காதிங்க!'' என்று தன் மனதிலே தேக்கி வைத்திருந்த ஆசை அலைகளைச் சொன்னாள் முத்துக்கனி!

இதைக் கேட்ட இளங்கோவின் மனம் சலனத்திலிருந்து மீண்டு நடுக்கடல் அமைதிபோல் ஆனது. ஆண்டவன் விதியைப் பார்த்தீர்களா! கற்பைக் காப்பாற்றியவனே கணவராக வர வேண்டும் என்றும், தன்னால் காப்பாற்றப்பட்டவளே மனைவியாக வரவேண்டும் என்ற இருவரின் மனமும் ஒரு மனமாவது இறைவன் செய்த விந்தைதான் என்று இளங்கோவின் மனம் எண்ணியது.

மங்கல மேளம் முழங்க, நாதஸ்வரம் இசைக்க, வாழையும், தோரணங்களும் வரவேற்க, இளங்கோ பரிமாற சுகுமார்— முத்துக்கனி திருமணம் இன்பகரமாக முடிந்தது. திருமணத்திற்கு வந்தவர்கள் வாழ்த்திவிட்டுச் சென்றுவிட மங்கம்மா, மகிழ்ச்சி யோடு இளங்கோவைப் பார்த்து "இளங்கோ, முத்துக்கனியின் அம்மா நாகதேவதையை மிக நம்பிக்கையுடன் வணங்கியவ! அவ வணங்கியது வீண்போகல,பொதுவா, நாகதேவதையை முழு நம்பிக்கையுடன் வணங்கி, அதன் அருள் கிடைத்த அவர்கள் நன்றாக வாழ்வார்கள். அவர்களை மற்றவர்கள் தப்பாக எண்ணினாலோ, அல்லது கெடுக்க நினைத்தாலோ அவர்கள் அவ்வளவுதான்! ஏன்? உதாரணமா, முத்துக்கனியைக் கெடுக்க எண்ணிய நான்கு பாவிகளும் துடிக்கத் துடிக்கச் செத்து மடிந்தார்கள். நாகதேவதையின் சக்தியை நம்பினவர்களுக்கு நல்லது செய்யும், நயவஞ்சகர்களுக்கு தீமையை செய்யும், இதை என் கண்கூட பார்த்திருக்கிறேன். நீ கூட அவளை திருமணம் செய்து கொண்டு நாளைக்கு ஏதேனும் சண்டைச் சச்சரவு செய்தால் அதனால் உனக்கு ஆபத்து வருமே என்றுதான் நான் முத்துக்கனியை உனக்கு திருமணம் செய்ய விரும்பவில்லை. நாக தேவதையாப் பார்த்து ஒரு நல்ல இடத்தில் அவள் வாழ்க்கை அமைந்தது சந்தோஷம்" என்று கூறி முடித்தாள். மங்கம்மாள் பாட்டி சொன்ன பக்தியின் சக்தி உண்மை என்பதால் தான் ரவுடிகள் மாண்டார்கள். முத்துக்கனியும் தான் நினைத்த வனையே கரம்பிடிக்க முடிந்தது என்று நினைத்து மகிழ்ந்தான் இளங்கோ.

முத்துக்கனியும், சுகுமாரும் இல்லறம் என்னும் நல்லறத்தை ஓர் ஆண்டு சிறப்பாக நடத்திக் கொண்டிருந்தார்கள். முத்துக் கனியைப் பார்க்க இளங்கோ சுகுமார் வீட்டிற்கு வரும் போது முதலில் சுகுமார் வரவேற்றாலும், பிறகு அவனுடைய மனத்திற்குள் ஏதோ அவனுக்கே புரியாத ஒரு சந்தேக உணர்வு ஏற்பட்டது. ஒரு வேளை அது இளங்கோவும் முத்துக்கனியும் உறவுமுறை என்பதாலோ, அல்லது தன் மன பலவீனத்தாலோ என்பது அவனுக்கே மிக கஷ்டமாகத்தான் இருந்தது.

சுகுமார் இல்லாத சில நேரங்களில் கூட இளங்கோ வருவதும், பேசி சிரிப்பதும் சுகுமாரின் எதிர்பாராத வரவால் அவர்கள் பேச்சை குறைத்துக் கொள்வதும் கண்டு சுகுமாரின் மனதில் சந்தேகப் பேய் புகுந்து கொண்டது.

'நான் வீட்டில் இல்லாதபோது நீ ஏன் என் வீட்டிற்கு வருகின்றாய்' என்று கூட கேட்டுவிடவேண்டும் போல் இருந்தது சுகுமாருக்கு. முதலில் சுகுமாரின் மனதில் எழும் சந்தேகச்

செயல்களை விளையாட்டாக எண்ணினாள் முத்துக்கனி. பிறகுதான் தெரிந்தது தன் கணவன் தன் கற்புமீது சந்தேகப் படுகின்றார் என்பது. நாட்கள் செல்லச் செல்ல சுகுமாரின் சந்தேகம் வெறும் கயிறு உருவில் இருக்கும் பாம்புத் தோற்றம் அல்ல, அது சந்தேகம் என்னும் பாம்பு படம் எடுக்கும் 'நாகம்' என்று. ஒரு பெண்ணின் வாழ்க்கையில் எது ஏற்படக்கூடாதோ அது தன் கணவனின் சந்தேகப் பார்வையால் ஏற்பட்டதால் மனம் இடிந்து சோர்ந்து போனாள் முத்துக்கனி. இல்லறம் என்னும் நல்லறம் இங்கே சந்தேகம் என்னும் துர்நாற்றம் வீச அதற்கு வெண்சாமரம் எடுத்து தன் கணவன் வீச, நாற்றம் வீட்டை மட்டும் கெடுக்காமல் தன் சுற்றத்தாரையும் கெடுக்கும் நிலை வந்தவுடன், மனம் குன்றி ஒருவருடன் ஒருவர் பேசும் நிலையை வெறுத்து ஒருவரையொருவர் மறக்கும் நிலைக்கு வந்தனர்.

சீப் இன்ஜினியர் பதவி பெற்ற சுகுமாருக்கு மேலும் சில பொறுப்புகளைக் கொடுத்தது அவன் கம்பெனி. ஆம், அவன் இன்னும் ஒரு சில வாரங்களில் ஜப்பானுக்குத் தன் கம்பெனி சம்பந்தமாகச் செல்லவேண்டும் என்றும், அங்கு ஓர் ஆண்டு தங்கி அவன் கம்பெனிக்கு வேண்டிய வளர்ச்சிக்கு உதவவேண்டும் என்றும் ஆணை பிறப்பித்தது.

ஒருவருடன் ஒருவர் பேசாமல், இருவரும் ஒரே வீட்டில் வசிக்கும் இந்த நிலை மாறவேண்டும், என்று சுகுமாரும் நினைத்தான். முத்துக்கனி தன்னை இவ்வளவு கீழ்த்தரமாக—மட்டரகமாகத் தன் கணவன் நினைத்து விட்டாரே என்று நினைத்து வருந்தினாள். வருத்தம் இருவருக்கும் பொது. ஆனாலும் யார் முதலில் பேசுவது, ஆண்கள் காரியவாதிகள். அவர்கள் சமாதானம் செய்வார்கள். சுகுமார் முத்துக்கனியிடம் ''முத்துக்கனி, நமக்கு மனவேறுபாடு ஆயிரம் இருந்தாலும், ஒருவருடன் ஒருவர் பேசாமல் இருப்பது நரகவேதனையாக இருக்கிறது. ஆகவே இனி பேசுவது மட்டுமல்ல, நாம் இருவரும் அடுத்த வாரத்தில் ஜப்பானுக்குப் போவோம்! நீ வருகின்றாயா'' என்று மன அழுத்தத்துடன் கூறி முடித்தான் சுகுமார்.

''இந்த நாட்டில் என் உறவுக்காரரைச் சந்தேகப்பட்டீர்கள். அந்த நாட்டில் யார் யாரைச் சந்தேகப்படுவீர்களோ! வேண்டாம் இந்த வீண் வம்பு'' என்று கோபமாக கூறி முடித்தாள் முத்துக்கனி. ''பைத்தியமாட்டம் உளறாதே! உனக்கு வர இஷ்டமா இல்லையா? அதை மட்டும் சொல்லு!'' என்று நெருப்பு கொப்பளிக்கக் கூறி முடித்தான் சுகுமார்.

''முடியாது! முடியாது! முடியாது!''— என்றாள்.

''என்னுடன் வாழ முடியாதா? அல்லது என்னுடன் வர முடியாதா? அல்லது உங்கள் உறவைப் பிரிக்க முடியாதா?''

''நாக்கில் நரம்பு இல்லாமல் பேசாதீர்கள்''—என்று கூறி ஓ! வென்று கதறி அழுதாள் முத்துக்கனி.

கம்பனி ஆர்டரைப் பெற்றுக்கொண்டு காரில் புறப்பட்டான் ஏர்போர்ட்டை நோக்கி சுகுமார். வழி அனுப்பவோ, அல்லது தன் உடன்வரவோ மனைவி வரவில்லை. என்பதோடு தன் வாழ்க்கை இவ்வளவு சீக்கிரத்தில் இப்படி ஆகிவிட்டதே என்று எண்ணி வருந்தினான் சுகுமார்.

இந்தியாவைவிட்டுப் புறப்பட்ட விமானம், ஜப்பானில் இறங்கும்வரை முத்துக்கனியின் சிந்தனையிலேயே ஆழ்ந்தான் சுகுமார். முத்துக்கனியின் தூய்மையான உள்ளத்தைப் புரிந்து கொள்ள மறந்து விட்டோமா? அல்லது முத்துக்கனி உண்மை யிலேயே தவறு செய்பவள்தானா? ''ஜப்பான் முன்னேறிய நாடு. முன்னேறிய நாடு என்பது மட்டுமல்ல, அது உலகத்தின் அதிசய நாடாகும். ஜப்பானின் பொருள்களை இறக்குமதி செய்யாத நாடே உலகத்தில் இல்லை. புதுப் புது யுக்திகளைக் கண்டுபிடித்து அதன் மூலம் பொருட்களைத் தரத்துடன் உற்பத்தி செய்வதில் ஜப்பான் முதன்மை வகிக்கிறது.''

தன் கம்பெனியின் தலைமை என்ஜினியர் பொறுப்பு ஏற்றுச் சென்ற சுகுமார் தன் மனைவியின் சிந்தனையை மூட்டை கட்டி வைத்து விட்டு, தான் சென்ற நோக்கத்தில் சிந்தனையைச் செலுத்தினான்.

டோக்கியோவில், தனக்காக ஒதுக்கப்பட்ட மிகப் பெரிய அடுக்குமாடிக் கட்டிடத்தில் ஐந்தாவது மாடியில் அவனது அறை இருந்தது. அலுவலகத்திற்கும் அவன் வசிக்கும் அறைக்கும் இடையில் உள்ள சில மைல் தூரத்தைத் தனக்குக் கம்பெனியால் கொடுக்கப்பட்ட காரில் கடந்து சென்று வருவது அவனுக்கு அதிக சிரமம் இல்லை.

அவனுக்கு ஒதுக்கப்பட்ட அறையின் எதிர் அறையில் இந்தியாவைச் சேர்ந்த அஜய்குமார் என்பவரும் அவர் மனைவி ரூபினியும் வசித்தார்கள். சில தினங்களில் அவர்களிடம் நல்ல பழக்கம் ஏற்பட்டது. திருமதி. ரூபினியின் ஒன்றுவிட்ட சகோதரர் தோற்றமுடைய சுகுமாரைப் பார்த்ததும் ரூபினிக்கு சுகுமாரின்மீது ஒரு சகோதரப் பாசம் ஏற்பட்டது. அஜய்

குமாரும், சுகுமாருடன் தன் நாட்டவர் என்ற பாசத்தில் முதலில் பழகினாலும், பிறகு சுகுமாரின் அன்பு, பெருந்தன்மை இவைகள் அதிகம் பிடித்ததால் இருவரும் மிக நெருங்கிய நண்பர்களாக மாறினார்கள்.

சுகுமாரின் குடும்பத்தின் உண்மையான நிலையினை அறிந்து கொண்ட அஜய் தம்பதிகள் சுகுமாரையும் முத்துக்கனியையும் ஒன்றாகச் சேர்த்து வைக்க எண்ணினார்கள்.

வாரம் ஒரு நாள் சுகுமாரை அழைத்து விருந்து வைத்து உபசரித்தார்கள். அதற்கு ஈடாக அவர்கள் இருவரையும் சுகுமார் டோக்கியோவில் மிகப் பெரிய ஓட்டலுக்கு அழைத்துச் சென்று விருந்து வைபபது சுகுமாரின் கடமையாக இருந்தது.

முத்துக்கனியை ஜப்பானுக்கு வரவழைத்து எப்படி இவர்கள் இருவரையும் சேர்த்து வைப்பது என்று இருவரும் சிந்தித்துக் கொண்டு இருந்தபோது, அஜய்குமார் "ரூபினி! நான் ஒரு விஷயம் சொல்றேன் தப்பா நினைக்கக்கூடாது! அதாவது சுகுமாரும் முத்துக்கனியும் சந்தேகம் என்ற நோயால் பீடிக்கப்பட்டு இருக்கின்றார்கள். அந்த நோயைப் போக்க, சந்தேகம் என்ற மருந்தைக் கொடுத்துத்தான் அந்த நோயைப் போக்க வேண்டும். நீ என்ன சொல்ற" என்றான்.

"நீங்க என்ன சொல்றீங்க என்றே எனக்கு புரியல! நோய் என்று சொல்றீங்க; மருந்து என்று சொல்றீங்க! கொஞ்சம் புரியும்படி தெளிவா சொல்லுங்க" என்றாள் தன் மழலை தமிழில் ரூபினி.

"சுகுமாருக்கும் முத்துக்கனிக்கும் இடையில் உள்ள இளங்கோதானே சந்தேகத்திற்குக் காரணம். அது போல நீ சகோதரனா நினைக்கின்ற சுகுமாருக்கும் உனக்கும் தொடர்பு இருப்பதா நான் சந்தேகப்படுவது போல் நடிக்கின்றேன். நீயும் என்னுடன் நடி, உன்மீது தவறான எண்ணம் கொள் ளாத சுகுமார், தன் மீது வீண் பழி வருவதை உணர்ந்து நம்மை விட்டு பிரிந்துவிட நினைப்பான். அப்பொழுது அவன் வாழ்க்கை யில் ஏற்பட்ட இளங்கோவின் நிலையும், அவன் நிலையும் ஒன்று தான் என்று புரிய வைத்து, முத்துக்கனிக்கு அவசர தந்தி அனுப்பி இங்கு வரவழைத்து இருவரையும் சேர்த்து விடுவோம்! நீ என்ன சொல்ற" என்று கூறி முடித்தான் அஜய்குமார்.

வார இறுதி நாள் விடுமுறையில் அஜய் வீட்டில் விருந்துக்கு ஏற்பாடாகிக் கொண்டிருந்தது. அஜய் வீட்டில் ரூபினி விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்க,

மதியம் விருந்தின் நேரம் கடந்து செல்வதை நினைத்துக் கொண்டே சுகுமார் அஜய் வீட்டில் நுழையும்போது "மேடம் அஜய் இருக்கானா?" என்றான் சுகுமார்.

"இப்ப வந்து விடுவார், வந்து உட்காருங்க" என்றாள் ரூபினி.

சுகுமாரும், ரூபினியும் தனியாக இருக்கும் நேரத்தில் வீட்டுக்குள் நுழைந்த அஜய், சுகுமாரையும், ரூபினியையும் கொடூரக் கண்களால் பார்க்க, ரூபினியும் தடுமாறுவது போல் நடிக்க! ஏதோ முணுமுணுத்துக் கொண்டே அஜய் சுகுமாரின் முகத்தை மறுபடியும் பார்க்க சுகுமாருக்கு ஏன் இப்படி அஜய் நடந்து கொண்டான் என்பது புரியாமல் விழிக்க—

"ரூபினி, எத்தனை நாளா நடக்குது இது?" என்று முறைத்துக் கேட்க—

"எது, எத்தனை நாளா நடக்குது?" என்று பயத்தோடு ரூபினி கேட்க, சுகுமாரின் மனதில், தன்னையும் தான் சகோதரியாக நினைக்கும் ரூபினியையும் அஜய்குமார் சந்தேகப் படுகின்றான் என்பதை உணர்ந்து மிக வேகமாக அந்த அறையை விட்டுத் தன் அறைக்குச் செல்லும்போது, வாசற்படி யில் வந்து நின்ற ஒரு வாலிபன் அஜய்குமாரை அவசர அவசர மாக கூப்பிட, வந்தவன் தான் வேலை செய்யும் கம்பெனியின் ஆள் என்பதால் அவனைப் பின் தொடர்ந்து அஜய்குமார் செல்ல, ரூபினியும் அஜய்குமாரும் போட்ட திட்டத்தைப் பற்றிக் கலந்து பேச முடியாததை நினைத்து நின்றுகொண்டிருந்தாள் ரூபினி.

அஜய்குமார் வேலை செய்யும் தொழிற்சாலையின் மானேஜர் டைரக்டருக்கு இருதய வலி வந்து மருத்துவமனை யில் சேர்த்திருப்பதால், கம்பனியின் மிகப்பெரிய அதிகாரி அஜய்குமார் என்பதால் உடனே அழைத்துச் சென்று கம்பனியின் நிலைமைகளைப் பற்றி மற்ற அதிகாரிகளுடன் பேசிவிட்டு, மருத்துவ மனையில் இருக்கும் டைரக்டரையும் பார்த்து விட்டு வீட்டை நெருங்கி வந்து கொண்டிருந்த அஜய் குமார் எதிர்பாராத விதமாக விபத்துக்கு உள்ளாகி இறந்து விட்டார்! என்ற சேதியைக் கேட்ட ரூபினி மயங்கிக் கீழே விழ, அஜய் இறந்துவிட்ட சேதியைக் கேள்விப்பட்ட சுகுமார், அஜய் குமாரின் துயர நிகழ்ச்சியில் கலந்து கொண்டு ரூபினிக்கு ஆறுதல் சொன்னான்.

அஜய்குமாரும் ரூபினியும் தன்னையும் தன் மனைவியையும் சேர்த்து வைக்க போட்ட நாடகத்தை அறிந்து கண்ணீர் விட்டுக் கதறி அழுதான் சுகுமார். அஜய்குமாரின் நுழைவால் ஏற்பட்ட

சோகத்தை சுமந்து கொண்டு, ஜப்பானை விட்டு இந்தியாவை நோக்கி பயணமாக ரூபினி ஆயத்தமாகிக் கொண்டிருந்த போது சுகுமாரின் ஓர் ஆண்டு கம்பெனியின் வேலை முடிந்து இருவரும் இந்தியாவை நோக்கிப் பயணமாகிக் கொண்டு இருந்தார்கள்.

சுகுமாரை விட்டுத் தனிமையில் நின்ற முத்துக்கனி ஆசிரியை வேலையைத் தேடிச் சென்றபோது 'அகில உலக அன்னை தெரசா பொதுநலப்பணிக்குத் தன்னலம் கருதா பெண் ஊழியர்கள் தேவை'' என்பதை அறிந்து அதில் சேர்ந்து பணி செய்ய முற்பட்டாள் முத்துக்கனி.

தன்னால் முத்துக்கனியின் வாழ்க்கை பாதிக்கப்பட்டதை அறிந்த இளங்கோ தன் தூரத்து உறவுப் பெண்ணை திருமணம் செய்து கொண்டான்.

இளங்கோவின் திருமணத்தை முடித்துவிட்டு, அன்னை தெரசாவின் பொதுப்பணிக்கு இங்கிலாந்தை நோக்கிப் பயணம் மேற்கொள்ள ஆயத்தமானாள் முத்துக்கனி.

மருதமுத்து, மங்கம்மாள், இளங்கோ, அவன் துணைவி தேன்மொழி ஆகியோர் மீனம்பாக்கம் விமானத்தளத்தில் முத்துக்கனியை வழி அனுப்ப விமானம் புறப்படும் நேரம் பார்த்துக் கொண்டு இருந்தார்கள்.

அவர்கள் அனைவரும் அதிர்ச்சி அடையும்படி அவர்கள் எதிரில் சுகுமாரும் ரூபினியும் விமானத்தைவிட்டு இறங்கி வந்து கொண்டு இருந்தார்கள்.

சுகுமார் முத்துக்கனியைப் பார்க்க, முத்துக்கனி சுகுமாரையும், ரூபினியையும் பார்க்க! இருவர் கண்களும் மிரள விழிக்க, அவர்களின் இரண்டு மனமும் கற்பனை உலகில் வீண்புழுதியைத் தூற்ற, ரூபினி ''நீங்கதான் முத்துக்கனி என்று நினைக்கின்றேன். உங்களையும், சகோதரர் சுகுமாரையும் சேர்த்து வைக்கத்தான் நானும் என் கணவரும் திட்டம் போட்டோம். திட்டம் கைகூடும் முன் என் கணவர் இந்த உலகத்தை விட்டே போய் விட்டார்'' என்று தேம்பி அழ,'ஓடிச்சென்று முத்துக்கனி கட்டிப் பிடித்துக் கொண்டு ஆறுதல் சொல்ல, முத்துக்கனியின் பொதுநலத் தொண்டுக்கு அவளைவிட தானே சிறந்தவள், நீங்கள் இருவரும் சேர்ந்து வாழ்வதே என் கணவருக்கும், எனக்கும் நீங்கள் செய்யும் கைமாறு என்று ''ரூபினி'' கூறினாள். முத்துக்கனிக்குப் பதில் ரூபினி அன்னை தெரசாவின் அன்பு சேவை பணிக்கு ஆயத்தமாக, ரூபினியின் இறந்த கணவர் அஜய்யின் மனம் ஆத்ம சாந்தி அடைந்த நிலையில் சுமந்து கொண்டு சென்ற விமானம் அமைதி பூங்காற்றாக விண்ணில் சென்றது.

# சக்தி ஒரு விளக்கம்

## ''ஓம் வல்லீ பதயே நமோ நம''

உலகம் சக்தி மயமானது என்பதை நாம் அனைவரும் அறிவோம். அப்படி அறிந்திருந்தாலும், எதனால் அந்த சக்தி உண்டென்று யார் அறிவர்!

அண்டத்திலே பிண்டம்; பிண்டத்தினுள்ளே அண்டம். அணுவுக்குள்ளே அண்டத்தைப் பிளக்கும் சக்தி. எல்லாமே இன்று புதுமை. நாளை அது பழமை.

நமது உடலின் வெப்ப சக்தி 98.6—டிகிரி என்றாலும், அது 115.7—டிகிரி வெப்பத்தைத் தாங்கும் சக்தியையும், குறைந்த வெப்பமான 60.8—டிகிரி வெப்பத்தை உடல் ஏற்றுக் கொள்ளக் கூடிய அமைப்பையும் பெற்று இருக்கிறது என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

இந்தச் சக்தியைக் கொடுத்தது யார்? இந்த உலகத்தில் இந்த உடலுக்கு இந்தச் சக்தியைக் கொடுத்தது தாயா? தந்தையா? அல்லது இறைவனா?

தாயின் கருப்பையில் ஒரு கருமுட்டை உற்பத்தியாக 20 கோடி அணுக்கள் கொண்ட விந்து தேவைப்படுகிறது. உற்பத்தியான ஒரு மனிதனின் உடல் எத்தனை கோடி அணுக்களால் ஆக்கப்பட்டிருக்கும் என்பதை சிறிது கற்பனை செய்து பாருங்கள்!

அண்ட வெளியில் பல கிரகங்கள் சுழன்று கொண்டே இருக்கிறது. அது ஒன்றை ஒன்று மோதிக் கொள்ளாமல் இருக்கச் செய்யும் ஆகர்ஷண சக்தி எங்கிருந்து வந்தது?

பூமி சூரியனை ஒரு தடவை சுற்றிவர ஆகும் காலம் 365 நாட்கள், 5 மணி 48—நிமிடம், 45 வினாடி ஆகும். இந்த சுழல் வேகத்தில் குறைந்த மாற்றம் அல்லது அதிக மாற்றம் ஏற்பட்டுக் கொண்டே வந்தால் உலகத்தின் நிலைதான் என்ன?

நமது உடலில் இரத்தம் 24 மணி நேரத்தில் 168,000,000 மைல்கள் ஓடுகிறது. அதை இயக்கி வைக்கும் சக்தி இதயத்திற்கு மட்டும்தான் உண்டா? அப்படித் தான் என்றால் இதயம் இயங்கும் போது 1,03,689 தடவை துடிக்கிறதே அந்த துடிப்பை உண்டாக்கும் சக்தி எது? அதை இயக்கும் சக்தி சில மூல பொருள்களுக்கு இருக்குமானால் அந்த மூலப்பொருளை இயக்கும் சக்தி எது?

மூலங்களை உற்பத்தி செய்யும் சக்தி மூலத்திற்குள்ளே உள்ளது. அந்த மூலமே இறைவன் என்பதாகும்; அந்த இறைவன் கண்களுக்குத் தெரியாதவன். காதுகளுக்குக் கேட்காதவன் உணர்வுகளைக் கொண்டு மட்டுமே உணரக் கூடியவன்.

இறைவனின் சக்தி எங்கும் எதிலும் பரந்து, விரிந்து கிடக்கிறது.

மனித உருவில், கண்களுக்குப் புலப்படாத,காதுகளால் நம்ப முடியாத சக்தியைப் பெற்ற பகவான் பாபா அவர்கள் சொன்ன சிறுகதையே இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

தன்னைவிட அதிக அறிவு பெற்றுவிட்டதாக எண்ணிய மகனிடம், தந்தை ''மகனே, நீ பிரம்மத்தை அறிந்து கொண்டாயா? நீ அறிந்ததை விளக்கிக் கூறு?'' என்றார்;

அவர் மகனால் அக்கேள்விக்குரிய பதிலைக் கூற முடிய வில்லை, ஆகவே அந்தத் தந்தையே ஒரு செய்முறை மூலமாக விளக்கமாகக் கூற எண்ணி ''மகனே, நீ ஒரு சிறு பாத்திரத்தில் நீரும், ஒரு கை அளவு உப்பையும் கொண்டுவா'' என்றார். மகனும் அவ்வாறே கொண்டு வந்தான். ''நீ இப்பொழுது நீரில் உப்பைக் கலக்கு; உப்பு நீரில் முழுவதும் கரைந்து விட்டது. நீ கொண்டு வந்த உப்பைக் கண்ணால் முன்பு பார்த்தாய் அல்லவா? ஆனால் நீரில் உப்பைக் கலந்த பின் பார்க்க முடியவில்லை அல்லவா?பார்க்கமுடியாத உப்பை எப்படி அறிவது? உப்பு கலந்த நீரை உன் நாக்கில் விட்டுப் பார். உப்பு நீரில் கலந்து இருப்ப தால் உப்பு சுவை அதிகம் தெரிகிறது அல்லவா? பிரம்மமும் அப்படிப்பட்டதே. பிரும்மத்தை] யாரும் கண்களால் பார்க்க முடியாது. நீரில் எப்படி உப்பு கரைந்துள்ளதோ, அப்படியே உலகம் முழுவதும் பிரும்மம் நிறைந்து இருக்கிறது'' என்று கூறினார்.

இந்த உலகத்தில் சக்தியும் எல்லா இடங்களிலும் நிறைந் திருக்கின்றது. வெட்ட வெளி மட்டும் அதற்குச் சொந்தமல்ல, நம் உள்ளங்கூட அதற்குச் சொந்தமானதே;

சில இடங்களில் சில மனிதர்களின் மனதில் சக்தி. அதிகம் சக்திப் பெற்று இருப்பதால் அந்த இடம் பிரகாசம் பெறுகிறது. அல்லது அந்த மனிதர் பிரகாசம் பெறுகின்றார்.

ஆன்மீக சக்தியை வெளிப்படுத்த சித்தர்களால் மட்டுமே முடியும். சித்தர்கள் எல்லா இடங்களிலேயேயும், எல்லா உருவங்களிலேயேயும் இருப்பார்கள். விஞ்ஞான சக்தியை வெளிப் படுத்தும் அறிஞர் பெருமக்கள்கூட இந்த சித்தி அவதாரமே யாகும்.

எல்லா சக்தியையும், எல்லா சித்தியையும் பெற்ற அன்னை ஆதி பராசக்திதான் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரையும் படைத்தார் என்பதை நாம் அறிய வேண்டும்.

மனிதனால் முடியும் என்ற மனமும், முயற்சி என்ற செயலும் துணை இருந்தால் எந்த நிலையிலும், எந்த சக்தியையும் வெளிக் கொண்டு வந்து வெற்றி பெற முடியும்.

மனித வாழ்க்கையில் சிறு சிறு சம்பவங்கள்கூட சக்தியின் நிகழ்ச்சியேயாகும். சிறுசிறு சம்பவங்கள்கூட சக்தியின் திருவிளையாடல்களேயாகும். சிறு சிறு சம்பவங்களே வாழ்க்கை யின் ஒரு பகுதியாகிறது.

எட்டு வயது சிறுவன் அமெரிக்க விண்வெளி மையத்தின் தவறைச் சுட்டிக்காட்டும் நிலைமை எதைக் காட்டுகிறது. அவன் அறிவின்பால் கொண்ட சக்தியைக் காட்டுகிறது.

விமானத்தில் பறந்துகொண்டே தரையிலிருந்து எத்தை அடி உயரத்தில் விமானம் பறக்கிறது என்பதையும், தரையில் அது ஓடினால் அதன் வேகம் மணிக்கு எத்தனை கி.மீ. செல்லும் என்பதையும், இப்பொழுது எந்த நாட்டின்மீது பறந்து கொண்டு இருக்கிறோம் என்பதையும், பயணத்தின் போதே வெளி உலகத்தின் பருவநிலை என்ன என்பதையும் அறிய விஞ்ஞானம் உதவுவது போல் விமானத்தில் பறந்து கொண்டே செயற்கைக்கோள் மூலம் உலகத்தின் எந்த நாட்டு மக்களிடமும் நேரிடையாகப் பேச முடியும் என்பதைப் போன்ற நிகழ்ச்சி களை விஞ்ஞானம் மெய்ப்பித்து வந்துகொண்டு இருக்கிறது. மேலும் சூரிய ஒளி மூலம் மின்சக்தியைப் பெற்று தொலைக் காட்சிப் பெட்டிகளை இயக்கவும், டிரான்ஸிஸ்டர், ரேடியோ போன்றவற்றை இயக்கவும் சமையல் எரிவாயுவைக் கொண்டு மோட்டார் வாகனத்தை இயக்கவும் சாதனை செய்து வருகிறது.

மேலும் பூமியிலிருந்து அனுப்பப்படும் விண்கலம் மூலம் சூரியனின் அமைப்பு, சூரியப் பகுதியைச் சுற்றி வீசும் காற்று,

சூரியனைச் சுற்றி நிலவும் காந்த வீச்சு சூரியக் கதிர்களின் தன்மை ஆகியவைகளை விஞ்ஞானம் ஆய்ந்து வருகிறது.

முப்பத்து மூன்று வயதில் இயற்கை எய்திய உலகம் புகழும் சீனிவாச ராமானுஜத்தின் கணித அறிவைக் கண்டு உலக கணித அறிஞர்கள் வியக்கின்றார்கள். ராமானுஜம் ஒரு பிறவி கணித மேதை. கணித உலகத்திற்கே புதிதாகப் பல விஷயங்களைக் கண்டுபிடித்துச் சொன்னவர். அப்படிப்பட்டவரின் மூளையில் ஏற்பட்ட சக்தி எது?

ˉயிலிருந்து எப்பொழுதும் ஒரே தூரத்தில் இருக்கும் படியாக, பூமி சுழலும் திசையில் அதே வேகத்தில் சுற்றிவரும் 'ஜியோ ஸ்டேஷனரி' என்ற ஒரு செயற்கைக்கோள் அமைத்து உலகத்தின் பல பாகங்களுக்குச் செய்தியை அனுப்பும் சக்தி எது?

அஸ்ட்ராய்டு என்ற எரிக் கற்கள் நொடிக்கு 26 கி. மீ. வேகத்தில் பூமியின் மீது மோதினால், அது 10 லட்சம் ஹைட் ரஜன் குண்டுகளை வீசினால் எந்த அளவுக்கு சக்தி வெளிப் படுமோ அந்த சக்தி ஏற்பட்டு பூமி தூள் தூள் ஆகாத சக்தி உண்டென்றால் அது தெய்வ சக்தியால் தான் முடியும். முக்திப் பெற்ற சித்தர்களின் சக்தியால்தான் உலகம் வாழ்ந்து கொண்டு இருக்கிறது. அந்த சக்தியின் ஒரு துரும்பு அளவு விளக்க முற்பட்டதின் காரணமே இந்த சக்தியின் சிறுகதையாகும்.



# அவனுக்குள் ஒரு சக்தி

''நம்ம முதலாளி அரவிந்தை, நம் உழைப்பை உறிஞ்சி பிழைக்கின்ற கூட்டத்தோடு சேர்த்துவிட வேண்டியதுதான். இது வரை அவரு நியாயமா, நீதியா இருந்தாரு, இப்பொழுது என்ன வந்ததோ தெரியவில்லை, ஒரு மாதிரியா நடந்துக்கிறார்'' என்றார் அரவிந்த் பிரிண்டிங் பிரஸ் மேன் லோகு.

''ஆமா லோகு. இந்த ஆயுதபூஜை நல்ல நாள் அதுவுமா நம் மனசுக்கு நிம்மதியைக் கொடுக்காம ஏதோ ஏதோ பேசுகிறாரே''—இது பியூன் முருகேசன். இவர்கள் பேசுவதைக் காதில் வாங்காததைப் போன்று, ஆபீஸ் ரூமைவிட்டு வெளியே வந்தார் முதலாளி அரவிந்தன்.

வயது முப்பது, குட்டையான உருவம், கருத்த மேனி; உழைப்பில் இறுகிய உடல்வாகு, எதையும் சமாளிக்கும் சாதுர்யம், சாமர்த்தியம் நிறைந்த பேச்சு, முன்னேற்றம் என்பதே குறிக்கோள். அதில் வெற்றி காண்பதே வாடிக்கை.

லோகு, முருகேசன் சொற்கள் அர விந்தனின் காதுகளில் தேள் கொட்டியது போல் இருந்தாலு , அதைப் பெரிதாக நினைக்காமல், அவரின் கால்கள் வாச படியில் நின்றிருந்த பியட் காரை நோக்கியே நடந்து கொண்டிருந்தது.

கார் கடற்கரையை நோக்கிப் பாய்ந்தது. அவர் காற்று வாங்குவதற்காக அல்ல. தன் வாழ்க்கைத் துணை அமைய ஒரு பெரிய தொழில் அதிபரின் பர்சனல் செக்கரட்டரியைச் சந்திக்க, தன் சொந்த விஷயமாக ஐந்து நட்சத்திர ஹோட்டலில் சந்திப்பது வீண் செலவு என்று மட்டும் நினைக்கவில்லை. அர்த்தமற்ற ஆடம்பரம் என்று கடற்கரையைத் தேர்ந்தெடுத்தார்.

அரவிந்தனின் கண்கள் கைக்கடிகாரத்தைப் பார்த்தாலும் அவரின் மனமோ, தன் சுற்றத்தினர்கள் ஒரு காலத்தில் தன்னை அனாதையாய் நடத்திய அந்தக் கடந்த பத்தாண்டு நினைவுகள் அவரின் சிந்தனை ஆற்றில் துள்ளும் மீனானது.

''மேல்நிலைப் படிப்பில் தேர்வு பெற முடியாத நீ வாழ்க்கையில் எப்படிடா தேறப்போற, நீ உருப்படாத பயல்'' என்றார் அப்பா.

''படிடா, படிடா என்று கழுதையா கத்தினேன், உன் தலையில் களிமண்ணுதானே இருக்கு, எப்படிடா படிப்பு வரும்; ஊர் சுற்றுவது, வேளா வேளைக்கு வந்து வயிறு நிறைய கொட்டிக் கொள்வது, இதுதான் நீ உருப்படியா செய்யற வேலை, நீ எல்லாம் எப்படிடா முன்னுக்கு வரப்போற, உன் அண்ணனைப் பாரு, நல்லா படித்து கை நிறைய சம்பாதிக்கின்றான். அவனைப் பார்த்தாவது உனக்குப் புத்தி வரக் கூடாதா?'' இது அம்மாவின் கண்ணீர் அஞ்சலி.

அண்ணனைப்பற்றிக் கேட்கவே வேண்டாம். என்னை இகழ்ந்து பேசுவதும், ஏளனம் செய்வதும் அவனின் பொழுது போக்குகளில் ஒன்று. உறவுகள் என்றுமே பிரிவானது என்பதும் சட்டையில் அணியும் ரோஜா மலரைப் போன்றது. அதை கைப்படாமல் கசங்காமல் அழகு பார்க்க வேண்டுமே அன்றி. எடுத்துக் கசக்கி முகர்ந்தால் பாழ்பட்டுவிடும், அதைப் போன்றதே நம் சொந்தக்காரர்களின் உறவும்.

என் நண்பன் பழனி கொடுத்த ரூபாய் பத்தை எடுத்துக் கொண்டு யாரிடமும் சொல்லாமல் திருவண்ணாமலையிலிருந்து, சென்னைக்கு வந்தேன்.

சென்னை இரயில் நிலையத்தில் யாரிடம் எதைக் கேட்பது எப்படிப் பேசுவது என்று திகைத்து நின்று கொண்டிருந்தபோது ''ஐயா பசிக்குதே'' என்ற அவலக் குரல் கேட்டுத் திரும்பினேன். என் பசியை நான் யாரிடம் கூறுவது. பசி கண்ணைச் சுற்றியது மட்டுமா காதையும் அடைத்தது.

நான்கு மணி நேரம் சுற்றிச் சுற்றி வந்த என்னை எனக்குத் தெரியாமல் என்னையே நோட்டம் விட்டுக் கொண்டிருந்த ஒரு காவலர் என் அருகே வந்து ''டேய் நீ யாரு, ஏன்? இங்கேயே வட்டமிட்டுக்கிட்டிருக்கே'' என்று அதிகார தோரணையில் கேட்க, அவரின் தோரணை, கம்பீரத் தோற்றம் ஆகியவற்றைக் கண்டு என் கைகளிரண்டும் தாளம் இட, கால்கள் இரண்டும் பரதம் ஆட, பசி மயக்கம் பறந்தோட, என் கழுத்தைவிட்டுத் தலை கழன்று விழ, என் உடம்பு குற்றால அருவியிலே குளித்து வந்தது போன்று இருக்க, கண்களிலிருந்து வரும் நீர் பாதத்தின் பெருவிரலைத் தொடர, என்னை நானே மறந்து நடுங்க.

''தம்பி பயப்படாதே! உன்னைப் பார்த்தா அப்பாவியா தான் தெரியுது; தைரியமாகச் சொல் நீ யார்? எந்த ஊர்?''

"சார்! நான் திருவண்ணாமலையைச் சேர்ந்தவன்; வீட்டை விட்டு வேலை தேடி சென்னைக்கு வந்தேன். நான் எந்த தப்பும் செய்யாதவன் சார்" என்றான் பரிதாபமாக.

இரயில் டிக்கட் பரிசோதகர் என்னிடம் பெறாத டிக்கட் என்னிடம் இருந்ததை அவரிடம் காண்பித்தேன். மேலும் என் போட்டாவுக்குப் பின் என் வீட்டு முழு விலாசத்தையும் அதில் எழுதி இருந்தேன். அதையும் அவர் பார்த்தார். அவருக்கு முழு நம்பிக்கை வந்தவராக "நல்ல பையனாட்டம்தான் தெரியுது. பெரியவர்களிடம் சொல்லாமல் வந்துவிட்டாயா? நீ இப் பொழுது, எங்கே தங்கப் போற. உனக்கு சொந்தக்காரர்கள் யாரேனும் உண்டா?" என்றார்.

"இந்த ஊர்லே எனக்கு யாரையுமே தெரியாதுங்க ஐயா, சொந்தம் என்று யாருமில்லை. உழைக்கனும் என்ற ஆர்வம் மட்டுமே எனக்கு சொந்தமுங்க!" என்று கூறிய என் கண் இமை களைவிட்டுக் கண்ணீர்த்துளிகள் கன்னத்தில் வழிந்தது. இதைப் பார்த்த அந்த காவலர் "தம்பி நானும் டியூட்டி முடித்துக் கொண்டு தான் வீட்டுக்குப் போறேன்; நான் வசிக்கும் இடத் திற்குப் பக்கத்திலே தினசரி பேப்பர் போட ஆள் தேவை என்று கேள்விப்பட்டேன். உனக்கு அங்கு வேலை கிடைக்கிறதா என்று பார்போம்" என்றார். நான் அவரின் பின்னாலேயே நடந்தேன்.

இப்படியும் எனக்கு ஒரு காவல் தெய்வமா? போலீஸ் காரர்கள் என்றாலே அடிப்பது, மிரட்டுவது என்று மட்டுமே நினைத்திருந்தது எவ்வளவு பெரிய தப்பு என்று என் உள் மனம் வருந்தியது. கற்பாறைக்குள்ளே, நீர் ஊற்று, காக்கிச் சட்டைக்குள்ளேயும் ஒரு காந்தி உருவம்.

திருமங்கலம் நாவலர் நகர் அருகில் அவரின் குடியிருப்பு. மேற்கு அண்ணா நகரில் எனக்கு தினசரி காலை பேப்பர் போடும் வேலை. தினம் காலை நான்கு மணிக்கு எழுந்து பத்திரிகை வினியோகிக்கும் இடத்திற்குச் சென்று விடுவேன். காலை ஆறு மணிக்கு எல்லா வேலைகளையும் முடித்துக் கொண்டு என் காவல் தெய்வம் புண்ணியகோடி ஐயா வீட்டிற்கு வந்து விடுவேன்.

காவலர் புண்ணியகோடி அவர்கள் இன்னும் சில மாதங் களில் ரிடையர் ஆகப் போகும் வயது. உடல் தளர்ந்து இருந் தாலும் உள்ளம் இளமையானது. இளமையான உள்ளத்திற் குள்ளே கண்டிப்பு கடமை உணர்வு அதிகம். அவருக்கு

மங்கையர்க்கரசி என்ற துணைவியார் உண்டு. ''அரசி என்ற பெயரில் சிறுகதை, கவிதை கட்டுரை எழுதுவது அந்த அம்மையாரின் பொழுதுபோக்கு. அரசி அக்கா எழுதும் கதைகள் நீரோடைபோல் சென்றாலும் அதில் தீய சக்திகளை அடித்து விரட்டிவிடும் ஆற்றல் இருந்தது.

கவிதைகளில் கனல் பறக்காவிட்டாலும் சமுதாயத்தின் மறுமலர்ச்சிக்குப் புத்துணர்வைத் தந்தது. ஆகவே என் மனமும் அக்காவின் கதை கவிதைகளில் நாட்டம் கொண்டது.

நான் அவர்கள் வீட்டில் தங்கி இருப்பதால் புண்ணியகோடி ஐயாவுக்கு மிகப் பெரிய வேலை ஒன்று மிச்சமானது. அது தினம் அக்கா எழுதும் கதைகளை புரூப் பார்ப்பது, அதை சரி செய்து தபாலில் அனுப்புவது.

முத்து முத்தான அக்காவின் கையெழுத்துப் பிரதிகளை சரி பார்க்கும் எனக்கும் அக்காவைப் போல் எழுதவேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டது. அந்த ஆவலே என்னை எழுதத் தூண்டியது; என் எழுத்து ஆர்வத்திற்கு அக்கா அவர்களும் புண்ணியகோடி ஐயா அவர்களும் பெரும் துணை நின்றனர்.

நான் எழுதிய முதல் கதை ''நீ எங்கே?'' ஒரு வாரப் பத்திரிகையில் வந்ததும் அதை படித்துப் பார்த்தவர்கள் மிகவும் பாராட்டி எழுதி இருந்தார்கள். பல பாராட்டுக் கடிதங்களைப் பார்த்த எனக்கு இன்னும் எழுத வேண்டும் என்ற எண்ணம் அதிகமானது. பள்ளியில் படிக்கும் காலத்தில் ஆசிரியர் தலையில் கொட்டும், கொட்டும் எழுத்தாளனுக்கு வரும் பாராட்டு கடிதங்களும் எவ்வளவு உயர்ந்தது என்பது அன்றுதான் தெரிந்தது.

''நீ எழுதும் கதை, கவிதைகளை அக்காவே ஆழ்ந்து படித்தார்கள் என்றால் அதற்கு அதிக முக்கியத்துவம் இருக்கிறது. நீ தொடர்ந்து எழுது. உன் எழுத்துக்கள் இல்லாதவரின் வாழ்க்கைக்கு ஊன்றுகோலாக இருக்க வேண்டும்'' என்று புண்ணியகோடி ஐயா அவர்கள் கூறினார்கள்.

இதனால் என் எழுத்துக்கள் கவிதைகளாகவும் பல கதைகளாகவும், மர்ம நாவல்களாகவும் வெளிவரத் தொடங்கியது. என்னை வாழவைத்த தெய்வம் புண்ணியகோடி ஐயா அவர்களின் பெயரையும் அவர் துணைவியாரின் பெயரையும் குறிப்பிடும் வகையில் 'புண்ணிய அரசி' என்ற பெயரில் பதிப்பகத்தில் என் வெளியீடுகள் வெளிவந்து கொண்டு இருந்தன.

நான் தினசரி செய்தித்தாள் வினியோகிக்கும் அண்ணாநகர் பகுதியில் விடுமுறை நாட்களில் வீட்டில் இருக்கும் செல்வந்தர் களிடம் என் புத்தக வெளியீடு பற்றியும் அதை வெளியிட நான் படும் இன்னல் பற்றியும் அவர்களிடம் கூறி அவர்களையே என் புத்தகங்களை வாங்கவும்,பொருளுதவி செய்யவும் வேண்டினேன். தினம் பத்து புத்தகங்களை விற்பனை செய்து வந்தேன். அந்த பத்து பல நூறு ஆனது; என் கதைகளின் வேகமும் திருப்புமுனை யும் எல்லோரையும் கவர்ந்தது. சென்னை நகர் மட்டுமல்ல எல்லா மாவட்டங்களிலும் எனக்கென ஒரு வாசகர் மன்றம் ஏற்பட்டது.

எனக்கென சொந்தமாக ஒரு அச்சகம் வேண்டும் என்று புண்ணிய கோடி ஐயா ஆசைபட்டார். அங்கு மங்கையர்க்கரசி தெய்வம் துணை நின்றது. அதுவே நான்கு பேர் மட்டும் வேலை செய்யும் ஒரு சிறிய அச்சகமாக உருவாகியது. இரவு என்றும் பகல் என்றும் பாராமல் நான் உழைத்த உழைப்பால் ஐம்பது பேர் வேலை செய்யும் பிரஸ் ஆனது. புதிய எழுத்தாளர்களின் சிந்தனைகள், புதுமையோடு செய்துதரும் நவீன வசதிகள் என் அச்சகத்தில் அதிகரிக்க நாட்கள் வாரங்களை மாதங்களைக் கடந்து, மாதங்கள் வருஷங்களை வசந்தங்களாக்கி இன்று ஐந்து நூறு பேர் தொழில் செய்யும் அரவிந்து அச்சுக்கூடம் ஆனது.

தினம் தினம் காலை ஐந்து மணிக்கு செய்திகளைக் கொண்டு சென்ற என் கைகளைத் தேடி சரஸ்வதியோடு லஷ்மியும் வந்தாள். இன்று பணமும் புகழும் போதும் என்ற அளவிற்கு என்னை உயர்த்தியது எது? உழைப்பு, உண்மை, நேர்மை, விடா முயற்சி இவைகள்தானே.

உலகத்தில் தெய்வங்கள் தோன்றுவது மனித உருவத்தில் என்பதற்கு புண்ணியகோடி ஐயா அவர்களும், மங்கையர்க்கரசி அக்கா அவர்களுமே சாட்சியாகும்.

உண்டு, உறங்கி, உழைக்காமல் வீண் பேச்சுப் பேசி காலத் தைக் கடத்தி இருந்தால் காலத்தின் கண்ணாடித்தூள்கள் என் கால்களைப் பதம்பார்த்து, பாதம் அழுகச் செய்து என் பயணம் பாழாகிப்போய் இருக்கும். அப்படிப் போகாமல் இருந்ததற்கு நான் சேர்ந்த இடமும், நான் நடந்து கொண்ட வழியும்தானே! காரணம்—என்று எண்ணிக் கொண்டே நிமிர்ந்து பார்க்க யாருக்காக காத்திருந்தாரோ அந்தத் தொழில் அதிபரும் அவர் பர்சனல் செக்ரட்டரியும் எதிரில் வந்துகொண்டு இருந்தார்கள்,

மாலை மயங்கும் நேரம், ஆத்வன் கடலின் மடியில் தலைவைத்து சாயும்பொழுது பறவைகளின் கீச் கீச் என்ற ஒலி, மணற்பரப்பில் சிறுவர்களின் உல்லாச ஆட்டம். அப்பொழுது மகாத்மா காந்தி சிலையின் கீழே நான்கு ஐந்து குருவிகள் ஒரு தாய்க் குருவியைப் பின் தொடர தாய்க்குருவியும் அந்தச் சேய்க் குஞ்சுகளின் பிஞ்சு வாய் அருகே இரையைக் கொண்டு ஊட்ட, அந்தப் பிஞ்சுக் குஞ்சுகளும் அன்னையின் அரவணைப்பில் கீச் கீச் கீச் என்ற ஒலி எழுப்ப இதைப் பார்த்துக் கொண்டே வந்த அரவிந்தின் மனதில் தாய்க்குருவியை வட்டமிடும் மழலைகுஞ்சிக் குருவிகளும் காதைத் துளைக்கும் சத்தமும், அந்தச் சத்தத்தைப் பொருட்படுத்தாமல் தாய்க்குருவி அவைகளுக்கு உணவு ஊட்டும் கடமையும், அவரின் மனதில் ஆழமாகப் பதிந்தது.

தன் உடன் வந்து மற்றவர்கள் கூறும் வார்த்தைகளை விட இந்த நிகழ்ச்சி அவரின் அடிமனதில் ஆழமாகப் பதிந்தது. ஆம் நாம் கம்பெனியை விட்டு வெளிவரும்போது லோகும், முருகேச னும் பேசிய வார்த்தைகள் மழலைக் குருவிகளின் சத்தமாகவே அவருக்குத் தோன்றியது.

"ஐந்தறிவு படைத்த குருவியே தன் இனக் குஞ்சுகளின் பேரிரைச்சலைப் பொருட்படுத்தாமல் தன் கடமையைச் செய்யும் போது ஆறறிவு படைத்த நமக்குக் கோபமும் ஆத்திரமும் வருவதுஅறிவுடைமை ஆகாது" என்று தோன்றியது.

தன் வாழ்க்கைத் துணையைப் பற்றிப் பேச வந்தவர்களிடம் அவசரமாகப் பேச வேண்டியதைப் பேசி முடித்துவிட்டு உடனே தொழிற்சாலைக்குச் சென்றார் அரவிந்து.

தொழிலாளர்கள் எதிர்பார்த்த கோரிக்கையைவிட அதிக மான சலுகைகள் அளித்தார் அரவிந்து.



# அவசரம்

மோகனின் உள்ளம் கொதிப்பானை சோற்றின் நிலையென கொதித்துக் கொண்டே இருந்தது. நெற்றி வியர்வை நிலத்தில் ஆறாய்ப் பெருக்கெடுத்து ஓட உழைத்த மொத்த உழைப்பின் மூலதனத்தையும் அந்தத் துரோகி வக்கீல் கோவிந்தன் அபகரித்துக் கொண்டதை நினைத்து மனம் கொதித்தது.

மோகன் எடுத்த முடிவு முடிவானதுதான். அதில் மாற்ற மில்லை. ''சிறுக சிறுக சிட்டுக்குருவி சேர்த்து வைத்ததை கருடன் வந்து அபகரிப்பதா? கூடாது. கருநாகமான அந்த வக்கீல் கோவிந்தனை ஒழித்தே தீருவதுதான் நியாயம். பழிக்குப் பழி. இந்த உலகத்தில் ஏமாற்றுக்காரர்கள் ஒழிகின்றார்களோ இல்லையோ ஆனால் என்னை ஏமாற்றிய நயவஞ்சகனை அழித்தே தீரவேண்டும்'' இது மோகனின் மனதில் வந்து மோதிய எண்ண அலைகள்.

மோகனுக்கு வயது இருபத்தி எட்டு. வேலைக்கு அலைந்து அலைந்து கால்கள் தேய்ந்ததுதான் மிச்சம். ஏழு ஆண்டுகளுக்குள் தான் அரசாங்கத்தில் வேலை கிடைக்கும். அதற்கு மேல் போனால் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் காலாவதியான காலண்டர்தான்.

படியேறாத கம்பெனி உண்டா? வேலை தேடாத நாட்கள் உண்டா? மனம் சோர்ந்து சென்னைக்கு வந்து தன் தூரத்து உறவினர் வீட்டில் தங்கி வேலைக்காக நாட்களை அதிகம் கடத்தாமல் எந்தக் கூலி வேலை கிடைத்தாலும் பரவாயில்லை. அல்லது மூட்டை தூக்கியாவது வாழ்வோம் என்ற முடிவுடன் உழைக்கத் துவங்கினான் மோகன்.

''மண்வெட்டிக் கொண்டு மண்ணைக் கொத்தி வார வேண்டுமா? சைக்கிள் ரிக்ஷா கொண்டு ஆட்களை ஏற்றிச் செல்ல வேண்டுமா? லாரியிலிருந்து மூட்டைகளை ஏற்றி இறக்க வேண்டுமா? எல்லா வேலைகளுக்கும் ரெடி. படிப்பு பி.ஏ., இருந்து என்ன பயன். பணம் இல்லையே நல்ல வேலை கிடைக்க.

உடலிலே வலிமையும், உள்ளத்திலே உறுதியும் இருந்து என்ன பயன். பணம் இருந்தால் தொழில் செய்யலாம்,பணம் இருந்தால் அரசாங்கத்தில் வேலை தேடலாம். பணம் மட்டுமே இன்று மனிதனுக்கு வாழ்க்கையாகிவிட்டது. எதிலும் வஞ்சம். எதிலும் ஊழல், லஞ்சம் வாங்குவதும், ஊழல் செய்வதும் இன்று நவ நாகரிகமாகிவிட்டது. ஊழல் செய்பவனுக்கும் லஞ்சம் வாங்கு பவனுக்கும்தான் இன்று சமுதாயத்தில் மரியாதை.

நீதி, நேர்மை, நியாயங்கள் அனைத்தும் கானல் நீராகி விட்டது. காலம் அந்த வேகத்தில் ஓடிக்கொண்டு இருக்கிறது. சமுதாயத்தில் உயர்ந்த அந்தஸ்தில் வாழ வேண்டுமா? அவன் பொய் அதிகம் பேச வேண்டும். ஏமாற்று வேலைகள் அதிகம் செய்ய வேண்டும். கலியுகம் காசைத்தான் நம்பி வாழ்கிறது. என்ன செய்வது? ஒரு வேளை இன்று காந்தி உயிருடன் இருந்தால் எப்படி வாழ்ந்திருப்பார்! நினைக்கவே பயமாகத்தான் இருக்கிறது.

அன்று அரிச்சந்திரன் கதையைப் பார்த்துப் படித்து உண்மையை மட்டும் பேச வேண்டும் என்று நினைத்த காந்தி, இன்று அரசியல்வாதியை, அரசாங்க உத்தியோகம் செய்யும் அதிகாரியை, கொள்ளை லாபத்தில் கலப்படம் செய்யும், வியாபாரியைப்பார்த்தால் என்ன செய்வார்? "அவர் புண்ணியம் செய்தவர் போய்ச் சேர்ந்து விட்டார். நாம் என்ன பாவம் செய்தோமோ இதை அனுபவிக்கின்றோம்" என்று நினைத்துக் கொண்டே தன் சொந்தக்காரர் வீட்டை நோக்கி நடந்து வந்தான் மோகன்.

மோகன் தங்கி இருக்கும் வீட்டின் சொந்தக்காரர் இராமானுஜம், இவனிடம் அன்பாகவும், கனிவாகவும் நடந்து கொண்டார். அதைப்போல் அவர் மனைவி சாந்தியும், அவர்கள் மகள் சித்திராவும் அன்பாகவே இருந்தனர்.

மோகனுக்குச் சிறுசிறு வேலை மூலம் காசு கிடைத்தது. சாப்பாட்டிற்குப் போக மீதியை வீண் செலவு செய்யாமல் ஒரு வங்கியில் சேர்த்து வைத்தான். இவனுடைய உழைப்பு, உறுதி, நம்பிக்கை இவைகளைப் பார்த்த இராமானுஜத்திற்கு இவன் மேல் அளவற்ற அன்பும் பாசமும் வளர்ந்தது. தன் வயது வந்த மகள் சித்திராவையே இவனுக்குத் திருமணம் செய்து வைக்க எண்ணினார். 'சிக்கனம் இருந்தால் சென்னையில் சிறப்புடன் வாழலாம். ஊதாரித்தனம் இருந்தால் லட்சம் இருந்தாலும் பத்தாது' என்பதை நன்கு அறிந்திருந்தான் மோகன்.

சுமார் மூன்று ஆண்டுகளில் ரொக்கமாக ரூபாய் பத்தாயிரத்தைச் சேர்த்து விட்டான், மோகன். இராமனுஜம் வீட்டிற்கு நான்கு வீடுகள் தள்ளி, புதிதாக ஒருவர் வாடகைக்கு வந்தார். அவர் அந்தப் பகுதியில் உள்ள அஞ்சல் அலுவலகத்தில் போஸ்ட்மேனாக வேலை செய்பவர். அவரைத் தேடி ஓய்வு நேரத்தில் மோகன் அங்கு செல்வது வழக்கம்.

போஸ்ட்மேனுக்கு நடுத்தர வயது. நாணயமான பேச்சு, எதிலும் கராராக இருந்தது அவரது சுபாவம். இவை அனைத்தும் மோகனுக்குப் பிடித்து இருந்ததால் இருவரின் நட்பும் வளர்ந்தது. ஒரு நாள் மாலை நேரத்தில் போஸ்ட்மேன் வீட்டிற்கு அவரின் மிக நெருங்கிய உறவினர் வக்கீல் கோவிந்தன் அங்கு வந்தார். அப்பொழுது மோகனும் அங்கு வந்து இருக்கும் வழக்கறிஞரும் ஒருவரை ஒருவர் அறிமுகம் செய்து கொண்டனர்.

வேலூரிலிருந்து ஒரு அரசாங்க வேலை விஷயமாக சென்னைக்கு வந்த வழக்கறிஞரின் சேவை மனப்பான்மை மோகனுக்குப் பிடித்திருந்தது. வழக்கறிஞர் கோவிந்தன் தொழிலில் நாணயமானவர் என்பதைவிட, தொழிலைத் தெய்வமாக நினைத்து வாழ்பவர். 'ஏழைகள் படும் துன்பத்தைத் துடைக்கவே இறைவன் தன்னை வழக்கறிஞராக்கினார்' என்று நினைப்பதுண்டு.

மோகன் தன் பி. ஏ., படிப்பைப் பற்றியும் தனக்கு நிலையான வேலை கிடைக்காததைப் பற்றியும் அவரிடம் கூற, அவரும் அவன் மேல் இரக்கம் கொண்டு, இன்று பணம் கொடுத்தால் தன்னால் பெரிய அதிகாரிகள் மூலம் அரசாங்க வேலை கிடைக்க வகை செய்ய முடியும் என்றும், சுமார் ஆறு மாதங்களில் வேலை கிடைத்து விட வாய்ப்பு உள்ளது என்றும் அதற்கு ரூபாய் இருபது ஆயிரம் போல் அதிகாரிகளுக்குக் கொடுத்தால்தான் காரியம் ஆகும் என்றும் தெரிவித்தார்.

வழக்கறிஞர் கூறியவற்றை அப்படியே தன்னைப்பாதுகாக்கும் உறவினர் இராமானுஜத்திடம் கூறினான். அவர்களும் இவனுக்கு உண்மையில் உதவிட வேண்டும் என்ற எண்ணம் இருந்ததால் தன் மகளின் திருமணத்திற்காக வைத்திருந்த ரூபாய் பத்தாயிரத்தைத் தர சம்மதித்தனர்.

தன்னுடைய பத்தாயிரத்தையும், உறவினர் இராமானுஜர் கொடுத்த பத்தாயிரத்தையும் வழக்கறிஞர் கோவிந்தனிடம் கொடுத்தான் மோகன். பணத்துடன் மோகனின் பி. ஏ. சான்றிதழைப் பெற்றுச் சென்ற வழக்கறிஞர் கோவிந்தன் ஆறு

மாதமும் கழிந்தது. நான்கு ஐந்து முறை அவர் வசிக்கும் வேலூருக்கும் சென்று வேலைக்கு வழி என்ன என்று கேட்டும் வேலை கிடைக்கவில்லை. வேலை கிடைக்காமல் போனால் போகிறது; கொடுத்த பணமாவது திரும்பி வந்தால் போதும் என்றாகிவிட்டது.

மோகனுக்கு, ஒரு பெண்ணின் திருமணத்திற்காக வைத்திருந்த பணத்தையும், கல்லையும் மண்ணையும் சுமந்து சேகரித்த பணத்தையும் பகல் கொள்ளை அடிப்பது போல் அந்த வழக்கறிஞர் கோவிந்தன் எடுத்துச் சென்றதை நினைத்தபோது நெஞ்சு எரிந்தது. இதை இப்படியே விடக்கூடாது. இதற்கு முடிவு கட்டியே தீர வேண்டும் என்ற எண்ணத்துடன் கையில் கையடக்க கத்தியுடன் வேலூரை நோக்கிப் பயணமானான் மோகன். அவன் எண்ணத்தில் மிருகத்தனமான உணர்வு. அவன் மடியில் கொடூரத்தனமான கூர்மையான ஆயுதம். கோவிந்தனின் நெஞ்சைக் கீறி அதில் படியும் இரத்தத்தைப் பார்த்தால்தான் தன் உள் உணர்வு அடங்கும் என்ற முடிவுடன் வேலூரை நோக்கிச் செல்லும் பேருந்தில் பயணமானான் மோகன்.

பேருந்தில் அவனுக்கு சன்னல் கம்பியை ஒட்டிய இடம் கிடைத்தது. அவனுக்குப்பக்கத்தில் வயதான செல்வந்தர் போல தோற்றமளித்த ஒரு மனிதர். பேருந்து புறப்பட்டது. மோகனின் எண்ணமெல்லாம் தன்னை ஏமாற்றிய கோவிந்தனை எப்படிக் கொலை செய்வது என்பதைப்பற்றியேதான் இருந்தது. அவனின் முன் இருக்கையில் சன்னல் கம்பிகளை ஒட்டி அமர்ந்திருந்த ஒரு கிராமத்து ஆசாமி பேருந்தில் அமர்ந்ததிலிருந்து வெற்றிலை எச்சிலைக் குதப்பிக் குதப்பி வெளியே துப்புவதுமாக இருந்தார்.

பேருந்து புறப்படும் முன் அது பிரச்சினையாகத் தெரியவில்லை. பேருந்து புறப்பட்டவுடன்தான் அதுவே பிரச்சனையாகியது.

"ஐயா, தயவு செய்து ஓடும் பஸ்ஸில் முன் சீட்டில் அமர்ந்து வெற்றிலையைத் துப்பாதீர்கள். அது பின் சீட்டில் எங்கள் முகத்தில் படுகிறது" என்று மோகனும் அவனைப் போல் பாதிக்கப் பட்டவர்களும் கூறினார்கள்.

அந்தக் கிராமத்து ஆசாமி யார் சொல்வதையும் காதில் வாங்குவதாகத் தெரியவில்லை. பேருந்து போரூரைக் கடந்து பூவிருந்தவல்லியை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

மோகன் எச்சில் துப்புபவரைப் பார்த்து, "நீ பெரிய மனிதனாட்டும் தெரியற, ஓடற பஸ்ஸில் எச்சில் துப்பரேயே அது எல்லோர் முகத்திலேயும் படுதே, உனக்கு ஏதாவது அறிவு இருக்கா? உன் எச்சில் என்ன பன்னீர் என்ற நினைப்பா உனக்கு?"

"டேய்! மரியாதையா பேசு, நான் யார் தெரியுமா? பஸ்ஸில் உக்கார கஷ்டமாக இருந்தா நீ இறங்கிப் போ; என்னைக் கட்டுப்படுத்த நீ யார்?"

"இது உங்கப்பன் வீட்டு பஸ் இல்லையா? அரசாங்கத் தோடது. மரியாதையா எச்சில் துப்பறதை நிறுத்து, இல்லண்ணா நீ இறங்கிப் போ!"

"யாரைப் பார்த்து என்ன சொன்னே!" என்று கூறிக் கொண்டே மோகனின் சட்டையை இறுக்கிப் பிடித்து ஓங்கி பலமாக முகத்தில் குத்து விட்டார். அந்தக் கிராமத்து ஆசாமி. மேலும் அசிங்கமான வார்த்தைகளை அள்ளி வீசினார் அந்த மனிதர்.

வந்ததே மோகனுக்குக் கோபம்! தன் மடியில் வைத்திருந்த கத்தியை எடுத்து சதக் . சதக்... என்று கிராமத்து மனிதரின் வயிற்றில் குத்தினான் மோகன்.

குத்துப்பட்ட அந்தக் கிராமத்து மனிதர் வெட்டுப்பட்ட அவரைக் கொடியைப் போல துவண்டு விழுந்தார். இரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. பேருந்து முழுக்க பரபரப்பு, ஆரவாரம் சலசலப்பு. யார் பேசுவதும் யார் காதிலும் விழவில்லை.

பேருந்து பூவிருந்தவல்லி காவல் நிலையத்தைத் தஞ்சம் அடைந்தது. ஓட்டுனரும் நடத்துனரும், பொது மக்களும் மோகனைப் பிடித்துக் காவல் நிலையத்தில் ஒப்படைத்தனர்.

அன்று மாலை பத்திரிக்கையில் முக்கிய செய்தி 'பேருந்தி பயணிகளுக்குள் சண்டை போட்டு ஒருவர்குத்திக் கொலை. குத்தியவர் கைது செய்யப்பட்டார். குத்துப் பட்டவரின் உடல் பரிசோதனைக்கு சென்னை பொது மருத்துவமனைக்கு எடுத்துச் செல்லப்பட்டது?'

வேலூரில் இச்செய்தியைப் படித்த வழக்கறிஞர் கோவிந்தன், தனக்கு சம்பந்தப்பட்ட பையன்தான் கொலையாளி என்றும், காரணமில்லாமல் ஏன் இந்தக் கொலையை அவன் செய்தான் என்பதையும் அறிய அன்று இரவே தன் நண்பரின் கார் மூலம் சென்னை பூவிருந்தவல்லிக்கு வந்து காவல் நிலையத்தில் இருக்கும் மோகனைப் பார்த்தார்.

மோகனுக்கு வழக்கறிஞரைப் பார்த்ததும் அழுகை அழுகையாக வந்தது. மோகனைப் பார்த்து ஏது உனக்கு கத்தி? நீயே வாங்கி மடியில் வைத்திருந்தாயா? யாரைக் கொலை செய்யக் கத்தி வைத்திருந்தாய்? சென்னையிலிருந்து யாரைப் பார்க்க வேலூருக்குப் போகின்றாய்? வேறு யாரேனும் கத்தி வைத்திருந்தனரா? அதை வாங்கி நீ குத்தினாயா? அல்லது வேறு ஒருவர் கொலை செய்து உன்னை சிக்கலில் சிக்க வைத்தனரா?" இன்னும் பல கேள்விக் கணைகளைத் தொடர்ந்து கொண்டே இருந்தார் வழக்கறிஞர் கோவிந்தன்.

மோகனால் எதை, எப்படிச் சொல்வது. தேம்பி...தேம்பி... அழுவதைத் தவிர அவனுக் 5 வேறு ஒரு சொல்லையும் உச்சரிக்க முடியவில்லை. அவன் மனத்திலிருந்து உண்மையான வார்த்தைகள் வெளிவந்தால் அவனை அல்லவா மேலும் சிக்கலில் சிக்க வைக்கும்.

வழக்கறிஞர் கோவிந்தன் மறுநாள் வழக்கு மன்றத்தில் மோகனை ஜாமீனில் வெளிக் கொண்டு வர ரொக்க பணம் ரூபாய் இருபது ஆயிரத்தை எடுத்துக் கொண்டு வந்தபோது மோகன் வழக்கறிஞரின் இரு கால்களையும் இறுகப் பற்றி, தேம்பித் தேம்பி அழுவது எதற்கு என்று வழக்கறிஞர் கோவிந்தனுக்குத் தெரிய நியாயமில்லைதான்.



# காளியின் சக்தி

ஆலமரத்தடியில் உட்கார்ந்திருக்கும் அம்புஜம் கிழவிக்கு இங்குமா தொல்லை. காலை கதிரவன் கடும் கோபம் கொண்டது போல் கடும் அனலை வீசி அந்த அம்புஜம் கிழவி நிழலைத் தேடிவர, அங்கு இரண்டு மாணவர்கள் ஒருவருடன் ஒருவர் சண்டை இட்டுக் கொண்டிருந்தனர். அவர்கள் வாய்ச் சண்டை முற்றி, கைச்சண்டையாக மாறிடும் வேளை அம்புஜம் கிழவி அங்கு சென்று அந்த இருவரையும் மடக்கி திட்டி அறிவுரை கூறி அனுப்பினாள். இந்தச் செயலை அவள் அன்று செய்திருந் தாள்...

அவளின் பழைய நினைவுகள், அன்றைய உண்மை வாழ்க் கையைப் படம் பிடித்துக் காட்டியது. ஆம். இன்று உடல் தளர்ந்து, உள்ளம் தளர்ந்து, ஆணவம் அழிக்கப்பட்டு, அகம் பாவம் பொசுக்கப்பட்டதை அவள் நினைக்காமல் எப்படி இருப்பது.

செல்வராஜ், முத்துராஜ் என்ற இரண்டு மகன்களும் கிழவி யின் மூத்த, இளையபிள்ளைகள், செல்வராஜ், எதிலும் அவசரக் காரன் கிழவியைப் போல். ஆனால் முத்துராஜோ அவன் அப்பனைப் போல் சற்று நிதானமும், அடக்கமும் உடையவன், யார் செத்தாலும் பரவாயில்லை, தன் வீடும், தன் காடும் செழிக்க வேண்டும் என்று எண்ணுபவன் செல்வராஜ்.

கோபங்களையும் தாபங்களையும் பொறுத்துக் கொள்ளும் முத்துராஜின் இனிய நண்பன் பொன்னுசாமி. பெயர்தான் பொன்னுசாமி என்பதில்லை, மனமும் பொன் போன்றதுதான். முத்துராஜும், பொன்னுசாமியும் இணைபிரியா நண்பர்களாக வாழ்ந்து வந்தபோது ஒரு நாள் பொன்னுசாமியின் வயல் காட்டில் முத்துராஜுவின் ஆடுகள் மேய்ந்து கொண்டு இருப்பதை இருவருமே பார்த்தார்கள். இருவருமே அதைச் சேர்த்துத் துரத்தினார்கள்.

அன்று மாலை மந்தைக்கு வரவேண்டிய ஆடு வரவில்லை யாதலால் அம்புஜம் கிழவி ஆட்டை வலைபோட்டுத் தேடினாள்

பொன்னுசாமியின் வீட்டோடு நெடுநாள் பகை கொண்ட ஆடு மேய்க்கும் வள்ளிமுத்து, அந்த நாள் எப்பொழுது வரும் என்று எண்ணி ஏங்கிக் கொண்டிருந்தான். அந்த நாளும் வந்தது.

இந்த நாளை எதிர்பார்த்துக் கொண்டு இருந்த வள்ளிமுத்து, இந்த நிகழ்ச்சியைக் கவனித்து இதுதான் நல்ல சந்தர்ப்பம் என்று நினைத்து முத்துராஜின் ஆட்டை மந்தைக்கு வரும் வழியில் மடக்கிவிட்டான். தினமும் மந்தைக்கு வந்து சேரும் ஆடுகளில் நன்கு வளர்ந்த அவர்களுக்கு ராசியான ஆடு வராததால் அம்புஜம் கிழவி பதைபதைத்துப் போனாள். மகன்கள் வீட்டிற்குத் திரும்பியதும், விஷயத்தைச் சொன்னாள். அவர் களும் தேடிப் பார்த்துச் சோர்ந்து போய் வீடு திரும்பி வந்து கொண்டிருந்த வேளையில் முத்துராஜின் மூளையில் மின்னல் வெட்டியது.

காலையில் நடந்த நிகழ்ச்சியை எண்ணிப் பார்த்தது அவன் மனம். ஒரு வேளை இப்படி இருக்குமா? பொன்னுசாமியின் வயலில் முத்துராஜ் வீட்டு ஆடு மேய்ந்ததை இருவரும் சேர்ந்து தான் துரத்தினார்கள். ஒரு வேளை அதற்காக நம் ஆட்டை மறைத்து வைத்து விட்டானா? அப்படியெல்லாம் செய்யக் கூடிய வனில்லையே. பின் எப்படி தினமும் ஒழுங்காக வரும் ஆடு, இன்றைக்கு வராமல் போய் விட்டது! அந்த ஆடுதான் அவர்கள் வீட்டில் முதன் முதலாக வாங்கியது. அதன் பிறகுதான் அவர்கள் வீட்டில் ஆடுகள் விருத்திக்கு வந்தது என்று அவன் அம்மா அம்புஜம் அடிக்கடி சொல்லுவாள். காலையில் நடந்ததை அம்மாவிடம் சொல்லிப் பார்ப்போம் என்று சோர் வாக வீட்டிற்கு வந்தான். மகன் சொன்ன விஷயத்தைக் கேட்ட அம்புஜம் எண்ணெயில் போட்ட கடுகாக வெடித்தாள். இரு இப்போதே, போய் அநத பொன்னுசாமியை நாக்கைப் பிடுங்கிக் கொள்கிறாப் போல நாலு வார்த்தை நறுக்குனு கேட்கிறேன்'' என்று ஆவேசப்பட்டாள்.

அதற்குள் அங்கு வந்த இளைய மகன் தடுத்தான். ''இருக் கட்டும் அம்மா; எல்லாம் காலையில் பார்த்துக் கொள்ளலாம்; இருட்டி விட்டது; நாளை காலையில் ஒருமுறை பார்த்துவிட்டு வேண்டுமானால் விசாரிக்கலாம். இப்போது வேண்டாம்'' என்று தடுத்து விட்டான். பொழுது விடிந்தது. இவர்கள் மூன்று பேர் மட்டும் தூங்கவில்லை. எப்படி பொன்னுசாமியைக் கேட்பது என்று தலையைப் பிய்த்துக் கொண்டார்கள். காரணம்

பொன்னுசாமி அப்படிப்பட்ட ஆள் இல்லை. ஊருக்குள் அவனுக்கு நல்ல மதிப்பு, மரியாதை, செல்வாக்கு உண்டு. நல்ல மனிதன், மத்தியஸ்தன் என்று வேறு பெயர் வாங்கியவன். ஆட்டை அவன்தான் திருடினான் என்று யாரும் கண்ணால் பார்க்கவில்லை.

அப்படியிருக்க எப்படிப் போய் கேட்பது என்றுதான் யோசித்தார்கள். முடிவில் அம்புஜமே தான் போய்க் கேட்கிறேன் என்று புறப்பட்டாள், பொன்னுசாமியின் வீட்டில் குழந்தைக்குப் போன வருடம் அம்மை போட்டு ரொம்பவும் முடியாமல் போனதால் பொன்னுசாமியின் மனைவி முனியம்மாள் அவர்கள் குலதெய்வத்திற்கு கடா வெட்டுவதாக வேண்டிக்கொண்டு இருந்ததால் அந்தப் பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்காக ஊர் எல்லையில் இருந்த காளியம்மன் கோவிலுக்குக் குடும்பத்தோடு விடியற்காலையிலேயே கிளம்பிச் சென்றுவிட்டார்கள்.

அம்புஜம் போனபோது வீடு பூட்டியிருந்தது. அம்புஜம் சுபாவத்திலேயே ஒரு மாதிரியான ஆள். கோள் சொல்வது ஒன்றை ஒன்பது என்று, கற்பனை செய்வதில் அதைக்கதை கட்டி விடுவதில் தேர்ந்தவ; இவளால் பல குடும்பங்கள் சீரழிந்து இருக்கிறதே தவிர இவளால் ஒரு குடும்பமும் சீர்பட்டது இல்லை.

அப்படிப் பட்டவருக்குச் சொல்லவா வேண்டும். ஒன்றும் ஒன்றும் இரண்டு என்பதை விட நான்கு என்றே சேர்த்துக் கூட்டிய அம்புஜம், நம் ஆட்டைத்தான் திருடி பிரார்த்தனைக்கு எடுத்துச் சென்றிருக்கிறார்கள் பொன்னுசாமி குடும்பத்தினர் என்று முடிவு கட்டி மகன்களிடம் சொன்னாள். அவர்களும் இதை ஒப்புக் கொண்டு பொன்னுசாமியை எந்த விதத்தில் பழி வாங்கலாம் என்று யோசனை செய்யத் தொடங்கினார்கள். அடுத்த வாரத்தில் ஒரு நாள் செல்வராஜும் பொன்னுசாமியும் வழியில் எதிரும் புதிருமாகச் சந்திக்க நேர்ந்தது.

பொன்னுசாமியின் மனதில் ஒன்றும் இல்லாததால் "என்னப்பா செல்வராஜ், ஆடு ஒன்று காணவில்லை என்று கேள்விப் பட்டேனே கிடைத்ததா?" என்று சாதாரணமாக விசாரித்தான். அவ்வளவுதான் அமுங்கிக் கிடந்த ஆத்திரம் தலை தூக்கியது. "ஒன்றும் தெரியாதது போல் கேட்கிறாயே பொன்னுசாமி. அதுதான் காளியம்மனுக்குக் காணிக்கையாகி விட்டதே. இதற்கு நான் பழி வாங்காமல் விடமாட்டேன்" என்று ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் கருவிவிட்டுச்

சென்றான். பொன்னுசாமிக்கு ஒன்றும் புரியவில்லை. சரி ஏதோ சொல்கிறான்; பிறகு தீர விசாரித்துக் கொள்ளலாம் என்று விட்டுவிட்டான்.

இவர்கள் எண்ணப்படியே அந்தக் கிராமத்தில் ஆடுகளுக்குத் காமாலை நோய் பரவி எதிர்பாராத விதமாக அம்புஜம் வீட்டு ஆடுகள் அதிக அளவில் இறந்து விட்டன. இதற்கெல்லாம் காரணம் அந்தப் பொன்னுசாமிதான் என்று மூன்று பேர் மனதிலும் பேயாட்டம் ஆடியது. இதற்கு ஒரு முடிவு கட்டுவது போன்ற அந்த நிகழ்ச்சியும் நடந்தது.

அம்புஜத்தின் அண்ணன் கார்மேகம் அவன் மகள் லட்சுமியை முன்பு தருவதாகச் சொல்லி, பிறகு பணக்கார இடம் வந்து விட்டது என்று மகளை செல்வராஜுக்குக் கொடுக்க மறுத்து விட்டார். இது வேறு மனதைப் பெரிதும் வாட்டியது. இதற்கும் காரணம் பொன்னுசாமிதான் என்று முடிவு எடுத்து அவனை எப்படியாவது தீர்த்துக் கட்டிவிட வேண்டும் என்று சொன்னான் செல்வராஜ். இந்த யோசனைக்குத்தூபம் போட்டாள் அம்புஜம். நேரடியாகக் கொன்றால் கொலை பழிப் மகன்கள் மீது விழும்; பின்பு போலீஸ் கேஸ் என்று மகன்கள் சிறைச்சாலைக்குச் செல்ல நேரிடும்; அதனால் அம்புஜம் ஒரு யோசனை சொன்னாள்.

செல்வராஜும், முத்துராஜும் பொன்னுசாமியின் வீட்டிற்கு எதிரே ஒருவரையொருவர் அடித்துக் கொள்வது என்றும், அதைப் பார்த்துக் கொண்டு பொன்னுசாமி சும்மா இருக்க மாட்டான் என்றும் இவர்களை மடக்க வருவான்; அப்போது மறைத்து எடுத்துக் கொண்டு சென்ற கத்தியால் பொன்னுசாமி யைக் கொலை செய்துவிடவேண்டும் என்றும் திட்டம் தீட்டினர். இதை யாரும் சந்தேகப் படமாட்டார்கள்; ஏனென்றால் மடக்க வரும்போது எதிர்பாராத விதமாகக் கொலை நடந்து விட்டது என்று பஞ்சாயத்தில் தீர்ப்பாகிவிடும் என்று கணக்குப் போட்டு யோசனை சொன்னாள் தீயபுத்தி கொண்ட அம்புஜம் கிழவி. அந்த ஊர் காளியம்மனின் சக்தி வேறு விதமாக விளையாடியது.

பொன்னுசாமி வீட்டில் இருக்கும் நேரத்தைப் பார்த்து செயல்பட ஆயத்தமாயினர். போகும் போது அம்புஜம் கிழவி செல்வராஜின் கையில் ஒன்றும் இல்லாததைக் கண்டாள். ''ஏன் எந்த ஆயுதமும் கொண்டு போகவில்லை.'' என்று கேட்டாள். 'முத்துராஜிடம் இருக்கிறது. அவன்தான் இதற்கு சரி' என்றான்.

கிழவிக்குப் போதாத காலம் நெருங்கி விட்டதால், எதற்கும் உன்னிடமும் ஒரு ஆயுதம் இருக்கட்டும். அவன் குத்த தவறி விட்டால், நீ இந்த தடியால் அவன் தலையில் போடு; பொன்னுசாமி இறந்து விடுவான் என்று கூறி அழிவுக்கு வழி வகுத்தாள் அம்புஜம் கிழவி.

சூரியன் மறையும் நேரமாகப் பார்த்து சகோதரர்கள் இருவரும் சண்டையை ஆரம்பித்தனர். மேலும் மேலும் சூடு பிடித்து அடிதடியில் இறங்கும் நேரமாகப் பார்த்து, பொன்னு சாமி, இவர்கள் சண்டையில் குறுக்கே பாய்ந்தான். இதுதான் சமயம் என்று செல்வராஜும் முத்துராஜும், ஒரே வேகத்தில் செயல்பட்டார்கள்.

அந்த நேரம் பார்த்து பொன்னுசாமியின் காலை பெரிய கட்டெறும்பு கடித்ததால் சற்றே குனிந்து காலைத் தேய்க்கவும், பொன்னுசாமிக்கு வைத்த குறி தவறி இருட்டும் நேரமாக இருக்கவே முத்துராஜின் கத்தி செல்வராஜின் மார்பிலும் செல்வராஜின் இரும்புத்தடி முத்துராஜின் தலையிலும் பலமாக விழ இரண்டு பேருமே மண்ணில் சாய்ந்து விட்டார்கள்.

இதை சற்றும் எதிர்பார்க்காத பொன்னுசாமி பிரமித்து நின்று விட்டான். இதற்குள் கூட்டம் கூடி அம்புஜம் கிழவிக்கு சேதி போனது. அலறி அடித்துக் கொண்டு வந்து பார்த்தாள். விதி வென்றுவிட்டது. கெட்ட எண்ணங்களையும் தீய செயல் களையும் மகன்களுக்குப் போதித்து அழிவுக்கு வழிவகுத்த அம்புஜம் இரண்டு மகன்களையும் இழந்து இன்று இந்த ஆலமரத்தடியில் தனிமரமாகக் காலத்தை ஓட்டுகிறாள்.

நல்ல எண்ணங்களையும் நல்ல குணத்தையும் கொண்ட பொன்னுசாமியின் குடும்பம், ஆல்போல் தழைத்து அருகு போல் வேர்விட்டு நல்ல முறையில் சிறந்து இருக்கிறது.

அன்று ஒரு ஐநூறு ரூபாய் ஆட்டுக்குப் பழி வாங்க நினைக் காமல், நாம் கண்ணால் காணவில்லை. சரி விட்டு விடுவோம் என்று மகன்களுக்கு நல்ல புத்தியைக் கூறாமல், தாமே மகன் களைத் தூண்டிவிட்டு, சாவதற்குக் காரணமாகி இன்று நடுத் தெருவில் நிற்கிறோம். காளி அம்மா நல்ல தீர்ப்பைத்தான் காண்பித்தாள் என்று எண்ணினாள் அம்புஜம் கிழவி.

# சம்மதம்

வாழ்க! வாழ்க! என்ற ஓசையுடன் தெருவெங்கும் ஏகப் பட்ட கூட்டம். அந்தக் கூட்டத்தில் வெற்றி சலசலப்பு. மகிழ்ச்சி ஆரவாரம் ஊர்வலம் புறப்படும் நேரம் நெருங்கி விட்டது.

அந்தக் கூட்டத்தின் தலைவர் இராமலிங்கமும் மதசம்பந்தப் பட்ட இந்த ஊர்வலத்திற்கும் தலைமை தாங்கி ஊர்வலத்தை வழி நடத்திச் செல்ல முற்பட்டார். மக்கள் கூட்டம் அவரின் பின் எழுச்சியோடு கூடிய ஆர்வத்தில் கம்பீர நடை போட்டுக் கொண்டிருந்தது.

தலைவர் இராமலிங்கத்தின் மார்பில் ஒரு குறிப்பிட்ட மதச் சின்னம் பளிச்சென்று இருந்தது. கூட்டத்தினரிடம் உள்ள கைகளில் குறிப்பிட்ட மதத்தின் கொடி பட்டொளி வீசிப் பறந்தது.

காவல்துறை அதிகாரிகள் ஊர்வலத்தைக் கட்டுப்படுத்தி அமைதி காக்கத் தத்தம் கடமைகளில் ஈடுபட்டுக் கொண்டு இருந்தார்கள். சாதி சமய அடிப்படையில் இந்த ஊர்வலம் நடைபெறுவதால், காவல்துறை அதிகாரிகள் மிக கவனத்துடன் தான் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்து கொண்டு இருந்தார்கள்.

ஊர்வலம் அம்பத்தூர் பஸ் நிலையத்திலிருந்து புறப்பட்டு அறிஞர் அண்ணா நகர் வழியாக அமைந்தக்கரையை அடைந்து, அங்கிருந்து, நுங்கம்பாக்கம் ரயில் பாலம் வழியாக அண்ணா சாலையை அடைந்து, அங்கிருந்து கடற்கரையை நோக்கிச் சென்று சீரணி அரங்கத்தில் பேரணி விழா நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது.

அந்தக் கூட்டத்தின் தலைவரும், அந்த ஊர்வலத்தின் தலைவருமான இராமலிங்கம், கூட்டத்தை வழி நடத்தி மிக கம்பீரமாக சிங்கநடையுடன், புலியின் பாய்ச்சலுடன் கம்பீரமாக நடந்து கொண்டு இருந்தார்.

சீரணி அரங்க கூட்ட ஏற்பாடுகளை, அந்தந்த மாவட்டச் செயலர்களும், மாவட்ட அமைப்பாளர்களும் கவனித்துக் கொண்டார்கள். மின்விளக்கு ஏற்பாடு இரவை பகலாக்கியது. தோரண அலங்காரங்கள் தோகை மயில் சிறகடித்து ஆடியது போல் தோன்றியது. வெளிமாவட்டங்களிலிருந்து வந்த கார்களும், பஸ்களும் லாரிகளும் நிறுத்தி வைக்க ஒரு இடம். மக்கள் அமர திறந்தவெளி அரங்கத்தின் முன்பகுதியில் கம்புகளைக் கட்டி ஆண்களுக்கு ஓர் பகுதி பெண்களுக்கு ஓர் பகுதியென பிரிக்கப் பட்டிருந்தது.

ஊர்வலம் கடற்கரையை நெருங்க நெருங்கக் கூட்டத்தின் ஆரவாரத்தையும் எழுச்சியையும் காண காண தலைவர் இராமலிங்கத்திற்குத் தோளில் போட்டிருந்த துண்டு ஆயிரம் சவரன் நகையால் போடப்பட்ட மாலையைப் போல் தோற்றம் அளித்தது. தன் சாதி மதத்தைத் தவிர வேறு எந்த சாதி மத தலைவரானாலும் இப்படிப்பட்ட கூட்டத்தை நடத்த முடியாது என்ற எண்ணம் அவர் உள்ளத்திற்குள் ஏற்பட்டது.

சீரணி மேடையை நெருங்க இன்னும் சில நிமிடங்களே உள்ளன. காவல் துறையின் மிகப் பெரிய அதிகாரியான சைமன்ராஜ் கூட்டத் தலைவரின் பாதுகாப்பிற்கு உறுதுணையாக அவரைத் தொடர்ந்து வந்து கொண்டு இருந்தார். சைமன்ராஜின் வேகமும் சுறுசுறுப்பும் தன் கடமையை அதிகரித்தது. நீண்ட உருவம், பருத்த உடல், கம்பீரத் தோற்றமான சைமன்ராஜ் திடீரென்று மயக்கத்துடன் கீழே விழ, அவரை ஒட்டியே வந்த கூட்டத் தலைவர் இராமாலிங்கம் சட்டென்று அவர் கீழே விழாதவாறு தாங்கிப் பிடித்துக் கொண்டார். சைமன்ராஜ் அணிந்திருந்த அவர் மதத்தின் சின்னம் இராமலிங்கத்தின் நெற்றியில் பட்டது.

சலசலப்புக்கிடையே சைமன்ராஜைக் கைத்தாங்கலாக பாதுகாப்பிற்கு வரும் முதல் உதவி வண்டியில் ஏற்றி, அவருக்கு துணையாக தன் மெய்க்காப்பாளரான உயிருக்கு உயிரான கோபாலனை, சைமன்ராஜுவுடன் அனுப்பி வைத்தார், இராமலிங்கம். தனக்கு பாதுகாப்பு கொடுத்தவரின் உயிர் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது மனித தர்மம்; ஆனால் அதைவிட சைமன்ராஜ் மயக்கத்துடன் விழுந்த போது தன்னையும் மீறி ஒரு இயக்க சக்தி செயல்பட்டதே அது எது? என்பதை இராமலிங்கம் யோசித்துப் பார்த்தார்.

"உலகில் மனித நேயமே முதன்மையானது. ஒரு வெளி நாட்டு நபர் நம் 'நாட்டின் சிலரால் பாதிக்கப்படும்போது நம்

மனம் கொதித்து எழுந்து அந்த நபருக்கு பாதுகாப்பு கொடுக்கிறது. ஆனால் நம்முடைய நாட்டிலேயே பிறந்து வளர்ந்து வரும் மனிதன், மதம் என்ற பெயரால் பிரிக்கப்படுவதா?'' என்று இராமலிங்கத்தின் மனம் எண்ணத் தொடங்கியது மேலும் இராமலிங்கத்திற்கு உயர் காவல் துறை அதிகாரியின் ஆணையின் பேரில் சைமன்ராஜுக்குப் பதிலாக வேறு ஒரு காவல்துறை அதிகாரியை நியமித்திருந்தது. அவர் வேறுயாருமல்ல, தலைவருக்கு தெரிந்த முகம்தான். பெயர் முகமதுகான் என்ற ஒரு முகமதியர்.

தன் உயிரைக் காக்க பிற மதத்தினர் காவலராக இருக்கும் போது, தான் மட்டும் ஒரு மதத்தை வழி நடத்திச் செல்வது எந்த விதத்தில் நியாயம், நாமே பிற மதத்தவருக்கு நல்ல வழிகாட்டியாக இருந்தால்தானே, அவர்களும் நம்மைப் பின்பற்றுவார்கள். இந்திய நாட்டில் பிறந்தவன் ஒவ்வொருவரும் இந்தியனே. அவன் முகமதியனாகவோ, கிருத்துவனாகவோ இருப்பினும் இந்தியன் தான்.

அறியாமையால்நம் மதமே உயர்ந்ததென்று கொடிபிடிப்பது போல் அவனவன் தனக்கு சிறு பாதுகாப்பு கருதியே மதம் என்னும் கொடியைப் பிடிக்கின்றான். நம் நாடு சுதந்திரம் அடைந்து நாற்பத்தி ஏழு ஆண்டுகள் போனபின், இந்திய சுதந்திரக் காற்றை சுவாசித்த பின்னும் அவர்கள் வேறு மதம் நாம் வேறு மதம் என்பது எவ்வளவு பெரிய தவறு. தனக்கு ஏற்பட்ட உணர்வு பிற மதத்தவருக்கு வர நாமே காரணமாக இருப்போம். இனி ஒரு பொழுது இருபது கோடி முகமதியர் பாகிஸ்தானையோ பலகோடி கிருத்துவர் ரோமையோ நாடிப் போக முடியாது. இதைப் போல் பிறமதத்தவர் அந்த அந்த நாட்டை நாடிப் போகமுடியாது. நாமும் அவர்களைப் பிரிந்து வேற்றுமைப்படுத்தி வாழ முடியாது. நமக்குள் ஏற்படும். சகோதரப் பிணக்குகளை நாமே சமாதான முறையில் தீர்த்துக் கொள்ள வேண்டுமே அன்றி, நமக்குள் வேற்றுமை இனி வேண்டவே வேண்டாம்.

''பரம்பரையாக வரும் மத இனப்பெருக்கத்தை விட மத மாற்றத்தால் வரும் பெருக்கம் அதிகரிக்க காரணம் என்ன? நம் நாட்டில் எத்தனை சாதி, எத்தனை மதங்கள், எத்தனை பிரிவு? இதற்கெல்லாம் காரணம் யார்? நாம் இதற்கு சம்பந்தப் பட்டவர்கள் இல்லையென்றால் வேறு யார்? ஒரு பிரிவு மதக் காரர்களை கோவிலுக்குள் மறுபிரிவு மதத்தவர் சேர்க்காததற்கு குறுகிய மனப்பான்மை, குறுகிய எண்ணங்கள் தானே, இதில்

எது உயர்வானது? எது தாழ்வானது? மனிதன் எண்ணங்கள் உயர்வான போது அவன் செயல்கள் உயர்வாகிறது.

மனித எண்ணங்கள் குறுகியபோது மதம் என்னும் மதம் மனிதனை ஆட்கொள்கிறது. தனக்கு பாதுகாப்பாக இருக்கும் ஒரு முகமதியனோ அல்லது புத்தமதத்தை, ஜைன மதத்தை சார்ந்தவனோ, அரசாங்க வேலைக்காக, சம்பளத்திற்காக மட்டும் செயல்படவில்லை. அவன் உள்ளுணர்வு முழுவதும் ஒருவன் பாதுகாக்கப்பட வேண்டும் என்பதே. அதே உணர்வு மனிதன் எல்லாருக்கும் வரவேண்டும். அர்த்தமற்ற எல்லா மத கோஷங்களும், ஆர்ப்பாட்டங்களும் நம் மனித நேய உரிமையை வீணடிக்க பயன்படுமே அன்றி நம்மை வாழவைக்க பயன்படாது ஆகவே இந்த கோஷம் வேண்டாம்'' என்ற எண்ணம் உள்ளத்தில் எழ, தலைவர் இருக்கையில் அமர்ந்திருந்தார். தலைவர் இராமலிங்கம். தலைவரின் எழுச்சிமிகு பேச்சைக் கேட்டு மக்கள் ஆர்வத்தோடு காத்து இருந்தனர். தலைவரும் பேசத் தொடங்கினார்.

''அன்பார்ந்த என் உயிரினும் மேலான தாய்க்குலமே! என் உடன்பிறப்புக்களே! இங்கு நான் சில கசப்பான உண்மைகளை சொல்ல ஆசைப்படுகின்றேன். இந்த நாடு யாருடையது? நம்முடையது.இந்த நாட்டில் விளையும் பொருள்கள் அனைத்தும் நமக்கே சொந்தம். அப்படியிருக்க இந்த நாட்டில் உற்பத்தியான எல்லா உயிர்களும் நமக்குத்தானே சொந்தம். உயிரில் உயர்வு ஏது? தாழ்வு ஏது?

பூச்சி புழுவைக்கூட கொல்ல மறுக்கும் இனம் நம் இந்திய இனம். அப்படியிருக்க நம்முடன் பிறந்து, நம்முடன் வாழும் பிற மதத்தவரை ஒழிக என்பதும் எவ்வளவு பெரிய தவறு. நீர் நிலம், காற்று, ஆகாயம், நெருப்பு ஆகியவைகள் வேற்றுமை பார்த்து தன் கடமையை செய்யாதபோது மனித இனமான நாம் வேற்றுமை பார்த்து வாழ்வது பாவம் அல்லவா!நாம் கட்டுகின்ற கோவிலுக்குள் செல்ல நமக்குள் ஏன் வேற்றுமை? அந்நிய நாட்டை தழுவிய மதத்தை சேர்ந்த பிரிவினர் இன்று இல்லையானால் என்றாவது ஒரு நாள் நல்ல உணர்வு கொண்டு வேற்றுமையை மறப்பர்.

அவர்களின் மனதை மாற்றி நம்மிடம் வேற்றுமை இல்லாத நிலமையை இனி நாம் செய்வோம். ''காக்கை குருவி எங்கள் சாதி'' என்ற இந்த நாட்டிலா மத உணர்வு? இனி எம்மதமும் சம்மதம் என்று நினைத்தால் மட்டும் போதாது. அந்த உணர்வை பிற மதத்தினரை பார்க்கும் போது நினைக்க வேண்டும். அண்ணல் காந்தி மகான் காட்டிய அறவழியில்

நடப்போம். மனம் திருந்தி வரும் மாற்றமே உண்மையான மாற்றம். அதுவே உண்மையான புரட்சி. அந்த புரட்சி இனி தொடர நாம் அனைவரும் ஒரு மதம் என்ற எண்ணத்தில் செய்படுவோம். அதுவே அன்பு மதம்.

தெருவுக்கு ஒரு சாதி. ஊருக்கு ஒரு மதம், நாட்டிற்கு ஒரு கோட்பாடு என்பதை மறந்து, நாம் எல்லோரும் இந்த நாட்டு மன்னர்கள் என எண்ணி, அவரவர் வழியில் நாம் தலையிட்டு போர்க்களமாக்காமல் நல்லதை சொல்லி நாட்டை உயர்த்து வோம் அதுவே இந்திய தாய்க்கு ஒவ்வொரு குடிமகனும் செய்ய வேண்டிய கடமையாகும்.

உலகத்தில் இன்னமும் பல நாடுகள் அறியாமை இருளில் மூழ்கி தன் மதம். இனத்தை பேசி வாழ்ந்து வருகிறது. அந்த நாட்டிற்கும் அந்த நாட்டு மக்களுக்கும் நாம் ஏற்றி வைக்கும் ஒளி அவர்களின் அறியாமை இருளை அகற்றட்டும்'' என்று கூறி முடித்தார் இராலிகம்.

ஆர்வத்தோடு புறப்பட்ட கூட்டம், மிக அமைதியாக ஆன்மீக உணர்வோடு, தெய்வீக சக்தியோடு தம் இல்லம் நோக்கி வந்த மக்கள் ''இனி ஒரு வழி செய்வோம். சாதி மதத்தைத் துறந்து மனித நேயத்தோடு வாழ்வோம்'' என்று ஒரு உறுதி முடிவோடு இல்லம் திரும்பி வந்தார்கள். எதிலும் நல்வழி காட்டும் இந்தியா, இதிலும் நல்வழி காட்டும்.



# அறியாமை

காலை சூரியனை வணங்கிவிட்டு, ஆற்றங்கரையைவிட்டு தன் குடிசை வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான் இன்பராசன்.

காலை முதல் இரவு வரை சிவபெருமானையே நினைத்துக் கொண்டு இருக்கும் நோக்கம் 'தான் தன் வாழ்நாளில் மிகப் பெரிய மாடி வீட்டில் வசிக்க வேண்டும். அதைப் பார்த்து நம் சுற்றத்தார் தன்னைப் புகழ்ந்து பேச வேண்டும்' என்று நினைத்து ஆண்டவனை தொழுது கொண்டு இருந்தான்.

அவன் பெயரும் இன்பராசன், இராஜ பரிவாரத்தோடு இன்பத்தை அனுபவிக்காவிட்டாலும் சகல வசதி மிகுந்த மாடி வீட்டில் வாழவேண்டும் என்ற எண்ணம் இருக்காதா என்ன? ஆற்றங்கரை மணலில் கால்ஊன்றி நடந்து கொண்டிருந்த அவன் காலில் ஏதோ ஒரு வெளிச்சத்துடன் ஒரு பொருள் தென்பட்டது. அதை குனிந்து தன் கையில் எடுத்தான், இன்பராசன். அதை எடுத்துக் கொண்டு நடக்க முற்பட்டபோது அசரீரி ஒரு குரல் கேட்டு திரும்பிப் பார்த்தான். சுற்றும் முற்றும் யாரும் தென்பட வில்லை. இவனும் சிறிது தூரம் நடந்து பார்த்தான் அதே போன்றதொரு குரல் கேட்டது.

''கேட்டவரத்தை ஒரு முறை கொடுத்து விட்டு மறைந்து விடும் வைரக்கல்லை பெற்று இருக்கும் மனிதரே! நீ பல நாட் களாக நினைத்து ஏங்கிக் கொண்டிருக்கும் மாடி வீட்டை தரவே இறைவன் இந்த வைரக்கல் மூலம் ஆணை பிறப்பித்து இங்கு அனுப்பியுள்ளான். இதை நீ உன் நெற்றியின் நடுப்பகுதியில் பதியவைத்து உனக்கு வேண்டிய மாதிரியுடன் கூடிய மாடி வீட்டை பெறலாம். நீ இந்த வரம் பெறும் போது உன் அருகில் வேறு யாரும் இருக்கக் கூடாது. நீ வரம் கேட்கும் இடம் பொது இடமாகவும் திறந்த வெளியாகவும் இருக்கவேண்டும்!'' என்று வானத்திலிருந்து அசரீரீ கூறியதைக் கேட்டதும், இன்ப ராசனின் இனிய வாழ்க்கையில் இன்பம் பொங்கியது. அவனுக்கு இந்த வரத்தை எப்பொழுது கேட்பது என்று கால நேரத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தான்.

வைரக்கல் கிடைக்கும் முன் இருந்த நிம்மதியை விட இப் பொழுது அவன் மனதில் பெரும் குழப்பம் ஏற்பட்டு மனம் தடு மாறிக் கொண்டு இருந்தது, மன நிம்மதிக்காக பக்கத்து ஊரில்

இருக்கும் சினிமா படம் பார்க்கச் சென்றான். அது பழைய காலத்து ராஜாக்களின் கதை. அந்த சினிமாக் கதையில் வரும் அரண்மனை, அவன் மனதிற்கு மிக மிகப் பிடித்திருந்தது.

இராஜ கம்பீரத்துடன் தர்பாரில் ராஜா வீற்றிருக்கும் காட்சியைவிட அந்த தர்பார் இருக்கும் அழகே அழகு, தர்பாரில் எப்பக்கம் திரும்பினாலும் அழகுமிகு வேலைப் பாடுகள் அமைந்த கலைக்கூடங்கள். பளிங்கு தரையில் மின்னும் பட்டு விரிப்புக்கள். கம்பீரமாக நிற்கும் தூண்கள் நாள் முழுக்க முழுக்க கண் கொள்ளாக் காட்சி. பார்த்து கொண்டே இருக்கலாம் என்ற ஆவலைத் தூண்டும் பொலிவுமிகு கலை வேலைப்பாடுகள் நிறைந்த அமைப்பு.

அரண்மனைக்குள்ளேயே நிலாமுற்றம் போன்ற வடிவ அமைப்புக்கள். கண்ணுக்கு விருந்தளிக்கும் அந்த தர்பாருக் குள்ளேயே மாடிப்படிகளுடன் அமைப்புகள்! அந்த சினிமாவில் வரும் அரண்மனை தர்பாரை நினைத்து நினைத்து அவன் மனம் பரவசமடைந்தது.

சினிமா படம் பார்த்த மறுநாள், தனிமையை நாடிச் சென்றான். தன்னுடன் வேறு நபர் வராத அளவிற்கு தன்னைத் தயார் செய்து கொண்டு, ஒரு திறந்த வெளிப்பகுதியைத் தேடிப் போனான். அவன் மனதிற்குப் பிடித்த மாளிகை அமைக்கும் அளவுள்ள இடத்தைத் தேர்வு செய்தான். இடம் தேர்வு ஆனது; தன்னுடன் வேறு யாருமில்லை. ஆகவே வரம் தரும் வைரக் கல்லை மடியிலிருந்து எடுத்து நெற்றியில் வைத்துப் பதிக்கச் செய்து "நான் நேற்று இரவு சினிமாவில் பார்த்த ராஜ தர்பா ருடன் கூடிய அதே மாளிகை வேண்டும். அதை எனக்குத் தா" என்று நினைத்தான். நெற்றியில் வைத்த வரம் தரும் வைரக்கல் தன் வேலையைச் செய்தது.

அவன் மனதில் நினைத்ததைப் போன்று இரவு சினிமா காட்சியில் வரும் அரண்மனை மாளிகை திறந்த வெளியில் கம்பீர மாகக் காட்சி தந்தது. அவன் நெற்றியில் வைத்திருந்த வைரக் கல்லும் மாயமாய் மறைந்தது.

மனக்கோட்டையில் கட்டிய மாளிகை கிடைத்துவிட்ட மகிழ்ச்சியில் இன்பராசன் மாளிகைக்குள் சென்றான். அந்த மாளிகை முழுக்க முழுக்க மரத்தால் செய்யப்பட்டு, சரிகை வேலைப்பாடுகள் நிறைந்து கலர் கலர் ஜிகினாக்கள் பளிச்

சென்று மின்னியது. படிகள் உண்டு, படிகள் மீது விரிப்பு உண்டு. ஆனால் மாடி மட்டும் இல்லை. கம்பீரமாக தூண்கள் அட்டை யால் செய்யப்பட்டு சரிகைகள் கொண்ட சித்திர வேலைகளைப் பெற்றிருந்ததைப் பார்த்த இன்பராசனுடைய மனக்கோட்டை மரஅட்டைகளால் ஆனது. அவன் கற்பனை மாளிகையில் முடிய வில்லை. அவன் தலை சுற்றுவது போல் மட்டுமா இருந்தது. இல்லை, இந்த உலகமே சுற்றுவது போல் இருந்தது.

குக்கிராமத்தில் வசிக்கும் அவனுக்கு சினிமாவில் வரும் காட்சிகள் உண்மை என்று நம்பியது தவறு, என்று அவனுக்குத் தெரியவர நியாயம் இல்லைதான்.



# உண்மை

''கேட்ட வரம் தரும் பிள்ளையார் அப்பா! என் பையனுக்கு ஒரு நல்ல வேலை வாங்கி தாப்பா''—என்று தலையில் காய்கறிக் கூடையைச் சுமந்துகொண்டு கூறினாள் காந்திமதி. தெருத்தெரு வாகக் காய்கறி விற்று, அதில் வரும் காசைக் கொண்டு தன் மகனை நன்கு படிக்க வைத்தாள் காந்திமதி. கணவனை இழந்து விதவையானது ஒரு சுமையாகவோ தெருத்தெருவாக காய்கறிக் கூடையைச் சுமப்பது ஒரு சுமையாகவோ தோன்றவில்லை அந்த அம்மாளுக்கு. தன் மகன் பட்டப்படிப்பு படித்து ஒரு நிரந்தர வேலை இல்லாமல் இருப்பதே பெரும் சுமையாகத் தோன்றியது.

''டேய் கண்ணு, என் ராசா! மனசை தளரவிடாமல் வேலை தேடப்பா! உழைத்துத்தான் வாழ்க்கையில் முன்னுக்கு வரணும், ஊரை ஏமாத்தி வாழ ஒரு நாளும் எண்ணக்கூடாது. கால் வயிறு கஞ்சியானாலும் பரவாயில்ல, அது கஷ்டப்பட்டதாக இருக்க வேண்டும். கஷ்டப்படாம பால் பாயாசம் சாப்பிடுவது பெரிய துரோகமுன்னு என்னை வளர்த்தவங்க சொன்னாங்க. அதையேதான் உனக்கும் சொல்றேன்!'' என்று அம்மா சொல்லி முடித்ததில் அர்த்தம் உண்டுதான். அது இந்தக் காலத்திற்கு ஒத்து வருமா? யோசிக்க வேண்டியதுதான் என்று தனக்குள் எண்ணிக் கொண்டான் ஜோதிலிங்கம் என்கிற ஜோதி.

அப்பா முகத்தைப்பார்த்து அறியாதவன். அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் கேலி கிண்டலை எல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் கருத்தோடு படித்து இன்று ஜோதிலிங்கம் பி. காம்., என்று போட்டுக் கொள்ளும் அளவிற்குத் தன்னை ஆளாக்கியது தாய். சாதாரண தாயல்ல. அவள் தெய்வத் தாயாகத்தான் இருக்கவேண்டும்.

அடுப்பு எரியாத நாட்கள் பல உண்டு அவன் வீட்டில்: ஆனால் அவன் வயிறு காய்ந்த நாளில்லை; வெறும் தண்ணீரை மட்டும் குடித்து விட்டு வயிறு நிரம்பியதாகப் பொய் சொல்லுவ துண்டு அவன் அம்மா. ஆனால் அவன் வயிறு நிறையவும் அவன்

அறிவு வளரவும் அவள் பட்டபாடு அப்பப்பா சொல்லிமாளாது. சொன்னால் உங்கள் இதயம் தாங்காது.

''கண்ணு ஜோதி, நீ போயி என் பையிலே ரூபாய் பத்து இருக்கு. அதை எடுத்துக்கொண்டு போயி காளியம்மன் கோவில் வாசலில் இருக்கும் பஞ்சாங்க ஜோதிடரைப் பார்த்து, உன் நேரம் எப்படி இருக்கு, எப்பொழுது வேலை கிடைக்கும் என்று கேட்டுத் தெரிந்து வா'' என்று கூறினாள் அம்மா.

ஜோதி காசு எடுத்துக்கொண்டு, அம்மா சொன்ன பஞ்சாங்க சோதிடரை நோக்கிப் போனான். அவர் ''சுக்கிரன், சூரியன், சனி ஆகிய கிரகங்கள் சாதக நிலையில் உள்ளார்கள். தொழிலில் லாபம் குறையாது. உத்தியோகத்தில் உயர்வு கிடைக்கும். கணவன் மனைவி உறவு பலப்படும். மனைவி மூலம் வரவு வரும். அலைச்சல் குறைந்து இன்னும் மூன்று வாரத்தில் இன்னும் பல நன்மைகள் உண்டாகும்'' என்று கூறினார்.

ஜோதிலிங்கத்திற்கு எதைப் பேசுவது என்றே புரியவில்லை. தான் கேட்க வந்தது ஒன்று, சோதிடர் கூறுவது மற்றொன்று. ''ஐயா நான் கேட்க வந்தது என்ன என்றால் இன்னும் வேலை கிடைக்கவில்லை. அது எப்பொழுது கிடைக்கும் என்று பார்த்துச் சொல்லுங்க'' என்றான் விரக்தியோடு ஜோதிலிங்கம்.

''அதான் சொன்னேனே, இன்னும் மூன்று வாரத்தில் பல நன்மைகள் உண்டு என்று, அதை வைத்தே நீ புரிஞ்சுக்கலாமே, எல்லாம் நன்மையாக முடியும்; பகவானை வேண்டிக்கங்கோ'' என்று சோதிடர் கூறி முடித்தார். சோதிடர் மேல் எந்தத் தப்பும் இல்லை. பஞ்சாங்கத்தில் இருப்பதைத்தானே அவர் சொல்வார். பஞ்சாங்கம் என்பது யோகம், திதி, நட்சத்திரம், கரணம், வாரம இந்த ஐந்தும் தானே. பஞ்சாங்கம் நம் பலனை மட்டும் தானே சொல்லும்; அது என்ன என் வரலாற்றையா கூறும்? என்று மனதுக்குள் எண்ணிக்கொண்டே வீட்டை நோக்கி வந்தான் ஜோதி.

பஞ்சாங்க சோதிடர் கூறிய மூன்று வாரத்தைப் பற்றி அம்மாவிடம் கூறிவிட்டு வேலையைத் தேடிப் புறப்பட்டான். மூன்று வாரங்கள் போய் மூன்று மாதங்கள் ஆனது. வேலை கிடைத்தபாடில்லை. தினம் நூலகத்திற்குச் சென்று தினசரி வரும் விளம்பரங்களைப் பார்த்து விண்ணப்பங்களை அனுப்பிக் கொண்டே இருந்தான். படிப்பு முடித்து ஓர் ஆண்டு ஆனது, வேலை கிடைத்தபாடில்லை. ''ஜோதி, உன் நேரம் காலம் சரியில்லை போலிருக்கு; நீ போய் கைரேகை சோதிடர்

கண்ணாயிரத்தைப் பார்த்து கைரேகையின் பலன் எப்படி இருக்கு என்று பார்த்துவா'' என்றாள் காந்திமதி.

கைரேகை சோதிடத்தில் புலியென்று பெயர் எடுத்த கண்ணாயிரத்திடம் இந்த முறை அனுப்பினார்கள் அம்மா! கைரேகை சோதிடர் என் வலது கையைப் பிடித்து அவர் கண்ணுக்கு அருகே ஒரு ரேகை கண்ணாடியை வைத்து துருவித் துருவி, ரேகையை ஆராய்ந்தார். பிறகு ''தம்பி! குருமேடு உயர்ந்த ஸ்தானத்தைப் பெற்று இருப்பதால் நீங்க உயர்ந்து செல்வத்துடன் செல்வாக்குடன் விளங்குவீர்கள். மேலும் உங்கள் ஆயுள் ரேகையும் கெட்டியாக இருக்கிறது.

உங்கள் தொழில் ரேகை சற்று பலவீனமானதால் இன்னும் ஆறு மாதத்தில் உங்களுக்கு தொழில் நன்றாக அமையும், மற்ற விவரங்களைக் கேளு நான் சொல்றேன்'' என்று கூறி முடித்தார்,

கைரேகை சோதிடர் சொன்ன ஆறு மாதங்களும் போயிற்று. வேலை தேடி தேடி என் கால்களின் மூட்டுக்களும் தேய்ந்தது. ஆனால் வேலை மட்டும் கிடைக்கவில்லை.

வயதான காலத்திலே, அம்மா வீடு வீடா சென்று ''அம்மா காய் வாங்கலிங்களா? காய் வாங்கலிங்களா?'' என்று கூறுவதை நிறுத்தலாம் என்று பார்த்தால் ஒரு நல்ல வேலை கிடைக்க மாட்டேன் என்கிறதே! ஒரு எழுத்தும் படிக்காமல் இருந்தாலாவது கல் மண் சுமந்து அம்மாவை காப்பாற்றலாம், அல்லது வசதியான செல்வச் செழிப்பு உள்ள சொந்தக்காரர்கள் இருந்தாலாவது அவர்கள் கை காலில் விழுந்து பெரிய இடத்து சிபாரிசு பெற்று வேலை கிடைக்க வகை செய்யலாம். இந்த இரண்டாம் கெட்ட நிலையில் எதுவும் செய்ய முடியாமல் அவதிப் படுவதை எண்ணி மனம் நொந்து போனான் ஜோதிலிங்கம்.

அதிகம் படிப்பு இல்லாத தன் தாய், தனி மனித ஒழுக்கத்தை தினம் தினம் போதிப்பது அவனுக்கு தெம்பை தந்தாலும், இந்த சமுதாயம், தான் படித்த படிப்பைக் கொண்டு, தன் உண்மை யான உழைப்பைக் கொண்டு முன்னுக்கு வர வகை செய்ய வில்லையே என்ற ஏக்கம் அவன் மனதில் வந்து வந்து அலை மோதி என்ன பயன்?

ஜோதிலிங்கம் வேலை தேடும் காலச்சக்கரம் மூன்று ஆண்டு களைக் கடந்து நான்காம் ஆண்டுக்கு நகர்ந்தது.

''முள்ளங்கி, வாழைத்தண்டு, அரைக்கீரை, சிறுகீரை, பொன்னாங்கணிக்கீரை, என்று கூறி விற்ற அம்மாவால் இன்று பொன்னாங்கணிக்கீரையை மட்டும் தூக்கிச் செல்ல முடிந்தது.

அந்த அளவுக்கு உடல் தளர்ந்து போனார்கள். சிறுசிறு உதவி பெற்று காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தபோது தன் உயிர் நண்பன் கஜேந்திரன் "டேய் ஜோதி! நீ உடனே புறப்பட்டு, நான் தரும் ரூபாய் ஐம்பதைக் கொண்டு டவுனில் ஓலைச் சுவடியைக் கொண்டு நாடி சோதிடம் பார்க்கின்றார்களாம். அதைப் போய்ப் பார்த்தால் அவர்களே உனக்கு எப்போது வேலை கிடைக்கும் என்பதை துல்லியமாகச் சொல்லிவிடுவார்களாம்!" என்று கூறியதை நம்பி, நண்பன் கொடுத்த காசைப் பெற்றுக் கொண்டு டவுனுக்குச் சென்றான் ஜோதிலிங்கம்.

அங்கே ஓலைச் சுவடியைக் கையில் வைத்திருந்த நாடி சோதிடர் நாராயணன், ஒரு பெரிய தமிழ்ப் பாட்டைப் பாடி முடித்ததும், "தம்பி, நான் கேக்கும் போது மட்டும் விவரம் கூறு! நீயாக எதுவும் கூறாதே?" என்று சொன்னவுடன், ஜோதியின் மனதிற்குள் நாம் ஒரு சரியான சோதிடரிடம்தான் வந்துள்ளோம் என்ற நல்ல எண்ணம் தோன்றியது.

"உன் தந்தையின் பெயர் வல்லினத்தில்தானே வரும்?" என்றார் நாராயணன்.

"இல்லை; மெல்லினம் என்று நினைக்கின்றேன்" என்றான் ஜோதி.

"என்ன படித்திருக்கின்றீர்கள்" என்றார் சோதிடர்.

"பி.காம்."

"வல்லினம், மெல்லினம் எல்லாம் ஐந்தாம் வகுப்பில் படிக்கும் தமிழ்ப் பாடம் ஆயிற்றே! இது கூடத் தெரியவில்லையா?" என்று சோதிடர் கூறியது ஜோதிலிங்கத்திற்கு வெட்கமாகவே இருந்தது. இருந்தாலும் தலையைக் கொடுத்தாகி விட்டது, தப்பித்தால் போதும் என்பது போல் இருந்தது ஜோதிக்கு.

ஓலைச் சுவடியின் கட்டில் உள் பகுதியில் நூலை நுழைத்து திரும்பவும் "மெல்லினத்தில்தானே உன் பெயர் வரும்" என்றார்.

"என் பெயர் ஜோதிலிங்கம், என் அப்பா பெயர் முருகவேள், என் அம்மா பெயர் தெய்வயானை" என்று ஒரே மூச்சில் மூன்றாவது வகுப்பு மாணவனைப் போல ஒப்புவித்தான்.

முதலில் நாராயணன் கொண்டுவந்த ஓலைச்சுவடி தன்னுடைய ஜாதகத்திற்கு உரியது இல்லை என்றும், அதைத் தூர வைத்து விட்டு வேறு ஒரு ஓலைச் சுவடியைப் படிக்க ஆரம்பித்தார். ஜோதிலிங்கம் சொன்ன விவரத்தை அப்படியே

இனிமையான குரலில் தமிழ்ப் பாட்டாகப் பாடிக் காட்டினார். அதில், அந்த ஓலைச் சுவடியில் அவன் தாய் தந்தையர் பெயர் வேறு இருப்பது போல் பாவனை செய்து காட்டினார்.

"நம்மிடம் இருந்து நம்மைப் பற்றிய தகவல்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, அந்த தகவல்களை அழகான தமிழ்பாட்டா எழுதி, அதை ஒப்புவிக்கும் இவர்கள் ஏமாற்றுக்காரர்கள்" என்ற எண்ணம் மிக ஆழமாக ஜோதிலிங்கத்தின் மனதில் பதிந்தது. மலிவு விலை கிளி சோதிடம் முதல், கையில் வேப்பிலை வைத்துக் கொண்டு சாமியே நேராக வந்து குறி சொல்லும் குறி சோதிடம் வரை பார்த்தாகிவிட்டது. மனித மூளையில் உதயமான கம்ப்யூட்டர் ஜாதகம் கூட பார்த்து விட ஆசைதான் ஜோதிக்கு. ஆனால் வசதியில்லையே.

"குறைந்த வருமானம் வருகின்ற தொழிலை விட்டு விட்டு எங்கள் ஸாப்ஃட்வேரை வாங்குங்கள். உங்கள் கம்ப்யூட்டர் நிலையத்தைச் சோதிடக்கேந்திரமாக மாற்றி மாதம் ரூ. 10,000/- சம்பாதியுங்கள். சோதிடம் சொல்லி பணம் சம்பாதிக்கத் தயாரிக்கப்பட்டது 'ஸாஃப்ட்வேர். இதில் சோதிடம் தெரிய வேண்டிய அவசியம் இல்லை."

இப்பொழுது ஜப்பானில் "தகோஜி புருகேவா" என்ற மனோதத்துவ மருத்துவர் உருவாக்கிய 'பிளட் குரூப்' சோதிடத்தை ஜோதிலிங்கம் நம்பினாலும் அது இன்னும் தமிழ் நாட்டில் வரும் நாளை எதிர்நோக்கிக் கொண்டுதான் இருந் தான். இப்பொழுது வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கையைவிட சோதிடத்தை நம்பி தானும் ஒரு சோதிடராகிவிட வேண்டும் என்ற எண்ணம் அவன் மனதில் துளிர் விட்டது.

கையில் காசு இல்லாமல் வாங்குவது என்றால் கடற்கரைக் காற்று ஒன்றுதான். அதை வாங்கத்தான் ஜோதிலிங்கம் சென்று கொண்டு இருந்தான். "சோதிடமே தெரியாத தான் எப்படி சோதிடநிலையம் வைப்பது" என்பதை சிந்தித்துக் கொண்டே நடந்து கொண்டிருந்தபோது, அம்மாவின் ஒன்றுவிட்ட தம்பி சாமிநாதன் அவனை எதிர்நோக்கி வந்து கொண்டிருந்தார். சாமிநாதனைப் பார்த்து ஜோதி, "எப்ப மாமா ராஜபாளையத் திலிருந்து வந்திங்க?" என்றான். "நேற்றுதாம்பா வந்தேன். உன்னைப் பார்க்க இன்று உன் வீட்டிற்குச் சென்றேன். அங்கே அக்கா மட்டும் இருந்தாங்க, உனக்கு இன்னும் வேலை கிடைக்காம இருப்பதை அறிந்தேன், நாளைக்கே புறப்படு. உனக்கு, உன் படிப்புக்குத் தகுந்த வேலை கிடைத்திருக்கு, கை நிறைய சம்பளம் தருவதா நான் வேலை செய்யும் நிர்மல்

ஜெயின் சொல்லி இருக்கார்'' என்று கூறி முடித்தார் சாமிநாதன் என்ற ஜோதியின் தாய்மாமன்.

இராஜபாளைய மெயின் பஜாரில் 'நிர்மல் சில்க் அவுஸ்' என்ற மிகப் பெரிய துணிக்கடையில் இருந்தார் சாமிநாதன். சுமார் முப்பது ஆண்டுகள் அவர் அங்கு வேலை செய்வதால் அவருக்கு ஒரு குறிப்பிட்ட வேலை செய்வார் என்பதை விட எல்லா வேலைகளையும் செய்வார். அவர் வேலையே செய்ய வில்லை என்றாலும் முதலாளி நிர்மல் ஜெயின் ஏதும் கூறமாட்டார். அந்த அளவுக்கு முதலாளியிடம் ஒன்றியவர். அவர் கடையின் ஊழியர்களில் சாமிநாதனைப் போல வேறு ஒருவரும் நம்பிக்கையான முறையில் அமையவில்லை. அதுவே சாமிநாதனுக்கு மதிப்பையும், உயர்வையும் தந்தது.

அம்மாவிடம் விடை பெற்றுக் கொண்டு, சாமிநாத மாமாவுடன் புறப்பட்டான் ஜோதிலிங்கம். தெரியாத சோதிடத்தைக் கற்று இனி தொழில் செய்வதைவிட, படித்த படிப்புக்குத் தகுந்த கணக்கு எழுதும் வேலையாவது கிடைத்தால் அது போதும். என்று எண்ணி ஜோதியின் மனம் சந்தோஷப் பட்டது.

ஜோதிலிங்கத்தின் தெளிவான முகத்தைப் பார்த்ததும் மிகவும் பிடித்து விட்டது நிர்மல் சில்க் ஹவுஸ் முதலாளி நிர்மல் ஜெயினுக்கு. சாமிநாதன் ஒரு நல்ல நபரைத்தான் தேர்வு செய்து வேலைக்கு அழைத்து வந்து இருப்பதாக நினைத்துக் கொண்டார் நிர்மல். நிர்மல் சில்க் ஹவுஸின் வரவுசெலவு கணக்குகளைப் பகலில் சாமிநாதன் சரிபார்ப்பார். இரவில் சில நோட்டுப் புத்தகங்களை வீட்டிற்கு எடுத்துச் சென்று சரி பார்ப்பது ஜோதியின் வேலை. இரவில் கணக்குகளைச் சரி பார்ப்பதால் அது கருப்பு கணக்கோ, கள்ளக் கணக்கோ அல்ல.

மிகப்பெரிய கணக்குகளை சூப்பர் கம்ப்யூட்டரில் போடும் கணக்குகள் குறித்தும், அங்கு வேலை செய்யும் தொழிலாளி களின் உழைப்பைக் கண்காணிப்பதும் ஜோதிலிங்கத்திடம் வந்து சேர்ந்தது. தான் உழைக்கும் முதலாளிக்கு உண்மையான ஊதியனாக இருக்கவே ஜோதிலிங்கம் விரும்பினான். ஆகவே அவன் வேலை நேரமும் இரவு பகல் என்று வரையறை இல்லாமலும் கடை, வீடு என்று ஒரு அமைப்பு இல்லாமலும் இருந்தது. நிர்மல் ஜெயின் மென்மையானவர் மட்டுமல்ல. செயலிலும், சொல்லிலும், கண்டிப்பானவர். அவர் உடல் எப்படி பூப்போன்று இருந்ததோ அதைப்போலவே அவரின்

தன்மையும் மென்மையானது. அவருக்கு மனைவியும், ஒரு மகளும், ஒரு மகனும் வாரிசாவார்கள்.

இராஜபாளையத்தில் உள்ள கடையை இவர் நிர்வகிப்பது போல் இவர் மூத்த மகன் இராஜஸ்தானில் உள்ள பட்டுநூல் மற்றும், பட்டுத்துணி உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை நிர்வகித்துக் கொள்கின்றான்.

இவரின் இரண்டாவது வாரிசான மந்தாகினிக்கும் இராஜஸ்தானில் தனக்கு நிகரான பெரிய பணக்கார உறவுக் காரப் பையனுக்கும் திருமணம் நடைபெற்று ஒரே நாளில் மாப்பிள்ளைக்குத் திடீரென்று மாரடைப்பு வந்து இறந்துவிட அது முதல் தன் மகளைத் தன்னுடனே வைத்துக் கொண்டார் நிர்மல் ஜெயின்.

எவ்வளவு பணம் இருந்தும், தன் மகளுக்குச் சரியான வாழ்க்கை அமையவில்லையே என்று நிர்மல்ஜெயினின் மனம் வருத்தப்படும். வருத்தப்பட்டு என்ன செய்வது? நடப்பது எல்லாம் இறைவனின் செயல் என்று தனக்குத் தானே ஆறுதல் கூறி, தன் மனதைத் தேற்றிக் கொள்வார்.

'கொட்டும் அருவி போன்ற கலகலப்பு, அன்று பூத்த தாமரையைப் போன்ற பொலிவு முகம், காந்தக் கண்களிலே வீண் கவர்ச்சி இல்லா அன்பு தவழும் விழிகள். அப்பப்பா! இவள் ஒரு தேவதையோ!' என நினைக்கும் மனசை ஒரு முறை திட்டிக் கொண்டான் ஜோதி. தனக்கு ஒரு வாழ்வு தந்து, தனக்கென ஒரு அந்தஸ்தைத் தந்தவரின் மகளை இப்படி எண்ணியது தவறுதான். என்ன செய்வது, வயதுக் கோளாறு வயதுக்கேற்ற எண்ணங்கள் வரத்தானே செய்யும்.

ஜோதிலிங்கம், நிர்மல் ஜெயின் வீட்டிற்கு வரும் போதெல்லாம் மந்தாகினி தட்டில் காபியை வைத்துக் கொண்டு நாணத்தோடு அதைக் கொடுக்கும் போது ஜோதிலிங்கம் படும் நாணத்தோடு கூடிய நளினமே அதிகம். ஜோதிலிங்கத்தின் கண்களும் கவி பாடும். மந்தாகினியின் மனமோ ஆனந்தப் பூரிப்பால் நடனமாடும். இருவரின் உள்ளங்களும் இணைந்தன.

உறவுக்கார மாமா சாமிநாதன் காதில் இச்செய்தி விழுந்தது. பதறிய மனிதர் தன் பெயருக்கும் தொழிலுக்கும் இன்னல் வருமோ என எண்ணி "ஜோதிலிங்கம், நான் உனக்கு உதவியதற்கு நீ எனக்கு செய்யும் கைம்மாறு, இந்தத் துரோகச் செயலா?" என்று கோபத்துடன் கேட்க, ஜோதிலிங்கம், "மாமா, என்மீது எந்தத் தவறும் இல்லை. தவறு என்று சொல்லும்படி

நான் ஒரு பொழுதும் நடக்க மாட்டேன். நீங்கள் கவலைப்படா தீர்கள்" என்று கூறிக்கொண்டு இருந்தபோது, எதிர்பாராமல் அப்பக்கம் வந்த நிர்மல் ஜெயின் இவர்களின் பேச்சு காதில், விழ, நிர்மல் ஜெயின் இவர்களிடம் "எல்லாம் எனக்குத் தெரியும்; ஜோதிலிங்கம், நீ கொஞ்சம் என்னுடன் வா" என்று தனியாக அழைத்துச் சென்றார்.

"நான் சாதி மதம் கடந்து வாழ்பவன், உருவத்தால் நான் ஜெயின் வேஷம் அணிகின்றேனே தவிர என் உள்ளத்தால் நான் இந்திய மனிதன். மனிதனுக்குள் உயர்வு, தாழ்வு என்பது இல்லை என்பது என் அசைக்க முடியாத எண்ணம். நீயும் என் மகளும் ஒருவரை ஒருவர் விரும்புவதாக என் மனைவி மூலம் அறிந்தேன். அதற்கு முன் என் மகளைப்பற்றிய ஒரு உண்மையை நீ தெரிந்து கொள்ள வேண்டும். என் மகள் ஓர் இளம் விதவை. விதவையை திருமணம் செய்து வைக்க எனக்கு விருப்பம் இல்லைதான். ஆனால் என் பெண்ணின் விருப்பம் ஆகையால் அதைத் தடுப்பது மிக தவறுஎன்று எண்ணியே உன்னை அழைத்துப் பேசுகின்றேன். உன்னைப் பற்றியும், உன் தாய் பற்றியும் நன்கு அறிந்து, உன் நல்லொழுக்கமும், நல்ல நடத்தையையும் வைத்துதான் நானே ஒரு நல்ல முடிவுக்கு வந்தேன். என் மகளை—இளம் விதவை மகளை திருமணம் செய்ய சம்மதமானால் உன் தாயிடம் கலந்து பேசி சொல். மற்றதைப் பற்றிப் பிறகு பேசுவோம்" என்று கூறி முடித்தார்.

"ஐயா, என் தாய் அடிக்கடி நீ ஊரை ஏமாற்றி வாழக் கூடாது. உழைத்து அதில் வரும் ஊதியத்தைக் கொண்டுதான் வாழவேண்டும். கஷ்டப்படாமல் வரும் காசில் வாழக்கூடாது என்ற தாரக மந்திரத்தை நான் ஒரு நாளும் மறக்க மாட்டேன். படிப்பு முடித்து வேலை இல்லாமல் இருக்கும் போது கூட சோதிடங்களையும், சாஸ்திரங்களையும் நம்பி உழைக்கப் பார்த்தேனே தவிர, சோம்பித் திரிந்து சோம்பேறியாக வாழ்வதற்காக அல்ல. உங்கள் மகள்மீது எனக்கு ஏற்பட்ட அன்பு தெய்வீகமானது. மந்தாகினி விதவை என்பதால் அந்த அன்பில் ஒரு சிறிதும் குறையாது. அவள் அழகு அந்தஸ்து வைத்தோ என் அன்பு உணர்வு வளரவில்லை. நீங்கள் மந்தாகினியை எனக்குத் திருமணம் செய்ய முடிவு செய்யும்போது, உங்களுடைய ஒரு ரூபாய் காசு கூட எனக்கு வேண்டாம். என் தாயின் அனுமதியோடு நான் திரும்பவும் உங்களைச் சந்திக்கின்றேன்" என்று கூறிவிட்டு ஜோதிலிங்கம் நிர்மல் ஜெயினிடம் விடை பெற்றான்.

வீட்டு வாசற்படியில் என்ன நடக்குமோ, ஏது நடக்குமோ என வியப்போடும், பயத்தோடும் நின்றிருந்த சாமிநாத மாமாவை அழைத்துக் கொண்டு ஜோதிலிங்கம் சென்னையை நோக்கித் தன் தாயைச் சந்திக்கப் புறப்பட்டான்.

ஜோதிலிங்கத்தின் உறுதி, நேர்மை, பிறர் காசுக்கு ஆசைப் படாத குணம், ஆகியவை நிர்மல் ஜெயினுக்கு மன நிம்மதியை யும், ஒரு நல்ல பையன் தன் மகளுக்கு வாழ்க்கைத் துணையாக வருவதையும் முழுமனதுடன் சம்மதித்தது அவர் மனம்.

மாமா சாமிநாதனிடம் சொல்லி, தன் தாயிடம் சம்மதம் பெற முயற்சித்த ஜோதிக்குத் தன் தாயின் பதில் தோல்வியைத் தந்தது. சாமிநாதனிடம் ஜோதிலிங்கம் மந்தாகினி விதவை என்பதை மட்டும் சொல்ல வேண்டாம் என்று கூறி இருந்தான். அதைத் தவிர மற்ற எல்லாச் செய்திகளையும் சொல்லி, நிர்மல் ஜெயின் வசதியைக்கூறி சம்மதம் கேட்டான் சாமிநாதன். அதற்கு ஜோதிலிங்கத்தின் தாய் ''தன்னை விட வசதி குறைந்தவர்கள் வீட்டில் பெண் எடுத்தால்தான் பெண் என்றும் தன் கணவன் சொல்படி நடப்பாள் என்றும், வசதியானவர்கள் வீட்டில் இவன் பெண் எடுத்தால், அவர்கள் வீட்டில் அசிங்கப்பட்டு அவதிப்பட வேண்டி இருக்கும்; தன் மகனின் வாழ்க்கை என்பது மட்டுமல்ல; ஜோதியின் அம்மாவின் எண்ணம். உழைத்துப் பேரோடும் புகழோடும் வாழ வேண்டும் என்பதற்காகத்தானே, பகல் முழுக்க காய்கறிக் கூடையை தலையில் சுமந்து படிக்கவைத்தாள். அது அவன் வசதியானவர் வீட்டில் பெண் எடுத்தால், தன் எண்ணம் ஈடேறாது என்பதும் உண்மைதான்.

தானும், தன் மாமாவும் எவ்வளவு கூறியும் தாய் இந்தத் திருமணத்திற்கு சம்மதிக்காததால் தாயிடம் ஒரு வார்த்தையும் கூறிக் கொள்ளாமல், இராஜபாளையத்தை நோக்கிச் சென்றான் ஜோதிலிங்கம்.

ஜோதிலிங்கத்தை ஆர்வத்தோடு எதிர்பார்த்துக் கொண்டு இருந்த மந்தாகினியும் அவர் குடும்பத்தாரிடம் தாயின் எண்ணத்தைப் பற்றிக் கூறிக் கொள்ளாமல், நிர்மல்ஜெயினின் முழு அனுமதியுடன் தன் வருங்கால மனைவியை அழைத்துக் கொண்டு தன் தாயை மறுபடியும் சந்தித்துப் பேசப் புறப் பட்டான், ஜோதிலிங்கம்.

மகனின் முடிவால் மனம் உடைந்து போன ஜோதியின் தாய் படுத்த படுக்கையாக ஆகிவிட்டாள். தாய் படுத்திருக்கும் கட்டிலின் ஒரு பக்கமாக ஜோதிலிங்கமும், மந்தாகினியும் நிற்க,

ஜோதிலிங்கம் தன் தாயிடம் ''அம்மா! நான் ஜோதிலிங்கம் வந்திருக்கேன். கட்டிய புடவையோடு உங்கள் வருங்கால மருமகள் வந்திருக்கா! தொழில் அதிபரின் வீட்டில் பெண் எடுப்பதால் உன் மகன் பணத்திற்கு ஆசைப்பட்டதாக நீ நினைப்பது தவறு. என் வருங்கால மனைவி, அதாவது உன் மருமகள் ஒரு விதவை பொண்ணுமா! இந்த உண்மையை நான் அவசியம் சொல்ல வேண்டும். இதை! நான் சொல்ல வேண்டிய நேரத்தில் சொல்லவில்லையானால் என்னை நீ கஷ்டப்பட்டுக் காப்பாற்றிப் படிக்க வைத்த படிப்புக்கே அர்த்தமே இல்லாமல் போய்விடும். தன் மகனைக் காப்பாற்ற ஒரு விதவைத்தாய் எப்படி கஷ்டப்பட்டாள் என்பதை நான் நேரில் பார்த்தவன். உங்கள் மூலம் கணவனை இழந்த ஒரு இளம் விதவையை உங்கள் மகன் திருமணம் செய்ய நினைக்கிறான். உங்கள் முடிவு என்னவென்று எதுவானாலும் சொல்லுங்கள் அம்மா!'' என்று தேம்பி, தன் தாயின் அருகே அழுதான் ஜோதிலிங்கம்.

''ஜோதிலிங்கம்! இப்பொழுதுதான் நீ என் மகன். எங்கே பணத்திற்கு அடிமைப்பட்டு என் மகன் இந்த சமுதாயத்திற்கு ஒரு பாரமாக இருப்பானோ என்று எண்ணினேன். ஆனால் நீயோ ஒரு விதவைக்கு வாழ்வு தந்து உன் உழைப்பில் மட்டும் வாழ்வேன் என்றாய், அப்போதே நீ என் மகன்தான். தாய் சொல்லைத் தட்டாத மகன்'' என்று கூறிக் கொண்டே மந்தாகினியின் கையையும் ஜோதிலிங்கத்தின் கையையும் இணைத்து ஒன்று சேர்த்து வைத்து ''நீங்கள் வளம் பல பெற்று நீடூழி வாழுங்கள்'' என்று கூறிப் படுக்கையைவிட்டு எழுந்து உட்கார்ந்தாள். தன் தாய் அதிர்ச்சியான செய்திகளைக் கேட்டு இறந்து விடுவாரோ என்று சில உண்மைகளை மறைக்க எண்ணியது தவறு என்பதையும் தன் தாயின் உயர்ந்த உள்ளத்தையும் இப்பொழுது புரிந்துகொண்டு தாயின் பாதத்தைத் தொட்டு வணங்கி எழுந்தார்கள், ஜோதிலிங்கமும் வருங்கால மருமகள் மந்தாகினியும்.



# புத்தி வந்தது

''என்னப்பா கந்தசாமி, தொழிலெல்லாம் எப்படி இருக்கு? அண்ணாநகரில் உள்ள என்னுடைய ஐந்து கிரவுண்ட் நிலத்தை விற்கச் சொன்னேனே, அது விஷயமாக உன்னைப் பார்த்துப் பேசிட்டு போகலாமென்னுதான் வேலூரிலிருந்து வந்தேன்'' என்று கூறி முடித்தார் தொழிலதிபர் இராமதுரை.

''ஐயா, உங்க இடம் விஷயமாகத்தான் உங்களுக்கு லட்டர் போடணும்ன்னு இருந்தேன். அந்த மகமாயி புண்ணியத்தில் நீங்களே வந்துட்டீங்க'' என்று பணிவோடு கூறி முடித்தான் நில புரோக்கர் கந்தசாமி.

''கந்தசாமி, நீ காரியத்தை கரக்டா முடிப்பேன்னுதான் உன்னை நம்பி வந்திருக்கேன், நான் சொன்ன விலை பத்து லட்சத்திற்கு வாங்கிற பார்ட்டி ஒத்துக் கொண்டார்களா?''

''ஆமாங்கய்யா! நீங்க சொன்ன விலைக்கு லேசில அவங்க ஒத்துக்கல, நான்தான் அதையும், இதையும் பேசி ஒரு வழியாக முடிச்சி வைச்சிருக்கேன். நீங்க' நம்ப கமிஷன் விஷயமாக...' என்று இழுத்துப் பேசினான் கந்தசாமி.

''கமிஷன் என்னப்பா பெரிய கமிஷன், எல்லாம் கொடுத்' துட்டா போச்சு. நீ மட்டும் எனக்கு நாளைக்கே பேசி முடிச்சு கையில் பணத்தை வாங்கிக் கொடுத்தா எனக்குப் பெரும் உதவியா இருக்கும்.''

''அப்படியே ஆகட்டுங்க''— என்று கந்தசாமி தொழில் அதிபரிடம் கமிஷன் விஷயமாக நாசுக்காகப் பேசியதை எண்ணி மகிழ்ந்தான். புரோக்கர் கந்தசாமி மற்ற புரோக்கர்களைப் போல், தில்லு, முல்லு செய்யத் தெரியாதவன். ஆகவேதான் அவன் ஏழையாகவே இருக்கின்றான், என்பது மற்றவரின் கணிப்பு. நேர்மையோடு வருகின்ற காசுதான் கடைசிவரை வரும் என்றும், அநீதியில் வரும் காசு 'பாவத்தின் சம்பளம்' என்றும் அவன் மனம் அடிக்கடி எண்ணியதால் எப்பொழுதும் தவறு செய்ய அவனால் முடியவில்லை.

நிலத்தை வாங்குபவர்களையும், விற்பவர்களையும் நேருக்கு நேர் பேசி விட்டு அவர்கள் தரும் கமிஷன் காசிலேதான் அவன் ஜீவனம் ஓடிக் கொண்டு இருந்தது.

''ஓலைக் குடிசையில் வாழ்கின்றவனுக்கு இவ்வளவு வீராப்பா? இந்தக் காலத்துக்கு ஏற்றாற்போல வாழத் தெரியாத முட்டாள் இந்த கந்தசாமி'' என்று அவனைப் போல் சக கமிஷன் தொழில் செய்பவர்கள் எண்ணியதுண்டு.

கந்தசாமி காலையில் எழுந்தவுடன் காலைக் கடன்களை முடித்து விட்டு, குளித்து நெற்றி நிறைய திருநீறு வைத்து முருகர் படத்தின் முன் அமர்ந்து குமாரஸ்துவம் பாடி முடித்தவுடன் ''முருகப்பெருமானே, இந்த உலகத்தில் உள்ளவர்களை நல்லவர்கள், கெட்டவர்கள் என்று வேறுபடுத்தாமல், எல்லோரையும் நல்லவர்களாகவே வைத்திரு. எல்லோரும் எல்லா வளமும், நலமும் பெற்று மகிழ்வோடு வாழ வேண்டும்''—என்று தனக்காக, தன் குடும்பத்திற்காக பிரார்த்தனைச் செய்யாமல், இந்த உலகத்திற்காக பிரார்த்தனைச் செய்யும் ஒரு மனிதன் இந்த உலகத்தில் உண்டு என்றால் அது இந்த ஏழை புரோக்கர் கந்தசாமியாகத்தான் இருக்க வேண்டும்.

''பசி, பட்டினி என்ற வறுமைகள் வரும் போதுகூட அவன் தனது மனைவி, இரு பெண் குழந்தைகள், ஒரு ஆண் குழந்தைக்காக யாரையும் ஏமாற்றவோ, ஏய்க்கவோ தெரியாதவன். வறுமை அவனைவாட்டிய போதெல்லாம் தனக்குத் தெரிந்தவர்களிடமும், மிக வேண்டியவர்களிடமும் கடன் வாங்கி, பின் காசு வரும்போது நாணயத்துடன் திருப்பித் தந்து வாழ்க்கையை ஓட்டியவன், இன்றும் ஓட்டிக் கொண்டு இருப்பவன்.

பெரிய பெரிய தொழில் அதிபர்களிடம் அவனுக்கு அதிகம் பழக்கம் ஏற்பட்டாலும் 'அவர்களுடைய உறவு பகற்கனவுக்கு ஒப்பானது' என்பது அவனின் முடிவு.

தொழில் அதிபர் இராமதுரையை அறிமுகப்படுத்தியவர் மிக மிக நேர்மையானவர், என்பதால் இராமதுரையுடன் கறாராக கமிஷன் பற்றிப் பேச முடியவில்லை, கந்தசாமிக்கு. இராமதுரையுடன் அண்ணாநகர் இடத்திற்காக, ஆறுமாத காலமாக கந்தசாமி பட்ட கஷ்டங்களுக்கு நாளை விடிவு ஏற்படும் என்றும், தான் மற்றவர்களுக்கு தரவேண்டிய கைமாற்று கடன்களுக்கும், தன் மனைவி, குழந்தைகளுக்குப் புது சட்டை எடுப்பதும் பற்றியும், தன்கூரை வீட்டைப் பிரித்து ஒழுகல் இல்லாமல்

கட்டப்பட வேண்டும் என்பதைப் பற்றியும் எண்ணி மகிழ்ந் திருந்தான்.

"ஐயா, அண்ணாநகரில் உள்ள இடத்தின் சொந்தக்காரர், வேலூரிலிருந்து இன்று காலை வந்து விட்டார், இன்று இரவு நீங்களும் அவரும் சேர்ந்து பேசி, கடைசி முடிவுக்கு வந்திட்டீங் கன்னா, நாளைக்கே பத்திரத்தை பதிவு செய்து கொள்ளலாம் என்று விற்பவர் சொல்கின்றார். நீங்கள் என்ன சொல் கின்றீர்கள்?" — என்று அண்ணாநகர் இடத்தை வாங்கும் குரு மூர்த்தியிடம் கேட்டான் கந்தசாமி.

"அப்படியே ஆகட்டும் கந்தசாமி, இன்று இரவு ஏழு மணிக்கு அவரை அழைத்து வந்து விடு, பேசி முடிவு செய்த பின், நாளை காலை பத்து மணிக்கு பத்திரம் பதிவு செய்து விடலாம்" என்று கூறினார் இடத்தை வாங்கும் குருமூர்த்தி.

"ஐயா கமிஷன் விஷயமாகப் பேசவே இல்லையே" கந்த சாமி குழைந்து கேட்டான்.

"ஒரு பர்சண்ட் கமிஷனைக் கொடுத்து விடுகின்றேன் கந்த சாமி, உனக்கு சம்மதம்தானே?"

"அப்படியே ஆகட்டும் ஐயா!" — என்று கூறி மகிழ்வுடன் புறப்பட்டான் கந்தசாமி.

மறு நாள் காலை பத்துமணிக்கு அண்ணாநகர் பத்திர பதிவு அலுவலகத்தில் பத்திர பதிவு முடிந்து, நிலத்தை விற்றவர் கைக்குப் பணம் பத்து லட்சம் கிடைத்தது. நிலத்தை வாங்கிய குருமூர்த்தி, கந்தசாமியை அழைத்து கந்தசாமிக்கு சேர வேண்டிய கமிஷன் ரூபாய் பத்தாயிரத்தைக் கொடுத்துவிட்டு சென்று விட்டார். நிலத்தை விற்ற இராமதுரை, தன்னிடம் உள்ள பத்து லட்சத்தில் ஐந்து நூற்றை மட்டும் எடுத்து கந்த சாமியிடம், "கந்தசாமி, இதை கமிஷனா நினைக்காதே, இந்த ரூபாயை வாங்கிக் கொள்" — என்று கூறி கந்தசாமியின் கையில் திணித்தார்.

கந்தசாமிக்கு, இப்படி செய்வார் என்று தெரியாமல் போயிற்று "ஐயா, நீங்க செய்வது தர்மம் இல்லீங்கைய்யா; நான் ஆறு மாதமாக கஷ்டப்பட்டதற்கு நீங்கள் தரும் காசு எந்த மூலைக்கு?" என்று அவர் கொடுத்த ரூபாயை அவர் கையிலேயே கொடுத்தான் கந்தசாமி.

கந்தசாமி கூறுவதை எதையும் காதில் வாங்காத இராமதுரை, கந்தசாமி கொடுத்த அந்த ரூபாயை மறுபடியும்

வலுக்கட்டாயமாக கந்தசாமியின் கையிலே திணித்துவிட்டுத் தனக்காக காத்திருந்த காரில் ஏறினார், இராமதுரை.

தன்னை மோசம் செய்து விட்டு செல்லும் இராமதுரையைப் பார்த்தபடியே, தன் கையில் இருந்த ரூபாயை சரியாகப் பிடிக்காமல் போகவே, ஐந்த ஐந்து நூறும், ஐந்து பக்கமாக காற்றில் பறந்தது. ஐப்பொழுது இராமதுரை சென்ற காரும் வேகத்தில் ஐந்த இடத்தை விட்டுப் பறந்தது. வாலாஜாவைக் கடந்து கொண்டிருந்தது.

டிரைவர் பொன்னுசாமியிடம் இராமதுரை "பொன்னுசாமி, காரை இன்னும் கொஞ்சம் வேகமாக ஒட்டு, வயிறு ஒரு மாதிரியாக இருக்கு"

"போற வழியில் ஆஸ்பத்திரி இருந்தா வண்டியை நிறுத்தட்டுங்களா?" என்றான் டிரைவர் பொன்னுசாமி,

"வேண்டாம், வேண்டாம், என்னிடம் பணம் இருக்கும் விஷயம் வெளியில் தெரிந்தால் பணத்திற்கும் ஆபத்து, நாம் போக வேண்டிய நேரத்திற்குள் போய்ச் சேராமல் காலதாமதம் ஏற்படும். ஆகவே வண்டியை இன்னும் கொஞ்சம் அதிக வேகமாக ஒட்டு"—என்று வயிற்றை ஒரு கையிலும், பணம் உள்ள சூட்கேசை ஒரு கையிலும் பிடித்திருந்த இராமதுரை சொன்னார். கார் வேகமாகச் செல்ல—செல்ல இராமதுரையின் வயிற்றுவலியும் அதிகமாகிக் கொண்டே இருந்தது. வயிற்றில் ஈட்டியால் குத்துவது போன்ற வலியால் துடித்து மயங்கினார் இராமதுரை.

"கந்தசாமிக்கு, நீங்க தரவேண்டிய ரூபாய் பத்தாயிரத்தை, நியாயமாக கொடுக்காததால்தான் இந்த வயிற்றுவலி" என்று டிரைவர் பொன்னுசாமியால் எப்படி வெளியே சொல்ல முடியும்.

வயிற்றுவலியால் துடித்துக் கொண்டிருந்த இராமதுரையை எப்படியும், அவர் வீட்டில் சேர்த்து விடவேண்டும் என்று எண்ணி வேகமாகக் காரை ஓட்டிக் கொண்டு இருந்தான் பொன்னுசாமி.

வேகமாக வரும் காரைக் கண்டதும் இராணிப்பேட்டை முத்துக்கடை சந்திப்பில் நான்கு ஐந்து காவலர்கள் நின்று இராமதுரை வந்த காரை நிறுத்தினார்கள். மயக்க நிலையில் இருக்கும் இராமதுரையைக் கண்டதும், காவலர்களின் தலைமை காவலர் டிரைவரை நோக்கி "இவர் உங்க முதலாளியா? என்ன உடம்புக்கு?"— என்றார். அதற்கு பொன்னுசாமி "இவர் எங்க முதலாளி "சுந்தரம் பைனான்ஸ்" என்ற பெயரில் ஒரு

பைனான்ஸ் கம்பனி நடத்துகிறார், இப்பொழுது இவரால் பேசக்கூட முடியாத நிலையில் மயங்கி கிடக்கிறார். நான் காரை எடுக்கட்டுங்களா?'' என்று பொன்னுசாமி, இன்ஸ்பெக்டரை நோக்கி கேட்டான்.

''மயங்கிய நிலையில் உள்ள அவரை நாங்க தொந்தரவு செய்திட்டோம், வெரி சாரி, இந்த வழியாக ஒரு காரும் பல லட்ச ரூபாய் கடத்தலும் வருவதாக தகவல். ஆகவேதான் இச்சோதனை, நீ உடனே காரை ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போ, அவர் காரில் உள்ள, சூட்கேஸ்ல என்ன வைத் திருக்கார்ன்னு செக்கப் பண்ண, உங்களுடன் ஒரு கான்ஸ்டபிள்ள அனுப்புறேன்'' என்று கூறி வழி விட்டார் இன்ஸ்பெக்டர்.

வலியால் துடித்து, வலி தாங்க முடியாமல் மயங்கிய நிலையில் இருந்த இராமதுரைக்கு எதுவுமே தெரியாது.

கார் இராணிப்பேட்டை முத்துக்கடை சந்திப்பில் உள்ள 24—மணி நேர ஆஸ்பத்திரிக் காம்பவுண்டுக்குள் நுழைந்தது. ஆஸ்பத்திரியில் உள்ள வார்டுபாய். மற்றும் சிலர் வந்து மயங்கிய நிலையில் இருந்த இராமதுரையை மருத்துவமனைக்குள் தூக்கிச் சென்றனர்.

இராமதுரைக்கு, வேண்டிய இன்ஜக்சன்களைக் கொடுத்து விட்டு, மேலும் அவருக்கு ட்ரிப்ஸ் ஏற்ற மருத்துவர்கள் மிக வேகமாகச்செயல்பட்டார்கள். டிரைவர் பொன்னுசாமிக்கு, தன் முதலாளிக்கு திடீரென்று இப்படி ஆகிவிட்டதே என்ற மனகலக் கத்தில் கையும், காலும் ஓடவில்லை. காரில் வந்த கான்ஸ் டெபிள் மருத்துவமனைக்குள் நுழையும் போது பார்த்ததுதான், பிறகு அவரைக் காணவில்லை. ஆகவே பொன்னுசாமி, இராமதுரையின் சூட்கேஸை ஞாபகம் வர, மிக வேகமாக காருக்குச் சென்று காரில் போய் பார்த்தார். காரில் சூட்கேஸ் இல்லாததால், அங்கிருந்து வேகமாக, இராமதுரை இருக்கும் மருத்துவமனை அறைக்கு வந்தார். அங்கு இராமதுரை சுய நினைவு பெற்றவராய், பொன்னுசாமியை அழைத்து, ''பொன்னுசாமி, என்ன நடந்தது! நான் ஏன் இங்கு இருக்கேன்! என் சூட்கேஸ் பத்திரமாக இருக்கிறதா?'' என்று கேட்டார்.

''ஐயா, வயிற்று வலியால் நீங்கள் துடித்தீர்கள், பின் சுய நினைவு இன்றி மயங்கிய நிலையில் காரிலேயே படுத்து விட்டீர்கள், முத்துக்கடை சந்திப்பில் போலீஸ்காரர்கள் நம் காரை சோதனைப் போட எண்ணி, காரை நிறுத்தினார்கள்.

உங்களை மயங்கிய நிலையில் பார்த்ததும், நம்முடன் ஒரு கான்ஸ்டெபிளை அனுப்பி, உங்கள் சூட்கேசையும், காரையும் சோதனை செய்ய அனுப்பினார்கள், ஆனால் இப்பொழுது வந்த கான்ஸ்டெபிளும் காணோம், உங்கள் சூட்கேசும் காணோம்'' என்று மிக தயக்கத்துடனும், பயத்துடனும் கூறி முடித்தான் பொன்னுசாமி. சிறிதளவு, வயிற்றுவலியை மட்டும் உணர்ந் தவர் மற்ற எந்த நிலையும் அறியாத இராமதுரை தன் சூட் கேசுடன் பணம் பத்து லட்சம் காணவில்லை என்றதும் ''ஓ...''என்று கதறி அழுதார்.

''ஐயோ...ஐயோ...என் பத்து லட்சம் போச்சே, நான் யாருக்கு என்ன துரோகம் செய்தேன். என் பணமெல்லாம் போச்சே'' என்று கத்திக் கொண்டே படுக்கையை விட்டு எழுந்தார்.

''ஐயா, நீங்க புரோக்கர் கந்தசாமிக்குத் தரவேண்டிய கமிஷனைக் கொடுக்கவில்லையே, அதன் விளைவாக இது இருக்குமோ'' எல்று டிரைவர் சொல்ல நினைத்து சிந்திக்கும் போது...

இராமதுரை ''ஆமாம்—ஆமாம், நான் கந்தசாமியை ஏமாற்றினேன், இப்போது என் பத்து லட்சம் போய்டுச்சி'' என்று தேம்பி அழுதார். அப்பொழுது சூட்கேஸ்சுடன் மருத்துவ மனையின் தலைமை நிர்வாகத்தை பார்க்கச் சென்ற போலீஸ் கான்ஸ்டெபிள் சூட்கேசுடன் அங்கு வந்தார், அவரைக் கண்டதும் இராமதுரைக்குப் போன உயிர் திரும்பி வந்தது. சூட்கேசுடன் கான்ஸ்டெபிள் வந்த சிறிது நேர இடைவெளியே, தன்னை இந்த பாடுபடுத்தியதே, ஆறு மாதமாக உழைத்த புரோக்கர் கந்தசாமியை நாம் ஏமாற்றியது என்ன பாடுபடுத்தி இருக்கும் என்று எண்ணிய இராமதுரை கார் டிரைவர் பொன்னுசாமியைக் கூப்பிட்டு, ஆஸ்பிட்டலுக்குக் கட்ட வேண்டிய தொகையைக் கட்டி விட்டு, கான்ஸ்டெபிளின் சந்தேகத்தைப் போக்கிவிட்டு பிறகு காரை நேராக சென்னைக்கு திருப்பி, கந்தசாமிக்கு சேரவேண்டிய ரூபாய் பத்தாயிரத்தைக் கொடுத்த பின் தான் மற்ற வேலை''—என்றார் புதிய ஞானம் பெற்ற இராமதுரை.



# நினைத்தது ஒன்று

காலைக் கதிரவனின் செங்கதிர் ஒளிகள், அந்தக் கார்மேக வண்ணனின் அவதாரமான பெருமாள் கோயில் கோபுரத்தின் மீது பொன் ஒளிப்படும் முன்பே ]அந்த எம்பெருமானின் சுந்தர கானம், சுபிஷ்ஸ கீதமான சுப்ரபாதத்தின் தெய்வீக ஒலி புதுப் பாக்கமென்னும் ஊரின் மூலை முடுக்கெல்லாம் கேட்டுக் கொண்டே இருந்தது.

தான் வெளிவிடும் மூச்சுக் காற்றால் இந்த உலகத்தில் உள்ள எல்லா உயிர்களுக்கும் சுவாசத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கும் பெருமாளுக்கு பூஜை செய்து முடித்து அந்தக் கோயிலை விட்டு வெளியே வந்து கொண்டிருந்தார் ராகவ ஐயர்.

''சாமி...சாமி...அக்கிரமத்தைப் பார்த்தீங்களா; நேற்று உங்கள்மீது மீனைப் போட்ட முருகேசன், இன்று தவளையைப் பிடித்துப் போட வருகிறான்.நீங்கள் உடனே சீக்கிரம் இங்கிருந்து போய் விடுங்கள்'' என்று வேகமாக ஓடிவந்து கூறும் சரவணனை, ஒரு முறை நிதானமாக நிமிர்ந்து பார்த்தார் ராகவ ஐயர்.

''சரவணா! முருகேசன் செய்வதில் ஏதோ ஒரு காரண காரியம் இருக்கிறது. எல்லாம் அந்த பெருமாளுக்கே வெளிச்சம். நான் முருகேசனைக் கண்டு பயந்து இங்கிருந்து, அவனுக்காகப் போய்விட வேண்டும் என்று சொல்வதிலே, நீ என் மீது கொண்ட மரியாதை தெரிகிறது. அதற்காக உனக்கு நன்றி! நான் இந்த எம்பெருமான் மீது கொண்ட பக்திக்கு இதுதான் நடக்கும் என்றால் அதுவே நடக்கட்டும்'' என்று கூறி, கோயில் வாசற்படி அருகே ஆணித்தரமாக அமர்ந்தார் ராகவஐயர்.

''முருகேசன் குறும்புக்கு ஒரு அளவே இல்லை'' என்று கூறிக்கொண்டே பின்பக்கம் பார்த்தார் அந்த ஊர்த் தலைவர் மேகநாதன். அங்கு முருகேசன் கையில் ஒரு கம்பு வைத்துக் கொண்டுவர அதைப் பிடுங்கி அவன் முதுகில் நான்கு அடிகள்

கொடுத்தார் மேகநாதன். அடிவாங்கிய வேகத்தில் அந்த இடத்தை விட்டு வேகமாக ஓடி மறைந்தான் முருகேசன்.

''நல்லவர்கள் வாழும் இந்த ஊரில் சில பொல்லாதவர்கள் வாழ்கின்றனரே'' என்று எண்ணி வீடு போய்ச் சேர்ந்தார் ராகவ ஐயர்.

புதுப்பாக்கம் என்னும் அந்த ஊர். இயற்கை எழில் கொஞ்சும் பூஞ்சோலையாகக் காட்சி அளித்தது. ஊர் நடுவே பெருமாள் சன்னதி, அந்த சன்னதியைச் சுற்றிப் பனைமரச் சாரல்கள், பனை மரச்சாரல்களுக்குப் பக்கத்தில் சவுக்குத் தோப்புகளும் மாமரத் தோப்புகளும் அடர்ந்து செழித்து இருக்கும்.

இரு தோப்புகளுக்கும் இடையிலே பெரிய குளம் ஒன்று இருக்கிறது. அதில் அல்லி மலர்களும், தாமரை மலர்களும் பூத்து குலுங்கும் அந்தப் பூக்களின் மகரந்தத் தேனைச் சுவைக்க வட்டமிடும் ரீங்கார வண்டுகள். அந்த வண்டுகள் இசைக்கும் ஓசை, காலை பூபாளத்தின் தேனிசை மழை போல் இருக்கும்.

அந்த ஊருக்குக் கிழக்குப் பக்கத்திலே வினை தீர்க்கும் பிள்ளையார் கோயில், அந்தக் கோயிலைக் கண்ணும் கருத்துமாய் பலகாலமாய் காத்து பூசை செய்து வரும் பரம்பரை குடும்பத்தாரின் தொண்டு போற்றக் கூடியது. தன் சொந்தப் பணத்தில் கோயிலின் வாயில்படி அருகே சிறு மண்டபம் கட்டி, கோயிலைச் சுற்றி வலம்வர சிமெண்ட் தளம் அமைத்துக் கொடுத்த அவரின் இறைத் தொண்டை அப்பகுதி மக்கள் மறந்தாலும், அது தன் கடமை என செய்து வரும் இறைப் பணியால் ''நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லோருக்கும் பெய்யுமாம் மழை'' என்ற உண்மை அந்தத் திருவேங்கடப் பெருமாளுக்குத் தெரியும்.

பிள்ளையார் கோயிலுக்குப் பக்கத்தில் ஊர் காக்கும் முத்துமாரியம்மன் திருக்கோயில். அங்கு வாழும் மருதமுத்து இறைத் தொண்டால் ஆண்டுக்கு ஆண்டு சீரோடும் சிறப்போடும் நடந்து வரும் விழாக் கோலம், காண்பவர் உள்ளத்தைக் கொள்ளைக் கொண்டு காணாதவர் உள்ளத்தில் பேரானந்தம் ஏற்படச் செய்யும்.

புதுப்பாக்கம் ஊருக்கு வடகிழக்குப் பக்கத்தில் சிவன் கோயில், அதை ஒட்டினாற்போல் அழகிய குளம். அக்குளத்தைச் சுற்றி உள்ள கரையில் உயிர்காக்கும் மூலிகைகள் ஏராளம். உடலுக்கும், உயிருக்கும் ஆதாரமாய் உள்ள நாபி கபாலத்தில்

ஏற்படும் சூட்டையும், ரணத்தையும், வெட்டை ஒழுக்கையும் தீர்க்க வெள்ளெருக்கன் வேரை பசுந்தயிர் விட்டு அரைத்து, பசுந்தயிர் 100 மில்லி அளவில் கலந்து சாப்பிட மேற்கண்ட நோய் தீருமென்று அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் தினம் தினம் வருவது வாடிக்கை. உடலில் தேமல் படை இருந்தால் மான் செவி கள்ளி இலையை அரைத்துத் தேய்க்கநோய் நீக்கி உடற் பொலிவுடன் இருக்க வைத்தியர்கள் வருவதுண்டு.

பரமேஸ்வரன் திருக்கோயிலைச் சுற்றி ஓடும் ஓடையில் இருக்கும் மஞ்சள் கரிசலாங்கண்ணியை அரைத்துக் காலை வெறும் வயிற்றில் மூன்று மண்டலம் நாள் தவறாமல் சாப்பிட்டு வர, உடலில் காயசித்தியாகும். மண்ணீரல், கல்லீரல், நோய் இருந்தால் நீங்கும், உடல் தூய்மையாகும். நரை, திரை, மூப்பு, நீங்கவும் சித்தர்கள் இங்கு வருவதுண்டு.

இப்படி மூலிகைக்கு மட்டுமல்லாமல் உண்மையான பக்தியில் முக்தி பெற வேண்டும் என்பதற்காக அந்தச் சிவனை நாடி வருபவர்கள் அதிகம்.

அந்த ஊரின் கிழக்குப் பகுதியிலே உள்ள பொன்னியம்மன் திருக்கோயிலும் அதனை ஒட்டினாற் போல் உள்ள ஆழமான குளமும் தெய்வீக அருளையும், உயர்ந்த ஞானத்தையும் அளிக்க வல்ல வல்லமையை அக்குளம் திருவருள் பெற்று இருந்தது.

அந்தக் குளத்தில் குளித்தால் நீண்ட ஆயுளும், புண்ணிய அருளும் கிடைக்கும் என எண்ணி சுற்று வட்டாரத்து மக்கள் மட்டுமல்லாமல் பல மைல்கள் கடந்தும் மக்கள் வந்து, அந்த நீரை எடுத்துக் குளித்தும், அந்த நீரைக் குடிக்க வீட்டுக்கும் எடுத்துச் செல்வார்கள்.

ஊருக்கு மத்தியில் வேணுகோபாலசாமி கோயிலும், அதற்குப் பக்கத்துத் தெருவில் கண்ணன் திருக்கோயிலும் உள்ளன.

திருக்கோயில்கள் அங்கு நிறைந்து சிறப்பு பெற்றுஇருந்ததால் அந்த ஊரும் ஊர் மக்களும் ஒற்றுமை உணர்வோடு வேறுபாடு இல்லாமல் வாழ்ந்து வந்தார்கள்.

ராகவ ஐயர் மறுநாள் காலை பெருமாள் கோயிலுக்குப் பூசை செய்ய அந்தத் தெருவுக்கு வந்து கொண்டு இருந்தார். அவரைப் பின் தொடர்ந்து முருகேசன் என்னும் அந்த சின்னஞ் சிறுபையனும் வந்து கொண்டு இருந்தான். முருகேசன் நடந்து வரும் காலடி ஓசையைக் கேட்டு ராகவ ஐயர் திரும்பிப் பார்க்க

"இன்று இந்த பையன் ஏதோ குறும்பு செய்து நம்மை அசிங்கப் படுத்தத்தான் வருகிறான். வரட்டும் எல்லாம் அந்த பகவான் பார்த்துக் கொள்வான்"—என்று தன் மனதில் நினைத்துக் கொண்டார்.

ராகவ ஐயரின் பாதையின் முன் வழிமறித்து நின்ற முருகேசன் "ஐயரெல்லாம் உயர்ந்த சாதி, நாங்களெல்லாம் தாழ்ந்த சாதியா? மனிதனில் உயர்வு எது? தாழ்வு ஏது? உங்களுடைய ரத்தமும், எங்களுடைய ரத்தமும் ஒரே நிறம் தானே? சாதிக்குத் தகுந்தவாறு இரத்தம் வேறுபடுகிறதா?" பக்கத்து தெரு நாகப்பன் என்பவன் சொல்லித் தந்ததை அப்படியே ஒப்புவித்தான் முருகேசன்.

இந்தச் சின்னஞ்சிறுவயதில் முருகேசனுக்கு இப்படிப்பட்ட சிந்தனையா என்று வியப்படைந்த ராகவஐயர் "முருகேசா! சற்று நிதானமாக பேசுவோம் வா. நீ கேட்ட விஷயத்தில் நீ கோபப்படவோ, அல்லது நான் கோபப்படவோ எதுவும் இல்லை. நீ கேட்ட கேள்வி நியாயமானது" என்று கூறிக் கொண்டே மாரியம்மன் கோயில் அருகில் இருக்கும் வேப்பமரத் தின் அடியில் இருக்கும் கருங்கல் பாறையில் அமர்ந்தார் ராகவ ஐயர். அவருக்கு எதிரே நின்று கொண்டு தான் கேட்ட கேள்விக்குப் பதிலை எதிர்பார்த்தான் முருகேசன்.

"முருகேசா! நீயோ சிறுபிள்ளை, இந்தச் சிறுவயதில் உனக்கு ஏற்பட்ட கேள்வி ஞானமோ உயர்வானது, நியாய மானதும் ஆகும். மனித இனத்தில் உயர்வு தாழ்வு என்பது சிறிது கூட கிடையாது. மனிதன் மனிதனாக வாழ்வதற்கு சில நியதி களை, நியாயங்களை ஒழுக்கங்களை தர்மங்களை உண்டாக்கிக் கொண்டான். எந்த மனிதன் உடலாலும், உள்ளத்தாலும், ஒழுக்கத்துடனும், நியாயத்துடனும், தர்மத்துடனும் தன் வாழ்க்கையில் நடக்கின்றானோ அவனே உயர்ந்த சாதி. இதில் ஐயர் என்பவர் உயர்ந்தவர் என்பதை நான் ஏற்றுக் கொள்பவன் அல்ல.

அந்த காலத்தில் தொழில் முறையில் மனிதனின் வாழ்க்கை முறையை சீர் அமைக்க, தொழில் வளர மனிதனைப் பல பிரிவாகப் பிரித்து வைத்தார்கள். அந்தத் தொழில் முறையில் அமைந்த வாழ்க்கை முறையே அவர்களின் சாதியாக மாறியது. அது அந்தக் காலத்திற்குத் தேவைப்பட்டது. ஆனால் இன்று அது தேவைப்படவில்லை. மனிதனின் தொழில் முறைகள் விஞ்ஞான யுகத்தில் வேறுபடுகிறது. ஆகவே இன்று தொழில் முறை சாதிகள் தேவை இல்லை.

நான் அணிந்துள்ள இந்தப் பூணூலை சாஸ்திர சம்பிர தாயத்திற்கு மட்டும் அணியவில்லை. உள்ளத்தில் தர்மத்தையும், நீதி நேர்மையையும், நியாயத்தையும், ஒழுக்கத்தையும் சுட்டிக் காட்ட வேண்டும் என்ற உறுதியினை ஞாபகப்படுத்தவே நான் அணிந்திருக்கிறேன். அது போல் நீயும் நடப்பதாக இருந்தால், நான் இப்பொழுதே உனக்குப் பூணூல் அணிவிக்கின்றேன்: பூணூல் அணிந்து கொண்டால் ஒழுக்கமும், கட்டுப்பாடும், நீதியையும், நேர்மையையும், கடைப்பிடிப்பவனாகவும் இருக்க வேண்டும். பிராமணர் அல்லாதவர்கள் எத்தனையோ பிரிவினர் பூணூல் அணிந்து கொள்கிறார்கள். அதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் பூணூல் அணிந்து கொண்டு ஒழுக்கம் தவறி நீதி நேர்மை என்ற கட்டுப்பாடு மீறி நடந்தால் அது மகாபாவம். இப்பொழுது நீ பூணூல் அணிந்து கொள்கின்றாயா?'' என்று கூறி முடித்தார் ராகவ ஐயர்.

''ஐயா! நான் பிறர் சொல்லைக் கேட்டுத் தங்களைத் தவறாக எண்ணி, தவறாகப் பேசிவிட்டேன். என்னை மன்னியுங்கள்! நானும் மனிதனாக, மனித இனத்தில் உயர்ந்த வனாக, அதாவது உத்தமனாக, படித்தவனாக, ஒழுக்கம் உள்ள வனாக வர வேண்டும் என்று ஆசைப்படுகின்றேன். ஆகவே நீங்கள் எனக்குப் பூணூல் அணிவித்தால் அதை என் உயர்வுக்கு ஊன்றுகோலாகவும், ஒழுக்கத்திற்கு ஞாபகச் சின்னமாகவும், போற்றிப் பாதுகாத்து வாழ்க்கையில் உயர்வேன்''—என்று கூறி வணங்கினான் முருகேசன்.

''சாணக்கியன் தான் கொண்ட சபதத்தை நிறைவேற்ற குடுமியை முடித்தான், அது போல் நீ அணியும் இப் பூணூல் உன் மனதிற்கு உறுதியை ஏற்படுத்த வேண்டும். உன் மனதிற்கு வைராக்கியத்தை ஏற்படுத்த வேண்டும். வாழ்க்கையில் உயர வேண்டும் என்ற கோட்பாட்டை ஏற்படுத்த வேண்டும், அதில் வைராக்கியம் உள்ளத்தில் ஆழமாகப் பதிய உடலில் உள்ள சிறு அடையாளச் சின்னமே இந்தப் பூணூல். ஒன்றைப்பற்றி அதில் ஆழ்ந்த பற்றுவைக்க, உறுதியை வளர்க்க, வைராக்கியத்தை நிறைவேற்ற உனக்குப் பூணூல் அணிவிக்கின்றேன்''—என்று கூறி முருகேசனுக்கு பூணூலை அணிவித்தார் ராகவ ஐயர்.

முருகேசன் ராகவ ஐயரின் கால்களில் விழுந்து வணங்கி எழுந்தபோது ராகவ ஐயர் ''முருகேசா, நீ இன்று மதியம் என்னை என் வீட்டில் வந்து பார், நாம் இருவரும் சென்னை வண்ணையம்பதி பகுதியில் உள்ள என் நண்பர் நடத்தும் ''திக்கற்றோர் அறிவுப்பள்ளி'' ...யில் உன்னைச் சேர்க்கின்றேன்.

நீயோ! தாயும், தந்தையும் இல்லாதவனாக இருக்கிறாய். நீ வரும்போது இப்பொழுது உன்னை வளர்க்கும் உறவுக்காரரிடம் உன்னை திக்கற்றோர் அறிவுப்பள்ளியில் சேர்க்க அனுமதிக்கக் கோரும் கடிதம் மட்டும் வாங்கிவா, அது போதும், மற்ற செலவு களை நானே பார்த்துக் கொள்கின்றேன்''—என்றார் ராகவ ஐயர்.

அன்று மதியம் ராகவ ஐயரும், முருகேசனும், வண்ணையம் பதியில் இருக்கும் நண்பரின் பள்ளிக்குச் சென்று முருகேசனை அங்கு சேர்த்து விட்டு வீடு வந்து சேர்ந்தார் ராகவ ஐயர்.

''ஐயர்களைக் குறை கூறும் நம் இனத்தில்தானே பல ஆயிரம் வேறுபாடுகள், பல பிரிவினைகள். ஒரு சாதிக்குள்ளேயே நான் உயர்ந்தவன் நீ தாழ்ந்தவன் என்று கூறிக் கொள்ளும் மடமையை என்னவென்று கூறுவது. ஒரு பிரிவுக்குள்ளேயே தாழ்ந்தவன், நான் உயர்ந்தவன் என்று நாம் கூறும் போது வேதங்களையும். சாஸ்திரங்களையும் நம்பி வாழும் ஒரு பிரிவினர் நம்மை ஏன் ஒதுக்கமாட்டார்கள்!

மனிதன் வாழும்போது குணத்தால் வேறுபாடு ஏற் படலாம், ஒரு பிரிவுக்குள்ளேயே பணத்தால் வேறுபாடு ஏற்படு கிறதே அது ஏன்?

ஒருவன் இறந்து போனால். பறை சாற்றுபவன் ஒரு சாதிப் பிரிவு, சவத்திற்குப் பாடைகட்டுபவன் ஒரு பிரிவு, சவ ஊர் வலத்தின் முன்னே சங்கு, தாரை ஊதுபவன் ஒரு பிர்வு. ஊர் எல்லைவரை செல்ல துணியைப் பிரித்து சவத்திற்கு முன்னே போடுபவன் ஒரு பிரிவு, இறந்தவனின் உறவுக்காரனின் முகத்தை மழிப்பவன் ஒரு பிரிவு.

வாழும்போது ஏற்பட்ட சாதிப்பிரிவுகள், அவன் சாகும் போதும் சாகாமல் வாழ்கின்றனவே என்ன கொடுமை இது'' என்று எண்ணிப் பார்த்து திக்கற்றோர் அறிவுப் பள்ளியில் மதிய உணவை உண்டு கொண்டு இருந்தான் முருகேசன்.

முருகேசன் மார்பில் அணிந்திருந்த பூணூலைப் பார்த்த அவனுடன் படிக்கும் தியாகராசன் ''கருப்பு ஐயர்'' என்றும், அவன் கருத்த உருவத்தைப் பார்த்து ''கருங்குரங்கு'' என்றும் கூறி கேலி செய்தான். கேலி செய்யும் தியாகராசன் முருகேசனை விட அழகானவன் அல்ல. ஒரு முறைக்குப் பல முறை கேலி செய்வதைச் சகித்துக் கொண்டிருந்த முருகேசன், தியாகராசன் மார்பிலும் முகத்திலும் பலமாக தாக்கிவிட, அச்செய்தி அப் பள்ளியின் நிர்வாகத்திற்கு எட்ட அப்பள்ளி நிர்வாக முருகேசன்

மீது குற்றம் கண்டு பிடித்து, அவனைச் செங்கற்பட்டுக்கு அருகில் இருக்கும் வேறு ஒரு பள்ளிக்கு மாற்றிவிட்டார்கள்.

முருகேசனைப் பள்ளியில் சேர்த்து, ஒருவாரம் கழித்து ராகவ ஐயர் அவனின் நிலையை அறிந்து வர சென்னை வந்து திக்கற்றோர் அறிவுப் பள்ளிக்குச் சென்று பார்க்க, அங்கு முருகேசன் மூர்க்க நிலையை அறிந்து "இனி அவன் உருப்பட மாட்டான், இதற்கு மேல் ஆண்டவன் விட்ட வழி" என்று மனம் சோர்ந்து வீடு வந்து சேர்ந்தார் ராகவ ஐயர்.

ராகவ ஐயருக்கு மனைவியும், முருகேசன் வயதில் ஒரு மகன் மட்டுமே இருந்தனர். தன் மகனுக்குக் கிருஷ்ணன் என்று பெயர் வைத்துக் கண்ணும் கருத்துமாய் வளர்த்து வந்தார், ராகவஐயர். மகன் படிப்பில் நாட்டம் செலுத்துவதை விட விளையாட்டிலும் சினிமாவிலும், ஊர் சுற்றுவதிலும் ஆர்வம் கொண்டிருப்பதால் இவன் தன்னிடம் இருப்பதைவிட ஐம்பத்தோராவது சிவதளம் பெற்றதனால்"அம்பத்தூர்"எனபெயர் பெற்றதாகக் கூறப்படும் அம்பத்தூரில் உள்ள தன் தம்பி வீட்டில் படிக்க வைத்தார் ராகவ ஐயர்.

கால வெள்ளங்கள் கரைபுரண்டு ஓடி, புதுபாக்கம் ஊர் முப்பது ஆண்டுகளுக்குப் பின்னால் எங்கும் தொழிற்சாலை மயமானது. எங்கும் கழிவுநீர் தேக்கங்கள், அசுத்தக்காற்று, எப்பக்கமும் துர்நாற்ற வீச்சும் மாசு படிந்த நிலை என்று மாறியது.

இந்தியா சுதந்திரம் அடைந்து நாற்பத்தி ஏழு ஆண்டுகள் முடிந்த பின்னும் சாதி நாற்றங்களோடு, மனித சுகாதார நாற்றங்களும் ஓய்ந்த பாடில்லை. இன்னும் எத்தனை பாரதி, பாரதிதாசன், பெரியார், அண்ணாக்கள் தோன்றினாலும் சாதி ஒழியுமோ ஒழியாதோ தெரியாது; ஆனால் சுகாதாரம் மட்டும் ஏற்படாது என்று கூறுவதுபோல் அங்கு எழும் புகை மண்டலம், கழிவுநீர் தேக்கங்களும் சொல்லிக் கொண்டே இருந்தது.

எழுபத்தி இரண்டு வயதில் தன் உடல் தளர்ந்தாலும் தன் உள்ளம் தளராமல் பெருமாள் கோயில் பூசைகளை முறைப்படி செய்து கொண்டு இருந்தார் ராகவ ஐயர்—

"சாமி...! சாமி!...!! நாளை நம் ஊருக்கு, மாவட்ட கலெக்டர் வராராம்! வந்து அம்பத்தூர் தொழிற்பேட்டை அலுவலக வளாகத்தைத் திறந்து வைக்கப் போகிறாராம்,

நீங்கள் அவசியம் வாங்க, உங்கள் சார்பில் நம் ஊரில் வேலை இல்லாமல் இருக்கும் இளம் பிள்ளைகளை வேலைக்கு எடுக்க வேண்டும் என்று கோரும் மனுவைக் கொடுப்போம்'' என்று கூறி முடித்தார்.

பள்ளிக்கு ச்சென்று பாடம் கற்கா விட்டாலும் உலக வாழ்க்கை பாடத்தைக் கற்று இந்த ஊருக்கு பெரும் தொண்டு செய்யும் ராஜி ஆறுமுகம் அவர்கள்.

''வேலை இல்லாமல் இருக்கும் அனைத்து இளைஞர்கள் பெயர், வயது, படிப்பு மற்ற தகுதிகளைக் குறித்து என்னிடம் தாருங்கள். மேலும் நீங்களும் மற்றும் நம் ஊரில் உள்ள மற்ற மக்களையும் அழைத்து வாருங்கள்; மனு கொடுத்துவைப்போம், நடப்பது நல்லதாக நடக்கும்''—என்று கூறி முடித்தார் ராகவ ஐயர்.

மறுநாள் மாலை தொழிற்பேட்டை அலுவலக வளா கத்தைத் திறந்து வைக்க கோலாகல விழா ஏற்பாடாகிக் கொண்டிருந்தது.

போலீஸ் வேன் பாதுகாப்பிற்கு முன்வர, மாவட்ட கலெக்டர் கார் பின்வர, விழாவிற்கு வந்து இருந்தவர்கள் சுறுசுறுப்பானார்கள்.

திடீரென்று மாவட்ட கலெக்டரின் காரை நோக்கியும் போலீஸ் வேனை நோக்கியும் படபடவென்று கற்கள் வந்துவிழ, விழாவிற்கு வந்தவர்கள், நான்குபுறமும் சிதறி ஓட ஆரம்பித்தனர்.

கலெக்டர், காரை நிறுத்த சொல்லி, வேகமாகக் காரை விட்டு வெளியே வந்தார். ''எதற்காக கல்வீசுகின்றார்கள் உடனே அவர்களை பிடித்து வாருங்கள்; திறப்புவிழா நிகழ்ச்சியை எக்காரணத்தைக் கொண்டும் நிறுத்தாமல், மற்ற ஏற்பாடு களைச் செய்யுங்கள், பொது மக்களுக்கு எந்த வித இடையூறும் இல்லாமல் விழா நடைபெற வேண்டும்'' என்று ஆணை பிறப் பித்தார்.

கலெக்டருக்குப் பாதுகாப்புக்காக வந்த டி.எஸ்.பி. ''சார் இப்பகுதி மக்களுக்கு ஒரு பெரிய குறைபாடு உண்டு. அதாவது இங்கு வாழும் மக்கள் விவசாயத்தையே நம்பி வாழ்ந்தார்கள். ஆனால் இப்பொழுது இப்பகுதி முழுக்க தொழிற்பேட்டையாக உள்ளது. இங்கு உள்ளவர்களுக்கு வேலை வாய்ப்பு இல்லாததால் வறுமையில் வாடுகிறார்கள். சில இளைஞர்கள் சமூக விரோதச் செயல் செய்கின்றார்கள். இது அவர்களின் செயலாக இருக்கும்'' என்று கூறிக் கொண்டு இருக்கும் போது நான்கு ஐந்து இளைஞர்

களைப் பிடித்துக் கொண்டு வந்தது, அந்த இளைஞர்களைப் போலீஸ் அதிகாரியின் முன்பும், கலெக்டர் முன்பும் நிற்க வைத்தார்கள். காவல்துறையினர் பிடித்து வந்த அனைவரின் முகத்திலும் ஒரு தெளிவு இருந்தது. வெறி இல்லை. உரிமை இருந்தது, கொடுமை இல்லை. கலெக்டர் ஒவ்வொரு இளைஞரின் ஊர் பெயர். தந்தையின் பெயர், தொழில் ஆகியவற்றை விசாரித்து கொண்டு இருந்தபோது கிருஷ்ணன் என்ற பெயரும், அவன் தந்தையின் பெயர் ராகவ ஐயர், என்ற பெயரைக் கேட்ட கலெக்டர் மலைத்துப் போய் நின்று விட்டு, சற்று சுதாரித்து கிருஷ்ணனைத் தனியாக. அழைத்து "உன் அப்பா எங்கு இருக் கிறார்"என்று கேட்டார் அதற்குக் கிருஷ்ணன்"அப்பாஉங்களிடம் மனு கொடுக்க இங்கு வந்து இருக்கிறார். எங்கள் நிலங்களை அபகரித்துக் கொண்டு, விவசாயத்தையே நம்பின எங்களை நடுத்தெருவில் விட்ட இந்த அரசாங்கத்திற்கு எங்கள் உணர்வு களை எண்ணங்களை எல்லா மக்களில் உள்ளங்களுக்குத் தெரிய வும் நாங்கள் கல்வீச்சு நடத்தினோம்" என்று கூறி முடித்தான். "படித்தவர்களுக்கும், தொழில் தெரிந்தவர்களுக்கும் வேலை தருவோம், தரவேண்டும் ஆனால் மற்றவர்களுக்கு எப்படி வேலை தருவது? படித்தவர்களுக்கும் வேலை தெரிந்தவர்களுக்கும் மட்டும் பசி இருக்கிறதா? படிக்காதவர்களுக்கு பசியே இல்லையா விவசாயிகளின் நிலங்களை வாங்கும் முன்பு இதை அரசாங்கம் யோசித்து இருக்க வேண்டும்," கண்கள் சிவக்க நாடி நரம்புகள் துடிக்க ஆவேசமாகக் கூறினான் கிருஷ்ணன். ஒரு காவல்துறை அதிகாரியைப் பார்த்து கலெக்டர் "ராகவ ஐயர் என்பவர் இக்கூட்டத்தில் இருந்தால் உடனே அவரை அழைத்து வாருங்கள்" என்றுஆணையிட்டார். வயது முதிர்வில் தள்ளாடித் தள்ளாடி வரும் ராகவ ஐயரை எதிர் கொண்டு அழைத்த கலெக்டர் "சாமி, நீங்க நல்லா இருக்கீங்களா? என்னை உங்களுக்கு தெரிகிறதா?" என்றார் கலெக்டர். "தெரிய வில்லையே! தாங்களேசொன்னால்நல்லதாக இருக்கும்"என்றார் ராகவஐயர்.

கலெக்டர் ராகவ ஐயரை வணங்கி, "ஐயா, நான்தான் உங்கள் முருகேசன். நீங்கள் சிறுவயதில் பூணூல் அணிவித்த அந்த முருகேசன், உங்களுடைய சொல்லை மந்திரமாகவும், நீங்கள் அணிவித்த பூணூலை ஜெபமாலையாகவும் எண்ணி உறுதி யுடனும், உண்மையுடனும், ஒழுக்கத்துடனும் கடைபிடித்து இன்று கலெக்டராக உங்கள் முன் நிற்கிறேன். இது நீங்கள் எனக்குப் போட்ட பிச்சை" என்று கூறி முடித்தார் கலெக்டர்,

"பதவி இன்று இருக்கும் நாளை போகும். ஆனால் ஒழுக்கமும், தர்மமும், உண்மையும் என்றும் நிலைத்து இருக்கும். முருகேசா, பிச்சை நான் போடவில்லை. இப்பொழுது நீங்கள் தான் இந்த ஊருக்கு "மறுவாழ்வு" என்ற பிச்சை போட வேண்டும், அதாவது இந்தப் பகுதி மக்களுக்கு வேலை கொடுத்துக் காப்பாற்ற வேண்டும்" என்று கூறி அன்போடு முருகேசனை தன் உடலோடு கட்டி அணைத்துக் கொண்டார் ராகவ ஐயர்.

தொழிற்பேட்டை வளாக திறப்பு விழாவை நிறுத்தி வைத்து; அப்பகுதி மக்களின் வேலைக்கு ஆள் சேர்க்கும் வேலையும் மிக வேகமாக நடத்த ஆணை பிறப்பித்தார் கலெக்டர்.

வேலைக்கு ஆள் எடுக்கும் இந்த விழா ஏழை எளிய மக்களின் "புதுவாழ்க்கையின் திறப்புவிழா" "வாழ்க்கையில் முன்னேறத் துடிக்கும் இளைஞர்களுக்கு பொன் விழா" என்று மக்கள் முழக்கம் ராகவஐயரின் காதிலும், கலெக்டர் முருகேசன் காதிலும் தேனிசையாகக் கேட்டது. அப்பொழுது இரவு நேர பூஜைக்காக கார்மேகவண்ணனின் தெய்வீக மணியோசை அருளோசையாக மக்களை ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த்தியது.



# மவுனத்தின் மனசாட்சி

''டாக்டர்!\தொழில் அதிபர் மதன்மோகனுக்கு இப்பொழுது சுயநினைவு திரும்பி இருக்கிறது. நீங்கள் வந்து பார்த்தால் நல்லா இருக்கும்''

''சரி! உறவினர்கள், நண்பர்கள், யாரையும் மதன் மோகனைப் பார்க்க அனுமதிக்காதீர்கள்! இன்னும் சிறிது நேரத்தில் நான் வந்து பார்க்கின்றேன்!''

செந்தில் முருகன் நர்ஸிங் ஹோம் தலைமை மருத்துவர் செல்வி பூங்கோதை எம்.எஸ் எப். ஆர்.சி.எஸ்., அவர்கள் உடன் இருக்கும் மருத்துவர் செல்வி அபிராமி, எம்.பி.பி.எஸ் , எப்.ஆர்.சி.எஸ்.,க்கு பதிலளித்து விட்டுத் திரும்பிய போது—

டிரிங்—டிரிங்...டிரிங்...என்று டெலிபோன் மணி ஒலித்தது. ரிசீவரைக் கையில் எடுத்த டாக்டர் பூங்கோதை ''ஹலோ .. பூங்கோதை பேசறேன். நீங்கள் யார் பேசறது?''

''நான் ஹெல்த் மினிஸ்டரின் பி. ஏ. பேசறேன். தொழில் அதிபர் மதன்மோகன் உடல்நிலை எப்படி இருக்கிறது? எப்படியும் தொழில் அதிபரின் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்று ஹெல்த் மினிஸ்டர் அன்புக்கட்டளையிட்டுள்ளார்கள். முடிந்தால் மினிஸ்டர் அங்கு வந்து தொழில் அதிபரைப் பார்ப்பதாகக் கூறி உள்ளார்.''

''அவரின் உடல்நிலையில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டு இருக்கிறது. அவருக்கு சுயநினைவு திரும்பி இருக்கிறது. நாங்கள் அதிக அக்கறை எடுத்துக் கொண்டு அவரின் உயிரை எப்படியும் காப்பாற்றி விடுவோம் என்று அமைச்சருக்குச் சொல்லுங்கள். அமைச்சருக்கு என் வணக்கத்தையும் நன்றியையும் சொல்லுங்கள்.''

''அப்படியே ஆகட்டும். நன்றி வணக்கம்'' என்று கூறி முடித்தார் ஹெல்த் அமைச்சரின் பி.ஏ.

சுமார் இருபதாயிரம் தொழிலாளர்கள் தொழில் புரியும் பெரிய ஸ்தாபனத்தின் அதிபர் மட்டுமல்ல மதன்மோகன். நாட்டில் நடக்கும் நல்ல செயல்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து தன் உழைப்பையும், பணத்தையும் செலவு செய்பவர் தொழில் அதிபர். எதிர்கட்சி முதற்கொண்டு ஆளும் கட்சி வரை நல்ல தொடர்பை உண்டு பண்ணிக் கொண்டவர். எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் அந்தக் கட்சியின் செல்வாக்கு மிக்கத் தலைவர்கள். மதன்மோகனுக்கு மிக மிக வேண்டியவர் களாக இருப்பார்கள்.

''எதிர்க்கட்சி, ஆளும் கட்சி என்று மட்டும் இல்லாமல் நாட்டிலுள்ள சிறுசிறு கட்சிகளுக்கும், பொதுமக்களுக்கும் மிக வேண்டியவர் மதன்மோகன்.

ஏழைப் பங்காளன், பாட்டாளியின் கூட்டாளி, ஏற்றதாழ்வு பார்க்காத'சீமான், கோபுரத்திலிருந்து குடிசையைப் பார்க்காமல் குடிசைக்கு வந்து கோபுரத்தைப் பார்த்து குடிசையும் கோபுரமாக வேண்டும் என்று எண்ணுபவர் மதன்மோகன்'' பரபரப்பு, சலசலப்பு, முணுமுணுப்புக்களுக்கு இடையே தொழிலாளர்கள் பேசிக் கொண்டார்கள்.

தொழிலாளர்கள் பேசிக் கொண்டே செய்திகளையும், மதன்மோகன் திடீர் விபத்தைக் குறித்தும் பக்கத்திற்குப் பக்கம் தினசரி பத்திரிகைகளில் செய்தி வந்து கொண்டு இருந்தது.

வாரத்தில் ஒரு நாள் மதிய உணவுக்குப் பிறகு தொழிற் சாலையைச் சுற்றிப் பார்ப்பது தொழில் அதிபரின் வழக்க மாகும். அவருடன் அவரின் பர்சனல் பி.ஏ.வும் மற்றும் கம்பெனி யின் நிர்வாகக் குழுவினரும் உடன் வருவார்கள்.

பதினாறு பிரிவாக உள்ள தொழிற்கூடத்தின் ஒவ்வொரு பிரிவாகப் பார்த்து வரும்போது பதினைந்தாவது பிரிவான 'மிஷன் ஷாப்' பிரிவுக்கு மதன்மோகன் வந்து கொண்டு இருந்த போது ஆடொமெடிக் கட்டிங் மிஷினில் பொருத்தப்பட்டிருந்த ஒரு இரும்புத் துண்டு எதிர்பாராத விதமாக மதன்மோகன் மார்புப் பகுதியைத் தாக்கிவிட்டது.

கண்இமைக்கும் நேரத்தில் இது நடந்து விட, கம்பெனியின் அபாயச்சங்கு ஒலித்தது. சற்றும் தாமதிக்காமல் அப்பகுதியில் இருக்கும் மிகப்பெரிய நர்ஸிங் ஹோமான செந்தில் முருகன் நர்ஸிங்ஹோமிற்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

நவீன மருத்துவ வசதிகள் அனைத்தும் பெற்ற மருத்துவ மனையாக அது விளங்கியது. வெளிநாட்டிலிருந்து தருவிக்கப் பட்ட நவீன மருத்துவ இயந்திரங்களும், மருத்துக் கருவிகளும், புதிய மருந்துகளும் பெற்று விளங்கியது.

இந்த எதிர்பாராத விபத்தால் தொழிற்சாலைக்கு அன்று விடுமுறை விடப்பட்டது. தொழிலாளர்கள் அனைவரும் மருத்துவமனை வாயிற்படியில் கண்ணீருடனும் துயரமுடனும் காத்திருந்தார்கள்.

''தொழிலாளி, முதலாளி என்று வேற்றுமை பார்க்காத இந்த தர்மப்பிரபுக்கா இந்தக் கதி'' என்று தொழிலாளர்களின் குடும்பத்தினர் கண்ணீர் விட்டு அழும் காட்சி பரிதாபமாக இருந்தது.

தானியங்கி இயந்திரத்திலிருந்து அந்த இரும்புத்துண்டு விழுந்ததால், இந்த விபத்தில் எந்த சதி வேலையும் இல்லை என்பது கம்பெனியின் நிர்வாகத்தின் முடிவாகும். அதுவே தொழிலாளர்களின் கணிப்பும் ஆகும். ஆகவே இந்த நிகழ்ச்சியில் போலீஸ் தலையீடு என்பது ஏதும் அதிகம் இல்லை.

மதன்மோகனைப் பரிசோதிக்கச் சென்ற டாக்டர் பூங்கோதையுடன், பெரிய டாக்டர் குழு புடைசூழச் சென்றார்கள். அப்பொழுது மதன்மோகன் சற்று சுயநினைவுடன் இருந்தார். மருத்துவர்கள் ஒருவருடன் ஒருவர் கலந்து பேசி தன் உடல் மீதும் உயிர்மீதும் அக்கறை கொண்டிருப்பதைக் கண்டார்.

டாக்டர், அபிராமி சி.ஏ.டி. கருவியைக் கொண்டு மார்பு எலும்பில் முறிவு உள்ளதா என்பதை ஸ்கேனிங் மூலம் கண் கூடாகப் பார்த்தார். பிறகு சி.ஏ.டி.ஸ்கேன் கருவி மருத்துவத் துறையில் பல மடங்கு முன்னேற்றம் கொண்டகருவியாகும். இதன் விலையோ ஒரு கோடிக்கு அதிகமானதாகும். இக்கருவியை விட உடலில் இருக்கும் பகுதிகளைத் தெளிவாகக் காட்ட எம்.ஆர்.டி. கருவியைப் பயன்படுத்தி மதன்மோகனின் உடலை முழுவதுமாகப் பரிசோதனை செய்தார். இந்த எம்.ஆர்.டி. கருவியால் கதிர்வீச்சுக்களின் பாதிப்பு உடலுக்கு ஏற்படுவதில்லை.

டாக்டர்கள் குழு பல டெஸ்ட்களுக்குப் பிறகு மதன்மோகன் உடல் படுக்கையைச் சுற்றிப் பலவித மருத்துவ ஆலோசனை களைச் செய்தார்கள். மதன்மோகனுக்கு அடிப்பட்ட மார்புப் பகுதியிலும் அதைச் சுற்றியுள்ள பகுதியில் வலி தாங்கமுடியாத

அளவு இருந்தது. வலி தாங்க முடியாத நிலையில் அவரின் கண்களிலிருந்த கண்ணீர் வெளி வந்தது.

''தனக்கு ஏன் இந்த நிலை ஏற்பட்டது. யாரேனும் தனக்கு எதிரி உண்டா? இந்த விபத்தில் ஏதேனும் சதிவேலை நடந்துள்ளதா? அல்லது தான் செய்த பாவத்தின் விளைவால் வந்த விதியின் விளையாட்டா? ஆம் விதியின் விளையாட்டாகத் தான் இருக்க வேண்டும்'' என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டார் மதன்மோகன்.

மனிதன் பணத்திற்காக என்னென்ன தவறுகளைச் செய்கின்றான். மனிதன் செய்கின்ற தவறுகளுக்கு இறைவன் நிச்சயம் தண்டனை தருகின்றான். அந்தத் தண்டனையின் வேறுபாடு இரண்டு விதமானது.

ஒருவன் தவறு செய்தவுடனேயே, அவன் தவறுக்கான காரணம் கண்டுபிடித்து சமாதானம் செய்யும் முன்னமே தண்டனை தருவது ஒருவிதம். மற்றொன்று ஒருவன் தவறு செய்து, அந்தத் தவறு வெளியே தெரியாமல் இருக்கவும், செய்த தவறுகளுக்குத் தகுந்த தண்டனையைத் தராமல் அதற்குப் பதில் இன்பமான மாயையைத் தந்து, மேலும் மேலும் தவறுகள் செய்யக் காரணமாய் அமைந்து, கடைசியில் அவன் தாங்க முடியாத அளவிற்கு தண்டனையைத்தந்துஅதை அவன் நினைத்து நெஞ்சுருகி செத்து மடியும் வரை நினைத்து ஏங்கும் தண்டனை யாகும். ஆக, தவறு செய்த மனிதன் ஆண்டவனிடமிருந்து எந்த விதத்திலும் தப்பிக்க முடியாது என்பதை ஒவ்வொரு தவறு செய்த மனிதனும் அவர்கள் வாழ்க்கையில் அனுபவித்துக் கொண்டு இருக்கிறான் என்பதை மதன்மோகன் நினைத்துக் கொண்டு படுத்திருந்தார். சில நேரங்களில் அவரின் உடல் பூமியைக் கடந்து ஆகாயத்தில் மிதப்பது போலவும், சில நேரங்களில் தன் ஆவி விண்வெளியில் மிதந்து தத்தளிப்பது போலவும் உணர்ந்தார். இந்த நிலையில் அவரின் கடந்த கால நிகழ்ச்சிகள் அவரின் நெஞ்சில் நிறைந்து நிழற்படம் போல் காட்சி அளித்தன.

* * *

கிள்ளியூர் ஜமீந்தார் முருகபூபதியை அறியாதவர் யாரும் இல்லை. கங்கை கொண்ட சோழபுரம் என்னும்சிறப்புமிக்க அந்த கால ஜமீன் பகுதியை ஜமீன்தாரின் பெயருக்கு ஏற்றாற்போல் முருகன்மீது அளவு கடந்த பக்தி கொண்டு ஆண்டு வந்தார். ஜமீனுக்கு உள்பட்ட பகுதி மக்கள் மட்டும் அல்லாது, பக்கத்து ஜமீனில் துன்பத்தில் வாடினாலும் அவர்களின் துன்பத்தைத் துடைப்பதில் முருக பூபதிக்குப் பெரும் பங்கு உண்டு.

தலைமுறை தலைமுறையாக வரும் ஜமீன் பதவி இம்முறை முருகபூபதிக்கு கிடைத்தது. தனக்கு ஒரு தங்கையைத் தவிர வேறு வாரிசு இல்லாததால் தங்கையின் திருமணத்தை அந்த பகுதி மக்கள் ஆச்சரியப்படும் வகையில் செய்து முடித்தார் அவர். தங்கையின் கணவராக வந்த சொக்கலிங்க பூபதியின் போக்கில் சில தவறான மாற்றங்களைக் கண்ட முருகபூபதிக்கு அவர்மீது வெறுப்பு ஏற்பட்டது. அந்த வெறுப்பே நாளடைவில் தன் தங்கை மீதும் தங்கையின் மைந்தன் ஞானசேகரபூபதி மீதும் ஏற்பட்டது.

ஜமீன்தார் என்றாலே ஆணவம், அகம்பாவம், ஆடம்பரம், அக்கிரமம் என்பது பழைய முறை. அதை மூட்டை கட்டி வைத்து விட்டு, சமஅந்தஸ்து, சமஉரிமை கொடுத்து ஏழை எளிய மக்களிடம் மிக அன்பாகவும் ஆதரவாகவும் நடந்து கொண்ட விதம் தங்கையின் கணவர் சொக்கலிங்கபூபதிக்குப் பிடித்திருந் தாலும், தன் மனைவிக்கும் தனக்கும் சமஉரிமை தரவில்லை என்பது சொக்கலிங்கபூபதியின் எண்ணம்.

முருகபூபதிக்கு மிகப்பிடித்தமான வாசகங்கள் அருட்பெரும் சோதி தனிப்பெருங் கருணை "தனித்திரு, பசித்திரு, விழித்திரு" என்னும் வடலூர் வள்ளலாரின் வாசகங்களாகும்.

முருகபூபதியின் தங்கையும் அவர்களுடைய மகன் ஆகியோரும் முருகபூபதியின் ஜமீனை விட்டு சொக்கலிங்கபூபதிக்குச் சொந்த மான மிகச்சிறிய ஜமீனில் வாழ்ந்து வந்தார்கள்.

முருகபூபதியும் தங்கையின் பாசத்தை அறுக்காமல், அவர் களுக்கே தெரியாமல் சில உதவிகளைச் செய்து வந்தார். தன்னு டைய ஜமீனில் காரியதரிசியும், வழக்கறிஞருமான சுந்தர்ராஜன் மூலம், சதாகாலமும் ஜமீனைப் பற்றியும், எல்லாம் வல்ல முருகப் பெருமானையே நினைத்து வாழும் முருகபூபதிக்கு உறுதுணையாக இருக்கத் தன் தூரத்து உறவு உடைய பதினைந்து வயதுடைய மோகனசுந்தரம் என்னும் இளைஞன் தனக்குத் துணையாக வந்து சேர்ந்தது முருகபூபதிக்கு பெரும் உதவியாக இருந்தது.

காலை முதல் இரவு வரை சிறுசிறு வேலைகளுக்குத் துணை யாக இருந்த மோகனசுந்தரம் அவ்வப்போது முருகபூபதிக்கு சிறுசிறு சந்தேகங்களுக்கும் ஆலோசனை சொல்லும் அளவிற்கு பக்குவம் பெற்றிருந்தான். எள் என்றால் எண்ணெயுடன் வரும்

வேகமும், வெட்டிவா என்றால் கட்டிக்கொண்டு வரும் விவேகமும் மோகனசுந்தரத்துடன் கூடப்பிறந்தது. அதுவே முருகபூபதிக்கு மோகனசுந்தரத்தை மிகமிக பிடித்திருந்தது.

முருகபூபதி ஜமீன் சம்பந்தப்பட்ட விவகாரமாக வெளியூர் செல்ல ஏற்பட்டால் அவருடன் அவசியம் மோகனசுந்தரமும் செல்லும் நிலை ஏற்பட்டது.

ஆட்டுத்தோல் அளவு இடம் கேட்டவன், ஒரு பரந்த தேசத்தையே ஆண்டதுபோல் முருகபூபதியின் நுனி மனதில்இடம் பிடித்தவன் அவரின் அடிமனம் வரை இடம் பிடித்து ஜமீனுக்கு உரிமை கோரும் அளவுக்கு வளர்ந்து விட்டான் மோகனசுந்தரம். முருகபூபதி இல்லாமலேயே ஜமீனின் உரிமையில் தலையிட்டு ஜமீனைத், தன் அதிகாரத்திற்குக் கொண்டுவர இருபது ஆண்டு கள் பிடித்தது மோகனசுந்தரத்திற்கு.

முருகபூபதி இல்லறம் என்ற நல்லறத்தைத் துறந்து, திருமண எண்ணமே இல்லாமல் ஜமீனை மட்டும் ஆளும் தனிமனிதராக வாழ்வது மோகனசுந்தரத்திற்கு நல்லதாகவே அமைந்தது.

முருகபூபதிக்குத் தெரியாமல் சுமார் ஐந்து ஆறு ஆண்டுகால மாக ஜமீனில் உள்ள பகுதியில் சிறுசிறு தவறுகளைச் செய்து வந்த மோகனசுந்தரம், முருகபூபதிக்கு வயது எண்பதைத் தாண்டும் இந்தத் தள்ளாத வயதில் ஜமீனே தனக்குத்தான் என்ற ஆணவத்தில் கற்பழிப்பு, கொலைச் செயல்களைச் செய்து தன் அடியாட்களைக் கொண்டு அதை மறைத்தும் வந்தான். முருகபூபதி கோயில் கட்டுவது, குளம் வெட்டுவது என்பது போன்ற தர்மகாரியங்களைச் செய்து வரும் வேளையில், அவரிடம் உள்ள தனிப்பட்ட செல்வாக்கைக் கொண்டு ஏழை மக்களையும், பாட்டாளி மக்களையும் கொடுமைப்படுத்தி பயமுறுத்தி அடக்கி வைத்திருந்தான் மோகனசுந்தரம்.

மோகனசுந்தரத்தின் செயல்கள் ஜமீனின் முக்கியப்பொறுப்பு வகிக்கும் வழக்கறிஞர் சுந்தரராஜனுக்குத் தெரிந்தும், அவர் முருகபூபதிக்கு அதை எடுத்துச் சொல்லும் காலத்தை எதிர் பார்த்துக் கொண்டு இருந்தார்.

'தனக்கு வயது கூடிவிட்டதாலும், இனி இப்பெரிய ஜமீனைக் கட்டிக் காத்து மக்களுக்கும் ஜமீனுக்கும் நல்லபெயரைத் தரும் ஒருவரை தான் உயிருடன் இருக்கும் போதே தேர்ந்தெடுக்க

வேண்டும்' என்று முருகபூபதி நினைத்தார். அதற்காக வழக்கறிஞர் சுந்தரராஜனை அழைத்து ஆலோசனையும் கேட்டார்.

''ஐயா...உங்களுடைய பரம்பரை பரம்பரையாகக் கட்டிக் காத்துவரும் ஜமீனின் சொத்துக்களையும், கௌரவத்தையும், கட்டிக் காக்கும் பொறுப்பு உங்களுடைய தங்கை மகன் ஞானசேகரபூபதிக்கு மட்டுமே உண்டு. அவர்களுடைய குடும்பம் உங்களிடம் பகை கொண்டு உள்ளதால், நானே சென்று அவர்களை அழைத்து வந்து உங்களிடம் பேச வைக்கின்றேன். நீங்களும் பகையை மறந்து, ஜமீனின் முழுப்பொறுப்பையும் டாக்டருக்குப் படித்து வரும் உங்கள் தங்கை மகன் ஞானசேகர பூபதியிடம் ஒப்படையுங்கள். இதனால் இந்த ஜமீனில் வாழும் எல்லா மக்களும் மகிழ்ச்சி அடைவார்கள்'' என்று கூறி முடித்தார் வழக்கறிஞர் சுந்தரராஜன். ''நான் நினைத்தது வேறு, நீங்கள் கூறுவது மாறுபாடாக உள்ளதே? மோகனசுந்தரம் இங்கு வந்து இருபது ஆண்டுகள் ஆகின்றன. அவனும் எனக்கு நம்பிக்கையாக நடந்து வருகின்றான். அவனுக்கு நான் நல்லது செய்ய வேண்டும்; இந்த ஜமீனை அவனிடமே ஒப்படைத்து விடலாம் என்று நினைக்கின்றேன். நீங்கள் கூறுவது வேறுவிதமாக உள்ளதே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்'' என்று கேட்டார் முருகபூபதி.

''ஐயா...பல ஆயிரம் ஏக்கர் பரப்பளவு உள்ள உங்கள் ஜமீனில் ஒரு பகுதியை அவருக்கு ஒப்படைத்து உங்களின் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுங்கள். ஆனால் இப்பெரிய ஜமீனின் பொறுப்பு முழுவதும் உங்கள் ஞானசேகரபூபதியிடமே சேர வேண்டும். இதுவே என் தாழ்மையான வேண்டுகோளும், ஆலோசனையும் ஆகும்.''

''அது எப்படி! பல ஆண்டுக்காலம் என் உறவே வேண்டாம் என்று தனித்து வாழும் என் தங்கையின் மகனிடம் இந்த ஜமீனை எப்படி ஒப்படைப்பது? என் தங்கைக்கும், அவள் கணவனுக்கும் என்மீது கோபம் இருந்தாலும் இவன் வந்து அல்லவா என்னிடம் உரிமை கொண்டாடி இருக்க வேண்டும். அவனுக்குச் சரியான பாடம் புகட்டவே என் கடைசி காலத்தில் இந்த ஜமீனை மோகனசுந்தரத்திடம் ஒப்படைத்து விட நினைக்கிறேன்'' என்று உறுதியுடன் கூறி முடித்தார் முருகபூபதி.

''ஐயா! உங்களின் முன்னால் நடிக்கும் மோகனசுந்தரத்தை மட்டும் தான் உங்களுக்குத் தெரியும்! உங்களுக்குத் தெரியாமல் இந்த ஜமீனில் பல குடும்பங்கள் மோகனசுந்தரத்தின் செயலால்

நாசமாகி உள்ளன. மோகனசுந்தரம் பசுத்தோல் போர்த்திய புலி. படமெடுத்து ஆடும் அழகிய நாகம், அவனால் சீரழிந்த குடும்பங்களின் விவரங்களை இந்தக் கடிதத்தில் புள்ளி விவரத்தோடு எழுதி இருக்கின்றேன். இதைப் படித்த பின்னும் அவனுக்கு ஜமீனின் பொறுப்பை ஒப்படைப்பதாக இருந்தால் நானும் இந்த ஜமீனை விட்டு விலகிச் செல்கின்றேன்'' என்று ஆவேசமாகக் கூறிமுடித்தார் சுந்தரராஜன்.

முருகபூபதியும், வழக்கறிஞர் சுந்தரராஜனும் நீண்டநேரம் பேசிக் கொண்டிருந்ததை அப்பக்கம் எதிர்பாராமல் வந்த மோகனசுந்தரம் கண்டு திடுக்கிட்டான். தன் இருட்டறை அம்பலங்கள் வெளிச்சத்திற்கு வந்தால், தன் வாழ்க்கை பாழாகி விடும். தான் இதுவரை நடித்த நடிப்பின் முழுப்பலனும் வீணாகி விடும் என்று எண்ணி என்ன செய்வது என்று தெரியாமல் எண்ணிக் கொண்டிருந்தபோது வழக்கறிஞர் கொடுத்த புகார் மனுவைப் படிக்க ஆரம்பித்த முருகபூபதியின் கையில் இருக்கும் மனுவை வேகமாகப் பிடுங்க முனைந்தான் மோகனசுந்தரம். அவன் செயலைத் தடுக்க வேகமாக முனைந்தார் வழக்கறிஞர். இந்த இருவரின் செயலும் மின்னல் வேகத்தில் நடக்க, முருக பூபதியின் கையில் உள்ள மனு, அவரின் காலடியில் விழ அதைப் பறிக்க மிக வேகமாக முருகபூபதியைத் தள்ளினான் மோகன சுந்தரம். தள்ளியவேகத்தில் பளிங்குஅறையில் அழகிற்காக வைக்கப்பட்டிருந்த மிகக் கூர்மையான யானைத் தந்தத்தினால் ஆன பகுதியில் அவரின் மார்புப்பகுதி மோத ரத்த வெள்ளத்தில் கீழே சாய்ந்தார் முருகபூபதி.

வழக்கறிஞர் அங்கிருந்து தப்பிக்க முயன்றபோது அவரின் பின் மண்டையில் அடித்து அவரையும் கொலை செய்தான் மோகனசுந்தரம். இரு பிணங்களையும், யாருக்கும் தெரியாமல் ஜமீனில் உள்ள ஒரு மறைவான இடத்தில் புதைத்து விட்டான் மோகன சுந்தரம். தன் ஜமீன் முழுக்க''ஜமீந்தார் முருகபூபதியும், வழக்கறிஞர் சுந்தரராஜனும் ஜமீன் விஷயமாக அவசரமாக வெளியூர் சென்று இருக்கிறார்கள். அவர்கள் திரும்பி வர ஆறு மாதங்கள் ஆகும்'' என்று கூறி ஜமீன் முழுக்கப் பொய்யைத் தன் அடியாட்கள் மூலம் பரவச் செய்து அதுவே உண்மையென நம்பச் செய்தான் மோகனசுந்தரம்.

ஆறுமாதங்கள் முடிந்த பின்னும் முருகபூபதியும் வழக்கறிஞர் சுந்தரராஜனும் வராததைக் கண்ட ஜமீனில் உள்ளவர்கள் சந்தேகப்படும் நிலைக்கு வரும் முன்னே, போலிக் கையெழுத்து,

போலி தஸ்தாவேஜுக்களைக் கொண்டு வெளியூர் சென்ற ஜமீன்தாரும், சுந்தரராஜனும் எல்லா பொறுப்புக்களையும் தன்னிடம் ஒப்படைத்து இருக்கின்றார்கள். ஜமீன்தாரின் உடல் நிலை சரி இல்லாததாலும் ஜமீன்தாரருக்கு வயது எண்பதுக்கு மேல்ஆகி விட்டதாலும் இனி அவர் ஓய்வெடுக்கவும், அவருக்குத் துணையாக சுந்தரராஜன் இருப்பதாலும் எல்லா பொறுப்புக் களும் தானே பொறுப்பாகும்" எனக் கூறி எல்லா மக்களையும் நம்ப வைத்தான் மோகனசுந்தரம்.

மோகனசுந்தரத்ததை எதிர்த்து நிற்க யாருக்கும் தைரியம் இல்லை. மேலும் அவன் கொடுமைக்கு அஞ்சி மக்கள் தம் உள்ளத்தில் உள்ளதைச் சொல்ல அஞ்சினார்கள். அவனை எதிர்த்தவர்கள் மாண்டார்கள்.

பக்கத்து ஜமீனில் வாழ்ந்த முருகபூபதியின் தங்கையின் குடும்பம் சென்னைக்குக் குடிபெயர்ந்தது மோகனசுந்தரத்திற்கு நல்லதாய் முடிந்தது.

ஜமீனில் இருந்து அதிகாரம் செய்து வாழ்வதை விட, தன் தவறுகள் என்றுமே வெளியே தெரியாமல் இருக்க; ஜமீனின் சொத்துக்களைச் சிறுகச் சிறுக விற்று சென்னைக்கு அருகே பல நூறு ஏக்கர்களை வாங்கிப் போட்டான் மோகனசுந்தரம்.

ஜமீனில் வரும் பணத்தைக் கொண்டு வாங்கிய நிலத்தில் ஒரு பெரிய தொழிற்சாலையை நிறுவ நினைத்துச் செயல்பட தொங்டகினான் மோகனசுந்தரம் என்ற மதன்மோகன்.

அவன் ஏற்படுத்திய தொழிற்சாலையில் இன்று இருப தாயிரம் தொழிலாளர்கள் வேலை செய்யும் நிலை ஏற்பட்டது. வெளிநாட்டு ஏற்றுமதி நாளுக்கு நாள் பெருக மதன்மோகன் மவுசு நாளுக்கு நாள் பெருகியது.

கிள்ளியூர் ஜமீனின் சொத்துக்கள் நாளுக்கு நாள் கரைய ஆரம்பித்தன. சென்னையில் உள்ள தொழிற்சாலையின் வளர்ச்சி நாளுக்கு நாள் பெருக ஆரம்பித்தது.

மதன்மோகன் கம்பெனியின் நிர்வாகத்தைக் கண்டிப் புடனும், கண்ணியத்துடனும் நடத்தி வந்தார். தொழிலாளர் களின் நியாயமான கோரிக்கைகள் உடனுக்குடன் பரிசீலிக்கப் பட்டன.

தொழிலாளர்களும், பொதுமக்களும் மதன்மோகனை தர்மப்பிரபு என்றும், பாட்டாளியின் கூட்டாளி என்றும், ஏழைப் பங்காளன் என்றும் கூறினார்கள்.

மதன்மோகனை ஆராய்ந்து பார்த்த தலைமை மருத்துவர் மற்ற மருத்துவர்களுக்கு, "மதன்மோகனுக்கு ஏற்பட்ட விபத்தினால் ஆன பாதிப்பு சரிசெய்யப்பட்டது. இனி அதனால் அவரின் உயிருக்கு பாதிப்பில்லை. ஆனால் ரத்த அழுத்தம் (Blood Pressure) காரணமாக மூளைக்குச் செல்லும் ரத்தக் குழாய்கள் வலிமை இழந்து ரத்தக்கசிவு ஏற்பட்டதால் மூளையில் ஒரு பக்கத்தில் ரத்த ஓட்டம் நின்று அங்குள்ள நரம்பு அணுக்கள் சேதமடைந்து சுருங்கி இருக்கிறது. மேலும், இவருக்கு சர்க்கரை நோயும் உள்ளதால் இந்த நோயைச் சரி செய்ய பம்பாயில் உள்ள உலகப்புகழ் டாக்டர் என். எஸ். பூபதி வந்தால்தான் முடியும். ஆகவே அவர் இங்கு வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்று கூறி அங்கிருந்து சென்றார்.

உலகப் புகழ்பெற்ற மிகப் பெரிய பாரிசவாயு நோய் நிபுணர்களில் ஒருவரான டாக்டர் என். எஸ். பூபதி, செந்தில் முருகன் நர்ஸிங்ஹோமிற்கு வரவழைக்கப்பட்டார்.

ஒரு பக்கம் மட்டும் உணர்ச்சியற்று மூளையில் உள்ள இரத்தக்குழாய் பாதிப்புக்கு 'ஹெமீப்ளீஜியா' (Hemepligia) என்று பெயர். அந்த நோயின் தன்மையை அறிந்து மருத்துவம் செய்ய மதன்மோகன் அறைக்கு வந்தார் டாக்டர் என். எஸ். பூபதியும் அவருடன் டாக்டர் பூங்கோதையும், துன்பக்கடலில் மூழ்கிப்போய் தன் உடலை தேற்ற உலகப்புகழ் டாக்டர் வருவதை அறிந்த மதன்மோகன், என். எஸ். பூபதியின் முகத்தைப் பார்த்ததும் திடுக்கிட்டார் அவருக்கே புரியாத ஒரு திகில் அவர் மனதில் குடிகொண்டு மனம் திக்...திக்...என்று அடித்துக் கொண்டது.

மதனமோகனின் முகத்தைப்பார்த்த டாக்டர் என்.எஸ். பூபதியின் முகத்தில் எந்தவித மாற்றமும் இல்லை. தான் ஒரு உயிரைப் பாதுகாத்துக் காப்பாற்ற மட்டுமே சென்னைக்கு வரவழைக்கப் பட்டோம் என்பது மட்டும் அவரின் மனதில் இருந்தது.

பூமிநாதரின் தங்கை மகன் ஞானசேகரபூபதி இன்று இந்தியாவில் உள்ள பெரிய மருத்துவர்களில் ஒருவர் என்பதையும், ஞானசேகரபூபதி தன் பெயரை என். எஸ். பூபதி என்று மாற்றிக் கொண்டு தன் உடலையும், உயிரையும் காப்பாற்ற வரவழைக்கப்பட்டார் என்பதை அறிந்த மதன்மோகன் வெட்கப் பட்டுத் தலைகுனிந்தார். மேலும் தன்னை யார் என்று தெரிந்தும், டாக்டர் என். எஸ். பூபதியின் முகத்தில் எந்தவித

எவரும் இல்லாமல் தன் நோயைப் போக்குவதிலேயே முனைந்து செயல்பட்டதையும் நினைத்து நினைத்து கண்ணீர் விட்டார் மதன்மோகன்.

காலம் மட்டுமா ஒரு மனிதனை மாற்றி விடுகிறது? இல்லை சிறு வயதில் பல தவறுகளையும், தப்புகளையும் செய்த ஒரு சிறுவன், முதுமையில் உத்தமனாக, சத்தியவானாக மாற்றுவதற்குக் காலம் மட்டும் காரணம் அன்று. காலத்தோடு அந்த மனிதனின் உழைப்பும், உறுதியும், கடமையும், கட்டுப்பாடும் தான் காரணம்,

''டாக்டர்!...உங்கள் கால்களைப் பிடித்துக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். நீங்கள் எதுவும் பேசாமல் மௌனமாக இருந்து செயல் ஆற்றுவது என் மனதில் ஈட்டியால் குத்துவது போல் இருக்கிறது. தயவுசெய்து உங்கள் மாமா குடும்பத்திற்கு நான் செய்த தவற்றை மன்னித்தேன் என்று ஒரு வார்த்தை கூறுங்கள்''—என்றும் டாக்டர் என். எஸ். பூபதி தனியாக அவரைப் பரிசோதனை செய்தபோது அவரின் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு கெஞ்சினார் மதன்மோகன். ''மன்னிப்பதற்கு நான் யார்? கடவுள் உங்களை மன்னிக்கட்டும்! என் கைகளை விடுங்கள்! நீங்கள் செய்த தவறுகளுக்குத் தண்டனையை இறைவன் தந்துவிட்டான். இனியும் தவறுகளைச் செய்யாமல் வாழ முற்படுங்கள். நாம் இந்த உலகத்தில் சில ஆண்டுகளே வாழ வந்துள்ளோம். இதில் கண்ணியமாக, உண்மையாக வாழ்ந்தால், அதுவே உயர்ந்த வாழ்க்கை. நீங்கள் என்னை விட வயதில் பெரியவர்கள். நான் மேலும் எதுவும் சொல்ல விரும்பவில்லை'' என்று கூறி அந்த அறையைவிட்டு வெளியே வந்தார் டாக்டர் என். எஸ். பூபதி.

பரிபூரணமாக உடல்நலம் பெற்று, செந்தில் முருகன் நர்ஸிங்ஹோமை விட்டு காரில் மதன்மோகன் ஏற முற்பட்ட போது,நர்ஸிங்ஹோமின் வாசலில்உள்ள ஆடியோ கடையிலிருந்து பாலமுரளிகிருஷ்ணன் குரலில்'' மவுனத்தில் விளையாடும் மன சாட்சியே. என்ற பாடலை முழுமையாக கேட்டு விட்டு அங்கிருந்த தன் உதவியாளரைக் கூப்பிட்டு ''முருகபூபதி ஐயா பெயரில் பத்து கோடி ரூபாயில் சகலவசதிகள் மிக்க ஒரு மருத்துவ மனையும், ஐந்து கோடி ரூபாயில் வழக்கறிஞர் சுந்தரராஜன் பெயரில் கல்வி அறக்கட்டளையும் நிறுவ ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கூறி முடித்தார் வள்ளல், மதன்மோகன். மேலும்

"நம் கம்பெனியில் டாக்டர் என். எஸ். பூபதி என்னும் ஞான சேகரபூபதியைப் பங்குதாரராக்க வகை செய்யுங்கள். அவரின் மூத்த மகனுக்கு என் ஒரே மகள் லஷ்மிபிரியாவைத் திருமணம் செய்ய விருப்பமானால் பெண் பார்க்க வரச்சொல்லுங்கள்" என்று தன் பர்சனல் பி. ஏ-விடம் கூறிக் காரில் அமர்ந்தார் மோகனசுந்தரம் என்னும் மதன்மோகன்.

தொழில் அதிபரின் மனதில் ஒரு தெளிவு பிறந்தது. அந்த தெளிவிலே ஒரு ஞானம் பிறந்தது. அந்த ஞானத்திலே ஒரு அமைதி பிறந்தது.

இன்றைய தொழில் அதிபர், கொடை வள்ளல், ஏழையின், பங்காளான், தொழிலாளியின் தோழன், பாட்டாளியின்பங்காளி சமூகநலத் தொண்டர் எனப் போற்றப்படும் மதன்மோகனின் கார் மட்டுமல்ல அவரின் மனமும் திருப்பமான வாழ்க்கைக்கு மேலும் திருப்தி அளிக்க திருப்பதி திருமலை ஆண்டவனைத் தரி சிக்க மின்னல் வேகத்தில் கார் பறந்து சென்றது.



# நினைப்பின் நெடுந்தூரம்

(சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் பாட்டனார் திரு. பாபு செங்கனி அவர்கள் சொல்லிய கதைக்கு கற்பனை மெருகு பூசப்பட்டு இங்கு வழங்கப்படுகிறது)

காலை நேரத்தில் சிவனை நாடும் சிவபக்தர்களின் உள்ளத்திலே ஆனந்த கூத்தாட்டம். அன்று வெள்ளிக்கிழமை காலை ஆறு மணிக்கு வில்லிவாக்கம் அகத்தீஸ்வரர் ஆலயத்தின்முன், பத்தாயிரத்திற்கு மேற்பட்ட மக்கள். முக்காலமும் அறிந்த சிவபக்தரின் வருகைக்காக மக்கள் காத்திருந்தார்கள் "அந்த மகானின் முகத்திலே தெய்வீக மணம் வீசும், அவர் கண்களிலிருந்து வரும் ஞானஒளிபட்டால் போதும் புதுவாழ்வு பொலிவு பெறும். அவர் நெற்றியில் அணிந்திருக்கும் திருநீற்றை கண்டால் போதும் பாவங்கள் பறந்து போகும். அவர் பாதங்களை தொட்டு வணங்கினால் போதும், தொட்டவர் வாழ்க்கை சுகம் பெறும்" -என்று மகானைப்பற்றி பக்தர்கள் பேசும் ஒலி எங்கும் கேட்டுக் கொண்டு இருந்தது.

அவரை தரிசிக்கும் பக்தர்கள் பந்தலின் கீழே பயபக்தியுடன் அமைதியோடு அமர்ந்து இருந்தார்கள். அந்த அமைதிக்கு இடையே பக்தி பாடல்களை இறைநெறிச் செல்வர்கள் இசைத்துக் கொண்டிருந்தார்கள்.

"சுவாமிஜி வருகின்றார்! சுவாமிஜி" வருகின்றார் என்ற சத்தத்தைக் கேட்ட பக்தர்களின் உள்ளத்திலே பேரானந்தம் பிறந்தது. அவர் வருகையை அனைவரின் கண்களும் ஆவலோடு எதிர்நோக்கியது.

தெய்வ வழிநெறி தொண்டர்கள் புடைசூழ அந்தமகான் வந்து கொண்டு இருந்தார். அமர்ந்து இருந்தவர்கள் அனைவரும் எழுந்து நின்றுமரியாதையுடன் வரவேற்றார்கள்.

சுவாமிஜி அவர்கள் திருக்கோயில் அருகே அமைக்கப்பட்டிருந்த மேடைக்குச் சென்று அமர்ந்தார்கள்.

சுவாமிஜி அவர்கள், பேசத் தொடங்கினார்கள்

"இறைவனை "கடவுள்" என்கின்றோம்.

கடவுதல் - என்றால் செலுத்துதல் அல்லது முடுக்குதல்,

எதை செலுத்துதல்? அல்லது எதை முடுக்குதல்?

உலகத்திலுள்ள உயிர்களை படைத்தல், படைத்தவைகளை இயக்குதல் (முடுக்குதல்)

இயக்கங்களை காத்தல்,

காத்தலை செலுத்துதல்,

செலுத்திய இடத்தை நிரப்ப

திரும்பவும் படைத்தல்.

கடவுள், கடவுநர் ஆக (செலுத்துவோராக) செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்
"எங்கே?" கோயிலில்

கோயில் என்றால் என்ன?

கோ—என்றால் தலைவன்

இல்—என்றால் இல்லம்

இந்த உலகத்தில் உள்ள எல்லா உயிர்களுக்கும் தலைவன் இறைவனே. உள்ளமென்னும் கோயிலிலே குடிகொண்டு இருப்பவனே இறைவன். அந்த இறைவன் என்ற 'இயக்கமான உயிர் (ஆன்மா) போனால் உடல் என்ற உறுப்பு அழிந்து போகும்.

கோ—என்ற உயிர் தங்கி, நல்லறத்தை செய்து தூய்மைப் பெற்று செல்லும் இடமே கோயில்.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்

உள்ளற் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்

தெள்ளத் தெளிந்தார்க்கு சிவன் சிவலிங்கம்

கள்ளப் புலனைந்தும் காரமணி விளகே"—என்றார்—' திருமூலர் திருமந்திரத்திலே.

கோயில் என்ற ஆலயம், மனித உடம்பைப் போலவே அமைக்கப்பட்டிருக்கிறது. இதை உணர்ந்து மனிதன் வாழ வேண்டும்.

நடந்தவைகளை நினைத்து—தெளிந்து—இனி

நடப்பவைகளை எண்ணி வாழுங்கள்!

பல்வளமும் பெற்று—சிவன் அருளால்

பல்லாண்டு வாழுங்கள்''—என்று கூறி முடித்தார் சுவாமிஜிகள்.

சுவாமிஜி கோயிலை விட்டு, மக்களிடம் விடைபெற்று சென்று கொண்டிருந்தபோது... ''சுவாமிஜி! என்னை மன்னியுங்கள்!!! தங்கள் பொற்பாதங்களை தொட்டு வணங்க அனுமதி தாருங்கள்''—என்றான் சுவாமிஜியின் பக்தன் முத்துகருப்பன். சுவாமிஜியின் காதருகே சென்று ஒரு பக்தன் மெல்லியகுரலில் ''சுவாமிஜி, தங்கள் காலில் விழுந்த முத்து கருப்பன் பயங்கர கொலைக்காரன், கொள்ளைக்காரன், உடனே இந்த இடத்தை விட்டு செல்வோம்'' என்று கிசுகிசுத்தான். சுவாமிஜி அவர்கள் புன்னகை செய்தபடியே, தன் கடந்த வாழ்க்கையைப் பற்றி எண்ணினார் அவரின் கால்கள் காரை நோக்கி நடக்க அவரின் எண்ணங்கள் கடந்த காலத்தை நோக்கிச் சென்றது...

* * *

அமைதியான அந்த இரவு பன்னிரெண்டு மணிக்கு நகரத்திற்கு சற்று தள்ளி கடற்கரை ஓரம் இருக்கும் மாண்புமிகு அமைச்சர் சங்கர்ராஜா வீட்டில்...

''ஓம்ரீம்...ஓம்ரீம்...ஓம்பரீம்...ரீம்...ரீம்...ரீம்...

ஓம் காளி, ஓம்சூளி,...ஓம் மகமாயி, ஓம் அகிலாண்ட ஈஸ்வரி ஓம் அங்காள பரமேஸ்வரி...ஓம்— ஓம்...ஓம்''—என்ற மந்திர ஒலிகள்.

''போதும் நிறுத்த சொல்லப்பா! யாரது இங்கு இவரை அழைத்துவர சொன்னது, உள்ளூரிலிருந்து எந்த மந்திரவாதியையும் அழைத்து வரக்கூடாது, என்பது அமைச்சரின் பகல்நேர ஆணை அல்லவா? அமைச்சருக்கு பிடித்திருக்கும் பேயை விரட்ட வேறு யாரும் கிடைக்கவில்லையா? முதலில் இவரை வெளியே அனுப்புங்கள்''—என்று கூறிக் கொண்டே அமைச்சரின் தனி ஆலோசகர் கனகரத்னம் காரிலிருந்து இறங்கி வீட்டுக்குள் செல்லும் போது சத்தம் போட்டுக் கொண்டே சென்றார்.

அமைச்சரின் ஆலோசகர் கூறுவதை காதில் வாங்காத மந்திரவாதி காளிதாச சுவாமிகள்,

ஓம் கற்பூர நாயகி!

ஓம் தேவி கருமாரி!

ஓம் மதுரை மீனாட்சி!

ஓம் பராசக்தி!

ஓம் சமயபுரம் நாயகி!

ஓம் கல்கத்தா காளி!

ஓம் பாதாள பைரவி!

ஓம் ரீம், ஓம் பரீம், கரீம்... ஓம்...ஓம்...ஓம்!!.

என்று காளிதாச சுவாமிகள் அமைச்சரின் அறையில், நெருப்பு குண்டம் அருகே அமர்ந்து மந்திரங்களை சொல்லி ஜபம் செய்து கொண்டிருந்தார். அவர் எதிரே பேய் குடிகொண்ட அமைச்சர் கைகட்டி, வாய் மூடி அமர்ந்திருந்தார்.

"ஐயா... தயவு செய்து நீங்கள் இங்கிருந்து போய்விடுங்கள்! அமைச்சரின் தனி ஆலோசகர் சத்தம் போட்டார்! இப்பகுதி சுற்று வட்டாரத்திலேயிருந்து பேய் விரட்ட எந்த மந்திர வாதியையும் அழைக்கக்கூடாது என்பது என் மைத்துனரின் பகல் நேர ஆணையாம். நான் இந்த சங்கதி தெரியாமல் உங்களை அழைத்துவந்துவிட்டேன். தயவு செய்து நீங்கள் போய்விடுங்கள்! நான் உங்களுக்கு பேசிய முழுதொகையையும் கொடுத்துவிடு கின்றேன்" என்று காளிதாசரின் காலில் விழுந்து வேண்டினான், அமைச்சரின் மைத்துனர், மன்மதன் என்ற மன்னார்சாமி.

"தம்பி! செய்து முடிக்காத வேலைக்கு கூலி வாங்குபவன் அல்ல நான்! உனது மைத்துனருக்கு பிடித்து இருக்கும் பேய் சாதாணரமானது அல்ல! அதை விரட்ட சாதாரண மந்திர வாதியால் முடியாது. இப்போது நான் போகின்றேன், 'தேவைப் படும்போது நீ வந்து என்னைப்பார்! நான் வருகின்றேன்" என்று கூறி விடைப்பெற்றார் காளிதாச சுவாமிகள். அன்று இரவும் அமைச்சருக்கு வழக்கமாக ஏற்படும் பயங்கர காதருகே இடி ஓசையும், நாய்களும் நரிகளும் தன் காதுக்குள் புகுந்துக் கொண்டு சத்தம் போட்டு ஊளை இடுவது, போன்ற ஓசையும், தன்னு டைய அங்க உறுப்புகள் உடலின் நடுப்பகுதியை விட்டுவிட்டு கைவேறு, கால்வேறு, தலைவேராக பிரிந்துச் செல்வதுப் போலவும், சற்று உறங்க கண்களை மூடினால் பலம் கொண்ட பத்து யானைகள் தன்னை மிதித்து கொல்ல வருவது போலவும் இருந்தது. அன்றய இரவும் வழக்கம் போல துன்ப இரவாகவே இருந்தது.

மறுநாள் காலை அமைச்சர் அந்த அமாவாசை இருட்டில் காரை ஓட்டிக் கொண்டு சென்றதை நினைத்துப் பார்த்தார். தன்னுடன் வந்த காவல்துறை அதிகாரிகளையும், மற்றும் தன்

ஆலோசகர் கனகரத்னத்தையும் அனுப்பிவிட்டு காட்டு பங்களா விற்கு சென்றதை எண்ணி எண்ணி நினைவுக்கு கொண்டு வந்து பார்த்தார்...

* * *

அமைச்சரின்கார் காட்டு பங்களாவிற்கு சென்று கொண்டு இருந்தபோது, காரின் முன் பகுதியிலும், காருக்கு இரு பக்கங் களிலும் வெள்ளை உடை அணிந்த இரண்டு, மூன்று பெண்கள் காரை சூழ்ந்து வந்துக் கொண்டிருப்பது போலவும், தான் ஓட்டிய காரின் வேகத்தில் அவர்கள் வரும் வேகமும் ஒன்றாக இருந்ததால் அமைச்சர் காரை மிக மிக வேகமாக ஓட்டினார். திடீரென்று அத்தமூன்றுபெண்கள் மறைந்துவிடவே அமைச்சரின் மனதில் பயம் நீங்கி சற்று தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தபோது... எங்கிருந்தோ மூன்று எரிமலைகள் எரிந்து வந்து மூன்று [பந்துகளாக தன் உடலுக்குள் புகுந்துக் கொண்டதை மட்டும் உணர்ந்தார் அமைச்சர். அதற்கு மேற்கொண்டு நடந்தவைகளை மறுநாள் தன் பி.ஏ. கன கரத்னம் கூறியது மட்டுமே தெரியும். அன்று முதல் இரவு பன்னிரெண்டு மணி ஆனால் அமைச்சரின் உடலில் அதிகபடியான உஷ்ணம் உண்டாகும்.

பகலில் அமைச்சர் கனகரத்னத்தை கூப்பிட்டு "என் உடலில் குடி கொண்ட மூன்று பேய்களையும் விரட்ட வெளி ஊர் களிலிருந்தும், வெளி நாடுகளிலிருந்தும் பேய்விரட்டும் மந்திர வாதிகளை வரவையுங்கள், ஆனால் உள்ளூரிலிருந்து யாரை யேனும் அழைத்து வந்தால் இந்த விஷயத்தை விளம்பரப்படுத்தி என் பதவிக்கு ஊறு விளைவிப்பார்கள். இந்த விஷயம் நம் முதல் வருக்கும், சக அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், எதிர் கட்சி உறுப்பினர்களுக்கு தெரியக்கூடாது" என்று கண்டிப்பாக கட்டளையிட்டார்.

"உடலில் எந்த பாதிப்பும் இல்லை" என்று பெரிய பெரிய மருத்துவர்கள் சொல்லியாகிவிட்டது. மன இயல் மருத்துவர் களும், மற்ற வைத்தியர்களும் சொல்லியாகிவிட்டது, இரவில் மட்டும் தனக்கு பேய் பிடித்திருக்கிறது என்பதை எப்படி வெளியே சொல்ல முடியும். இரவில் உறக்கம் இல்லாததால் பகலில் உள்ளம் சோர்ந்து பலவீனமாக இருந்தது. உடல் தள் ளாடி உள்ளம் தளர்ந்து பேய் பிடித்த நிலையில் எப்படி அமைச் சராக இருப்பது, இந்த செய்தி பத்திரிகைகளுக்கு தெரிந்தால் நாடு முழுவதும் பரவி, தன் பதவியும் போய், தன் சொத்து சுகமெல்லாம் போய் திரும்பவும் அனாதையாக ஆனால் என்ன செய்வது என்று அமைச்சர் சிந்தித்து மூளை குழம்பி, கடைசியில்

வெளி நாட்டிலிருந்து பேய், பிசாசு ஒட்டுபவர் வந்து பணம் கரைத்ததுதான் மிச்சம், பேய்கள் அவரைவிட்டு போனபாடில்லை.

நாட்டுமக்களுக்கும், முதலமைச்சருக்கும் தெரியாமலிருக்க என்ன என்ன செய்யவேண்டுமோ அவைகளை பகலிலிருந்து இரவு பன்னிரெண்டுமணி வரை செய்து காலத்தை கடத்தி வந்தார். அமைச்சர் சங்கர்ராஜா.

எத்தனையோ சடங்குகள், எத்தனையோ பரிகாரங்கள் செய்தும் பலன் இல்லை.

இரவு பன்னிரெண்டு மணிக்கு முதன் முதலில் பேய்விரட்ட வந்து திருப்பி அனுப்பப்பட்ட மந்திரவாதி காளிதாச சுவாமிகள் திரும்பவும் அழைத்து வரப்பட்டார். இம்முறை காளிதாச சுவாமிகள் பே களின் முழு சக்தியையும் தெரிந்து கொண்டு பெரிய அகழிஎ பத் தோண்ட சொல்லி, அந்த அகழிக்குள்ளே அமைச்சரை மரவைத்து, அமைச்சரின் கழுத்தளவு நீரை ஊற்றி, அந்த அகழியை சிறிய விரல் அளவு மட்டும் மூன்று ஓட்டையுள்ள மூடி போடசெய்து அகழியை இருக்க மூடவைத்தார் காளிதாச சுவாமிகள்.

அமைச்சரின் மூச்சுக்காற்று வெளி வர இந்த மூன்று வழியைத் தவிர வேறு வழி இல்லை. அகழிக்கு மேல் புறத்தில் காளிதாச சுவாமிகள் அமர்ந்துக் கொண்டு, கோப சக்திக் கொண்ட காளியின் மத்திரங்களையும், கோப சக்திக் கொண்ட துர்க்கையின் மந்திரங்களையும் உரக்கமாக சொல்லிக் கொண்டிருந்தார். காளிதாச சுவாமிகளின் பயங்கர மந்திர சக்தியினால் அருள் சக்தி தரும் காளி, அவர்முன் அருவமாக தோன்றி ''மானிடா! ஆவி உருவில் அமைச்சரின் உடலில் புகுந்தவைகள் என் கோபத்தால் ஏற்பட்ட சக்தியே ஆகும். உலகத்தில் கெட்ட ஆவிகள் என்பது மனிதனுடைய ஆவிகள் மட்டுமே! அமைச்சனாக உள்ள இந்த மானிட பாவி, கொள்ளைகளை மனிதர்களிடமும், கொள்ளைகளை கோயில்களிலும் செய்து வருகிறான். இவனை திருத்தவும், இவனின் ஆனவத்தை அடக்கவும், மூன்று ஜோதியாய் இவன் உடலில் புகவைத்தேன். நீ உண்மையான தெய்வ பக்தி உள்ளவன் என்பதால் மேலும் சில விவரங்களை சொல்கின்றேன். பார்வதிக்கு, சிவ பெருமான் ஒளி வடிவமாக திருவண்ணாமலையில் தரிசனம் தந்தார்கள். அந்த திருவண்ணாமலையானின் சொத்துக்களை இவன் கொள்ளையடித்து வாழ்ந்து வருகின்றான். இவன் ஐந்து வயது முதல் இதுவரையில்

செய்த கொலை, கொள்ளைகளுக்கு அளவே இல்லை, இனியும் இவனை இப்படியே விட்டால் இந்த புண்ணிய இந்திய திருநாடு நாசமாய் போய்விடும். ஆகவே நீயே இவனுக்கு என்ன தண்டனை தரலாம் என்பதை சீக்கிரம் கூறு.''

''தாயே...உலகத்து நாயகியே இந்த பாவியை திருத்த நீ தானம்மா நல்ல வழி கூற வேண்டும்!

நானோ மானுடன் எனக்கு என்ன தெரியும் தாயே!''

''மனிதர்களுக்கும், தன் தான தர்மங்களால் புண்ணியர்கள்'' ஆகலாம்.

இந்த உலகத்தில் பல ஆயிரம் மகான்கள் தோன்றிக் கொண்டேயிருக்கிறார்கள். அதுபோல் பல ஆயிரம் பாவிகளும் தோன்றிக் கொண்டிருக்கிறார்கள். மகான்களை போற்றியும், பாவிகளை திருத்தி வாழவும் அருள் தருவோம். பாவிகள் திருந்த வில்லை என்றால் அவர்களுக்கு மனநோய், உடல் நோய் தந்து, திருந்தவைப்போம், அப்படியும் திருந்தாது போனால் அவர்களை அழித்து உலகத்து நல்லவர்களை காப்போம். நீ வேண்டிக் கொண்டதால் அமைச்சராக உள்ள சங்கர் ராஜா திருந்த அவன் ஐந்து வயது முதல் செய்த எல்லா தவறுகளையும், ஒன்றையும் மறைக்காமல் எழுதி அதை 48 தினங்கள் காலை மாலை படித்து வரவேண்டும், அப்படி படித்து மனம் திருந்தினால் அவனை மன்னித்து உலகில் வாழவைப்போம், இல்லையேல் அவனை கொடூர மரணத்திற்கு உள்ளாக்குவோம்'' என்று கூறி காளி தேவி மறைந்தார்.

அன்னை காளி தேவி சொல்லியதை அகழியிலிருந்து வெளியே வந்த அமைச்சரிடம் சொன்னதை, அமைச்சர் முழு மனதுடன் ஒப்புக் கொண்டு, தினம், தினம் காலை, இரவு 48 தினங்கள் படித்த வாசகங்கள்'' பொதிகை மலை பக்கத்தில் இருக்கும் பொன்மேடு கிராமத்தில் நான் பிறந்தேன். ஐந்து வயதில் நான் ஆரம்ப பள்ளிக்கூடத்தில் சேர்ந்து ஓராண்டு முடிவதற்குள் என் தாய் தந்தையை பறிகொடுத்தேன். அனாதையாக தன் சித்தி வீட்டில் வாழும் போது ஒரு நாள் சித்தியின் வீட்டு, மாடுகளுக்கு வைக்கோல் போட்டு திரும்பும் போது மாட்டு தொழுவத்திற்கு பக்கத்தில் இருக்கும் தாழ்வாரத்தில் ஒரு பிச்சைக்காரன் உறங்கிக் கொண்டிருந்தான். அந்த பிச்சைக்காரனின் தலைப்பகுதியில் சிறிய துணி மூட்டையைக் கண்ட நான், அதை எடுக்க முயன்ற போது பிச்சைக்காரன் கண்விழித்துப்பார்த்து என்னைபலமாக

அடித்தான். அடி வாங்கிய நான் பிச்சைக்காரனை எப்படியும் பழி வாங்க வேண்டும் என்ற எண்ணத்தோடு இரவு பகலாக அவன் போகும் பாதையில் பின் தொடர்ந்து சென்றேன்.

ஒரு நாள் பிச்சைக்காரன் இரவு நேரத்தில் மரத்தின் அடியில் உறங்கிக் கொண்டிருந்தான். இதுதான் சமயம் என்று அவன் தலையில் பெரிய பாறாங்கல்லை எடுத்து போட்டுவிட்டு அவன் மடியில் இருந்த சில்லரைக் காசுக்களை எடுத்துக் கொண்டு, அன்று இரவே அந்த ஊரை விட்டு சில மைல்கள் தூரம் உள்ள ரயில்வே ஸ்டேசனுக்கு வந்து ரயிலில் ஏறி மதுரை நகரத்தை ஒட்டியுள்ள என் அத்தை வீட்டிற்கு வந்தேன்.

நடந்தது எதையும் அத்தை மாமாவிடம் கூறாமல் நல்லப் பிள்ளைப் போல் அத்தையும், மாமாவும் சொல்லும் எல்லா வேலைகளையும் செய்து வாழ்ந்து வந்தேன்.

அத்தையும் மாமாவும் என்னிடம் பிரியமாக நடத்தினாலும் அவர்களுக்கு என் வயதில் ஒரு மகனும் திருமண வயதில் ஒரு மகளும் இருந்தார்கள். அத்தையின் பையன் முரளி ஆரம்பத்தில் என்னிடம் அன்பாக இருந்தான். நாட்கள் போக போக என்னை பற்றி அத்தை, மாமாவிடம் கோள் சொல்லி அடிவாங்க வைத் தான். அத்தையின் மகள் தேவி அடிக்கடி எனக்கு வேலை வைப்பாள். வேலை சரியாகசெய்யவில்லை என்றுஎன்தலையில் பலமாக கொட்டுவதும், சரியாக எனக்கு உணவுதராமலும் இருந் தார்கள். காலம் என்னை சிக்கலிலும் துன்பத்திலும் வாட்டியது.

எனக்கு அப்பொழுது வயது பதினைந்து இருக்கும். ஒரு நாள் அத்தையின் மகளை பெண் பார்க்க சிலர் வந்தார்கள். பெண் பிடித்திருந்தது. ஆகவே திருமணத்திற்கு தேதியை நிச்சயம் செய்ய டவுனுக்கு சென்று பஞ்சாங்கம் பார்க்க வந்தவர்களுடன் அத்தையும், மாமாவும் சென்றார்கள். முரளி பள்ளிக்கூடத்திற்கு சென்றுவிட்டான். தேவியும் பக்கத்து தெருவில் இருக்கும் தோழி வீட்டிற்கு சென்றுவிட்டாள். வீட்டில் நான் மட்டும் தனியாக இருந்தேன். இந்த நேரத்தைப் பயன்படுத்தி இந்த வீட்டைவிட்டு, வேறு எங்காவது சென்றுவிட வேண்டும் என்று எண்ணினேன். பத்து வருடமாக இரவு பகல் பாராமல் உழைத்த உழைப்புக்கு இவர்கள் அதிகம் எதுவும் செய்துவிடவில்லை என்று எண்ணினேன். செலவிற்குப் பணம் தராத இவர்கள் வீட்டில் திருட எண்ணி பீரோவை திறக்க முயற்சித்தேன். திறக்க முடியாததால் பீரோவை உடைத்தேன். அதில் அத்தை மகளின் திருமணத்திற்கு நகைகளும், பணமும், இருப்பதைக் கண்டவுடன்

அதை முழுவதையும் எடுத்துக்கொண்டு அங்கிருந்து மதுரை இரயில்வே ஸ்டேசனுக்கு வந்து சேர்ந்தேன். அங்கிருந்து இரயில் ஏறி சென்னைக்கு வந்து சேர்ந்தேன். கையில் பணமும், நகையும் உள்ளதால் நல்ல ஆடைகளும், இருக்க தனியாக ஒரு வீடும் வாடகைக்கு எடுத்து வாழ்ந்து வந்தேன். சென்னைக்கு வந்த சில தினங்களில் செய்தித்தாளில் அத்தையின் குடும்பம் கிணற்றில் விழுந்து தற்கொலை என்ற செய்தியைப் படித்தேன். அது அவர்கள் தலையெழுத்து என்று எண்ணி அதை மறந்தேன். கையில் இருக்கும் பணமும், நகையும் கரையும் முன் தனக்கென ஒரு தொழில் அமைத்துக்கொள்ள எண்ணி சென்னையில் மூலைமுடுக்கெல்லாம் அலைந்து வேலை தேடிப் பார்த்தேன். எனக்குத் தகுந்த வேலை கிடைத்தபாடில்லை. ஆகவே நானே ஒரு வேலையை ஏற்படுத்திக் கொள்வது என்று முடிவெடுத்தபோது என் கண் முன்னே நின்றது கிண்டி ரேஸ், சீட்டாட்ட கிளப், லாட்டரி டிக்கெட்டு விற்பனை; இதைப் பற்றி யோசித்து பார்த்தேன். எதுவும் சரிப்பட்டு வரவில்லை. முடிவில் பக்கத்து மாநிலத்திலிருந்து சாராய பாக்கெட் கடத்தினால் அதிக லாபம் கிடைக்கும் என்று அதில்எண்ணி ஈடுபட்டேன். மேலும் உழைக்காமல் பணம் குவியும் எல்லாத் தொழில்களும் எனக்கு ஒவ்வொன்றாக வந்து சேர்ந்தது. அதில் பணமும் லட்சலட்சமாக குவிந்தது. பணம் குவிய குவிய பெரிய பெரிய அரசியல் பிரமுகர்கள், செல்வந்தர்கள், சட்ட நுணுக்கங்கள் தெரிந்த வல்லுநர்கள் எனக்கு உற்ற நண்பர்களானார்கள்.

எனக்கு வயது முப்பது. இப்போது நான் செய்யும் கொலைகளுக்கும், தவறுகளுக்கும், சட்டத்தின் ஓட்டையில் ஏற்படும் உதவியைக் கொண்டு சட்ட அறிஞர்களின் பெரும் கருணைகளால் நாளுக்கு நாள் நான் எல்லா வகைகளிலும் முன்னேறினேன். எனக்கு செல்வத்தோடு புகழும் ஒன்று சேர மாடி வீடுகள் கோபுரங்கள் ஆயின.

அரசியல் பிரமுகர்கள் என்னை அரசியலில் ஈடுபடத் தூண்டினார்கள். நான் செய்யும் தவறுகளை மறைக்க நாமே அரசியல்வாதியானால் நல்லதாக இருக்கும் என்று எண்ணி அரசியலில் ஈடுபட்டேன். எந்தக் கட்சி மக்கள் செல்வாக்கு பெறும் என்று தூண்டியதோ அந்தக் கட்சியில் நான் சேர்ந்தேன். கொள்கை என்பதோ கோட்பாடு என்பதோ எனக்குச் சிறிதும் கிடையாது. ஆனால் நான் மேடை ஏறி பேச ஆரம்பித்தால் ''கட்சியில் கொள்கைகளை ஆணித்தரமாக அடித்துப் பேசுவேன்; நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்காகவும், நாட்டு மக்களின்

வாழ்வுக்காகவும் நான் உயிரை விடவும் தயார்"—என்று உரக்கப் பேசி கட்சித் தொண்டர்களின் பாராட்டைப் பெறுவேன்.

அரசியலுக்குக் கல்வி, சொல், நாணயம், நீதி, நேர்மை தேவையில்லை என்பது என் தலைவருக்குத் தெரியும், அது எனக்கும் தெரியும்.

"அடி ஆட்கள், ஆடம்பர விளம் பரங்கள், படாடோப வாழ்க்கை, ஏமாற்று, பொய் சொல்லுதல்" போன்றவைகளில் கட்சித் தொண்டனாக இருந்த என்னை எங்கள் தொகுதி எம். எல். ஏ. ஆக்கியது.

நானும் அமைச்சராகும் தகுதிகளை நோக்கிச் செயல்பட்டுக் கொண்டிருந்தேன். அதாவது எதிர்க் கட்சித் தொண்டர்களை பட்டப்பகலில் வெட்டிச் சாய்ப்பது, கள்ள ஓட்டுப் பெட்டிகளை வைத்து நல்ல வோட்டுப் பெட்டியாக ஆக்கி தேர்தலில் ஜெயிப்பது, பேட்டைக்கு குறைந்தது ஐம்பது ரவுடிகளையும், போக்கிரிகளையும், ஏற்படுத்துவது, இன்னும்...இன்னும் சில பல தகுதிகளை நோக்கி முன்னேறினேன்.

இதைக் கண்ட முதலமைச்சர் என்னை உடனே கூப்பிட்டு ஒரு புதுத் துறைக்கு என்னை அமைச்சராக்கினார். இதுவரை பல கொலைகள், கொள்ளைகள், கற்பழிப்புகள் செய்ததற்கு எனக்குக் கொடுத்த பரிசாக நான் இதை எண்ணி ஆனந்தப் பட்ட நிலையில் ஒரு நாள் இரவு காட்டுப்பங்களாவிற்குச் சென்று கொண்டிருந்தபோது காளி, கெட்ட ஆவிகள் அனுப்பி எனக்கு நல்ல பாடம் புகத்தினார்!

அமைச்சராக இருந்த நான் இன்று துறவி சங்கர ராஜாவாக மாறி கையில் கமண்டலமும், கழுத்தில் உத்திராட்சமும், இடுப்பில் காவியுடையுடனும் கானகம் சென்று 18—ஆண்டுகள் சென்ற பின் உண்மையாக தெய்வ பக்தி ஒளி வீச சுவாமிஜி அவர்கள் ஒவ்வொருவரும் திருக்கோவிலுக்கும் சென்று பக்தர் களுக்கு அருள்வாக்கும், ஞானஒளியும் தந்து கொண்டிருக் கிறார்கள்.

இன்று சங்கரராராஜ சுவாமிகளுக்கு பக்தர்களின் உள்ளன் பைக் கண்டதும், அமைச்சராக வாழ்ந்தபோது ஏற்படாத பேரானந்தம், அமைச்சராக இருந்தபோது ஏற்படாத பேரின்பம் ஏற்பட்டதைக் கண்டு, பழைய நினைவுகளுக்கு ஓய்வு கொடுத்து, பழைய நாட்களுக்கு விடை கொடுத்து புதிய உற்சாகத்துடன் புண்ணியவானாக புனிதவராக சுவாமிஜி அவர்கள் காரில் பயணம் செய்து கொண்டு இருந்தார்கள்.

# முக்தி ஒரு விளக்கம்

''ஓம் முக்த பதயே நமோ நம''

மோட்சம் என்பது முக்தி நிலை அடைதல் என்பதாகும். ஒரு மனிதன் முக்தி நிலை பெற வேண்டுமானால், ஐந்து ராஜாக்களை போற்ற வேண்டும் அல்லது வணங்கவேண்டும்.

**ஒருவர் நடராஜா**
**மற்றவர் கோவிந்தராஜா**
**மூன்றாமவர் தியாகராஜா**
**நான்காமவர் வரதராஜா**
**ஐந்தாமவர் ரங்கராஜா**

இந்த ராஜாக்களை எங்கே கண்டு வணங்குவது? சிதம்பரத்தில் நடராஜாவை வணங்கலாம். திருப்பதியில் கோவிந்தராஜாவைக் கண்டு வணங்கலாம். திருவாரூரிலே தியாகராஜாவை வணங்கலாம். காஞ்சிமாநகரிலே வரதராஜாவை வணங்கலாம். ஸ்ரீரங்கத்திலே ரங்கராஜாவை வணங்கலாம்.

அருட்பெரும் ஜோதி தனிப்பெரும் கருணை வள்ளலார் சுவாமிகள் வீட்டிலேயே முக்தி அடைந்தார்கள். திருவாசகம் தந்த மாணிக்கவாசகப் பெருமான் சிதம்பர சிற்சபைத் திருமேனியுடன் முக்தி அடைந்தார்கள். பட்டினத்து சுவாமியின் அரங்கத்தோடு ஐக்கியமாகி முக்தி அடைந்தார்கள். தேவாரம் தந்த அப்பர் சுவாமிகள் கைலாசம் சென்று முக்தி பேறு பெற்றார்கள்.

**மனிதா நீ!**

**பிறக்க முக்தி தருவதற்குத் திருவாரூரை நாடு.**
**இறக்க முக்தி தருவதற்குக் காசியை நாடு.**
**தரிசிக்க முக்தி தருவதற்கு சிதம்பரத்தை நாடு,**
**நினைக்க முக்தி தருவதற்குத் திருவண்ணாமலையை நாடு.**

இந்த வாழ்க்கையை மீண்டும் மீண்டும் பல மாசுகள் அடைந்து அழுக்கேற்றும். மாசுகளை அகற்றித் தூய்மைப் படுத்துவது நம் மனமே அன்றி, உடல் அல்ல. சாக்கடை நீரிலிருந்து இன்று வைரம் தயாரிக்கப்படுகிறது. சாக்கடை நீரில் மீத்தேன் (Methane) நிறைய இருக்கிறது. கரி, ஹைட்ரஜன், கரியமிலவாயு ஆகியவை சேர்ந்துதான் "மீத்தேன்" (Methane) உண்டாகிறது. இந்தக் கரியைத்தான் விஞ்ஞானிகள் வைரமாக மாற்றி வருகின்றார்கள்.

சாக்கடை கூட வைரமாக மாறுகிறது. ஆனால் இந்த மனித உடல்?

இந்த மனித உடல் உயிரைப் பாதுகாக்கும் ஒரு கவசமே அன்றி உடலை வைத்து வாழும் வாழ்க்கை பாழானது. ஆன்மா என்ற உயிரின் பக்குவ நிலை மனிதனுக்கு மனிதன் மாறுபடு கிறது. எப்படி? 30 அடி தோண்டினால் தண்ணீர் கிடைக்கிறது செங்கை மாவட்டத்தில். 300 அடி தோண்டினால்தான் தண்ணீர் கிடைக்கிறது. கோவை மாவட்டத்தில். 30, 000 அடி தோண்டி னால் மட்டும் தண்ணீர் கிடைக்கிறது, இராஜாஸ்தான் மாநிலத்தில். இடத்திற்கு இடம் நீரின் ஊற்று ஊறுவது போல் மனிதனுக்கு மனிதன் பக்தியைப் பொறுத்து அவனின் முக்தி நிலையும் மாறுபடும்.

> **"மாயையான ஓட்டை நீக்கி**
> **தூய்மையான உள்ளத்தைப் பெற**
> **அமிர்தமான யோக நிலையே**
> **முக்தி நிலைக்கு நல்வழியாகும்."**

உடலைத் தூய்மைப்படுத்த நீர் வீழ்ச்சி வேண்டும்.

உள்ளத்தைத் தூய்மைப்படுத்த யோகப் பயிற்சிவேண்டும். பிறவிப் பெருங்கடலை நீக்கி பிறவா பெரும்பயனை அடைய மோட்சமே முதன்மையாகும்.

> **"மனம் எனும் மாடு அடங்கில்**
> **தாண்டவக் கோனே—முக்தி**
> **வாய்ந்ததென்று ஆடடா**
> **தாண்டவக் கோனே"**

இடைக் காட்டுச் சித்தர் கூறிச் சென்ற வாக்கு.

## முக்தியின் மூலாதாரம் மூன்று

ஒன்று உருவச் சித்தி; இரண்டு அருவச் சித்தி; மூன்று உருவருவச் சித்தி. கயிலை சென்று சுந்தர மூர்த்தி சுவாமிகள் பெற்ற முக்திக்குப் பெயர் உருவச் சித்தியாகும். மாணிக்க வாசகச் சுவாமிகள் சிதம்பர சிற்சபையில் திருமேனியுடன் மறைந்தது அருவச் சித்தியாகும். திருஞானசம்பந்த சுவாமிகள் அருஉருவமுடன் சிவலிங்கத்துடன் சென்று தன் திரு மேனியைச் சிவலிங்க உருவமாகப் பெற்றது உருவருச் சித்தியென கூறலாம்.

புலனை அடக்கி போகின்ற பாதைக்கு வழியைத் தேடிப் போனால் முக்தி கிடைக்கும். அதைவிட்டு இச்சையில் மூழ்கி இல்லாததை உலகில் நில்லாததை நினைத்து வாழ்ந்தால் பித்தம் தான் கிடைக்கும்.



# எங்கே இந்த உலகம்?

''லக்ஷ்மி!......லக்ஷ்மி! போஸ்ட் பாக்ஸில் போடச் சொன்ன லெட்டர்களைப் போட்டு விட்டாயா?'' என்று கனிவோடு தன் மனைவியைக் கேட்டான், வேலைத் தேடி அலையும் வேலப்பன். ''எல்லா கடிதங்களையும் தபால் பெட்டியில் போட்டுட்டேனுங்க நீங்க வேலை தேடிப் போன விஷயம் என்ன ஆச்சு?'' அரவணைப் போடு கூடிய ஆதரவான வார்த்தைகளால் கேட்டாள் வேலப்பன் மனைவி லக்ஷ்மி.

தினம், நான் சொல்லும் ''வேலை கிடைக்கவில்லை'' என்ற பதில் தான் லக்ஷ்மி இன்றும். இன்று 'காலை முதல் ஏறி, இறங்காத கம்பெனி வாசற்படி இல்லை, வேலை தான் கிடைக்க மாட்டேன் என்கிறது''—என்று சலிப்போடு கூறினான் வேலப்பன்.

''அம்பத்தூர் எஸ்டேட்டுக்குச் சென்று, ஒவ்வொரு கம்பெனியாக வேலை தேடிப் பாருங்க, ஆசியாவிலேயே பெரிய எஸ்டேட்டாம் அம்பத்தூர் எஸ்டேட்டுல நாளை காலை முயற்சி பண்ணிப் பாருங்க, எல்லாம் ஆண்டவன் விட்ட வழி, இருந்த எல். ஐ. சி ஏஜெண்ட் வேலையும் போச்சு. வயசுக்கு வந்த பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டு மட்டும் இருக்க வில்லை நாம், அது பாலிடெக்னிக்கில் முதல் வருடம் முடித்து விட்டு இரண்டாம் வருடம் போயி இருக்கு, அதற்கு வேண்டிய துணிமணிகளை வாங்கவும் முடியலிங்க, நம்ப பெண் மாலதிக்கு அவள் படிக்கும் இடத்தில் கொடுத்த 'ஆண்டு ஸ்காலர்ஷிப் ரூபாய் 189-யையும் அவள் படிப்புக்குச் செலவு செய்தாகி விட்டது. மேற்கொண்டு என்ன செய்வது என்றே தெரிய வில்லை''- என்று தன் இருண்ட வாழ்க்கையை எண்ணித் துயரப்பட்டு வார்த்தைகளை அள்ளி வீசிக் கொண்டே இருந்தாள் லக்ஷ்மி. ''என்ன செய்வது லக்ஷ்மி இந்த ஆண்டு ரூபாய் ஒரு லட்சத்திற்கு மேல் பாலிசி கொடுத்தால் தான் தொடர்ந்து ஏஜெண்டாக இருக்க முடியும் இல்லையானால் எல். ஐ. சி. ஏஜெண்ட் நெம்பரில், உள்ள உன் பெயர் நீக்கப்படும் என்று

கூறி என் பெயரை நிரந்தர ஏஜெண்ட் பெயரிலிருந்து நீக்கி விட்டார்கள். நான் இதுவரையில் சேர்த்த பாலிசிதாரர் கமிஷன் ரூபாய் ஐம்பது நூறு, என்று வந்து அதுவும் செலவாகி விட்டது. இனி என்ன செய்வது என்றே தெரியவில்லை. சரி நீ சொன்னது போல் நாளை அம்பத்தூர் எஸ்டேட்டுக்குச் சென்று வேலை தேடுகிறேன்'' என்று கூறி முடித்தான் வேலப்பன்.

வேலப்பன், லக்ஷ்மி தம்பதிகளுக்கும் ஒரே பெண் மாலதி, படிப்பில் படு சுட்டி, ஆகவே பள்ளி இறுதி ஆண்டு முடித்தவுடன் சுலபமாக அடையாறு பாலிடெக்னிக்கில் படிக்க இடம் கிடைத்தது. வேலப்பன் மிகவும் தாழ்த்தப்பட வகுப்புப்பிரிவைச் சேர்ந்ததால் தாசில்தார் ஆபிசில் மிகத் தாழ்த்தப்பட்டோர் சான்றிதழ் வாங்க அவன் எஸ். எஸ். எல். சி. சான்றிதழ் தேவைப்பட்டது. வேலப்பன் பள்ளி இறுதி ஆண்டுத் தேர்வை முடித்துக் கொண்டு மேற்கொண்டு படிக்க அவன் தாய் தந்தைக்கு வசதி இருந்தாலும். அவனுக்குப் படிப்பில் உள்ள ஆர்வத்தைவிட, பொது நலத் தொண்டில் ஆர்வம் ஏற்பட்ட தால், கழகம், மன்றம், படிப்பகம், என்று அலைந்து திரிந்து படிக்க வேண்டிய காலத்தில், வாழ்க்கையில் ஒரு பிடிப்பு இல்லாமல் ஊர் சுற்றிக் காலம் கழித்து வந்தான். அதிகம் சத்தம் போட்டுப் பேசும் குணம், அடாவடித்தனம், அநியாய, அக்கரமங் களுக்கு ஒத்துப் போகும் குணம் ஆகியவைகள். இவனுக்கு பிடிக்காமையால், இன்று 'பொதுநலத்தொண்டு என்பது போலி வேஷம்' என்று புரிந்துக்கொண்டு, இனி வேலை தேடும் படலத் திற்கு வந்தான். முதலில் அரசாங்கத்தில் வேலை தேடும் முயற்சியில் இறங்கி, சீ...சீ...இந்தப் பழம் புளிக்கும் என்ற நிலை யில் தனியார் கம்பெனியில் வேலை கிடைத்தால் போதும் என்ற நிலைக்கு வந்தான் வேலப்பன். தனியார் துறைவேலையில் ஆறு மாதம், ஒரு வருடம் என்ற நிலையில் அவனால் தாக்குப்பிடிக்க முடிந்ததே தவிர, நிரந்தரமாக வேலை செய்ய மனம் இடம் தராதால் அதை விட்டு வேறு வேலைக்கு முயற்சி செய்தான் வேலப்பன்.

தந்தையை இழந்து தாயை மட்டும் நம்பி வாழ்ந்து கொண்டு இருந்த வேலப்பனுக்கு ஒரே அக்கா மட்டும் உண்டு. தம்பிக்கு ஒரு நிரந்தரமான இடத்தில் வேலை கிடைத்தால் தன் மகள் லக்ஷ்மியைத் திருமணம் செய்து வைத்துவிடலாம் என்று எண்ணிக் கொண்டே இருந்தபோது தம்பியிடம் இருந்து திடீரென்று அவசரத் தந்தி வர, அதைப் பெற்றுக்கொண்டு அம்மா வீட்டிற்கு வந்தாள் கிருபாகரி.

படுத்த படுக்கையாக இருக்கும் தன் அம்மாவைப் பார்த்து கண்ணீர் வடித்தாள் அக்காள், அம்மாவின் உடல் நிலையையும் அக்காவின் பாசத்தையும் தன் வாழ்க்கையின் பிடிப்பு இன்மையை யும் எண்ணித் தேம்பி, தேம்பி அழுதான் வேலப்பன்.

நோயால் படுத்த படுக்கையாக இருந்த அவர்களின் தாய், வேலப்பனை ஒரு கையிலும், கிருபாகரியை மறு கையிலும் பிடித்துக்கொண்டு ''அம்மா...கிருபாகரி...நீ...உன் தம்பியைப் பத்திரமாகப் பார்த்துக் கொள். உன்னை நம்பித்தான் விட்டு விட்டுப் போறேன், உன் மகள் லக்ஷ்மியை, உன் தம்பி வேலப்பனுக்கு கொடுக்கிறேன் என்று, சத்தியம் செய்து கொடு'' என்று அம்மா கேட்பதை, கிருபாகரியால் மறுக்கமுடியவில்லை, அப்படியே செய்கின்றேன்'' என்று கிருபாகரி சொல்லி முடிப்பதற் கும் அவர்களின் தாய் கண்களை மூடுவதற்கும் சரியாக இருந்தது. முன்னமே, தான் செய்த முடிவோடு, தாயின் சத்தியமும் சேர்ந்த தால் கிரிபாகரி, தன் ஒரே மகள் லக்ஷ்மியை, தன் தம்பிக்கு திருமணம் செய்து வைத்தாள். 'தம்பிக்கு தற்சமயம் வேலை இல்லை என்ற குறைபாடு தவிர, வேறு எந்த விதத்திலும் தன் தம்பி குறைந்தவன் அல்ல' என்பது கிருபாகரி எண்ணம்.

எதையும், காலத்தோடு பயிர் செய்ய வேண்டிய காலங்களை தவர விட்டுவிட்டு, ஒரே தொழிலில், காலை ஊன்றி வைக்க வேண்டிய விதத்தையும் விட்டுவிட்டு இன்று வேலை...வேலை என்று அலையும் அவல நிலையை எண்ணிக் கண்ணீர் விட்டான் வேலப்பன்.

பதினெட்டு வயதுக்குழந்தைக்குத் தந்தையான பின்னும், தனக்கு ஒரு நிலையான வேலை இல்லையே என்று ஏங்கித் தவித்த வேலப்பன், இன்றும் தன் முயற்சியை விடாமல் வேலை என்று தேடி அலைவதோடு, கிடைத்த எந்த வேலையையும் செய்து அதில் வரும் வருமானத்தில் குடும்பத்தை நடத்தி வந்தான் வேலப்பன்.

லக்ஷ்மியின் உள்ளத்தில் ''தன் கணவனின் அவல நிலையை யும் தன் வாழ்க்கையின் இன்னல்களையும் எண்ணி அனலில் இட்ட புழுவாய் துடித்தாள். இருந்தாலும் தன் கணவர் எந்தத் தீய பழக்கத்திற்கும் அடிமையானவர் அல்லர்' என்பதாலும், தன்னிடமும் தன் குழந்தையிடமும் அன்பாக நடந்துகொண் டிருப்பதால், தன் குடும்பத்தின் அவல நிலைக்குக் கணவர் மட்டும், காரணமில்லை 'தன் விதியும் காரணம்'' என்று மனதிற்குள் எண்ணி சமாதானம் அடைந்தாள்.

தன் குடும்பத்துக்கு உதவியாகத் தன் தாய் வீட்டிலிருந்து கொண்டு வந்த தையல் மிஷினால் இரவும், பகலும் வீட்டிலேயே தையல் தொழில் செய்து குடும்பத்தின் பாரத்தைக் குறைத்துக் கொண்டு வாழ்ந்து வந்தாள் லக்ஷ்மி.

சார்...சார்...வெளி வாசலில் ''வேலை காலி''ன்னு போர்டு போட்டு இருக்கு அதனாலே உள்ளே போய் ஆபிசரைப் பார்க்க லாங்களா?''—என்று கம்பெனி வாசலில் காவல் நிற்கும் காவலாளியிடம் பணிவுடன் கேட்டான் வேலப்பன்.

''வேலை காலி இருக்குன்னு மட்டும் போர்டு தொங்கலே, இன்ன இன்ன வேலைக்கு ஆட்கள் தேவை என்று போர்டு தொங்குதே அதைப் பார்த்தியா? உமக்கு என்ன வேலை தெரியும் அதற்கு வேண்டிய ''சர்டிபிகேட் வைத்திருந்தால் நீங்களே சென்று ஆபிசரை பார்க்கலாம், இல்லைன்னா நடையைக் கட்டலாம்'' என்று கறாராகக் கூறி முடித்தார் கம்பெனி காவலாளி. ''நான் எஸ். எஸ். எல். சி. வரை படித்திருக்கேன், எந்த வேலையும் தெரியாது, இங்கு எந்த வேலை கொடுத்தாலும் தட்டாமல் செய்வேன். ஆகவே உள்ளே சென்று ஆபீசரை பார்க் கலாமா?''

''எஸ். எஸ். எல். சி-ன்னா கலெக்டர் வேலையா தருவாங்க? போயா...போ...வேறு ஒரு கம்பெனியைப் பாரு இங்கு வேலை இல்லை'' என்று கண்டிப்போடும், கேலியோடும் கம்பெனி காவலாளி கூறிய வார்த்தைகள், வேலப்பனின் மனதில் ஊசியால் குத்துவது போல் இருந்தாலும் என்ன செய்வது தன் தலை எழுத்தை நினைத்துக்கொண்டே தன் பழைய சைக்கிளை எடுத்துக்கொண்டு அடுத்த கம்பெனியை நோக்கிப் போனான் வேலப்பன். வேலப்பனின்—ஆத்ம நண்பன் முத்து, வேலப்பனின் நிலையைப் பார்த்து 'இனி வேலை தேடி அலைவதைவிட நீயே சொந்தமாக ஏதாவது ஒரு தொழில் செய். அதில் வரும் வருமானத்தில் உன் வாழ்க்கை வளம் காணட்டும்'' என்று சொல்லி ரூபாய் ஐயாயிரத்தை கடனாகக் கொடுத்தார். முத்து கொடுத்த ரூபாய் ஐயாயிரத்தைக் கொண்டு ஒரு சிறு பெட்டிக் கடை வைக்க முடிவு எடுத்தார்கள் வேலப்பனும் அவன் மனைவி லக்ஷ்மியும். 'எந்தச் சிறு தொழில் செய்தாலும் அதில் கடுகு அளவாவது அனுபவம் அவசியம் இருக்க வேண்டும். வியாபாரத் தில் தெளிவு, கனிவு, சனிவுகளைப் புரிந்துகொண்டும், தெரிந்துகொண்டும் செய்ய வேண்டும். வியாபாரத்தில் கறாரும், கண்டிப்பும் இல்லையானால் அந்தத் தொழில் தொடங்கிய வேகத்தில் முடிவிடவும் செய்யவேண்டியதுதான்''

என்பது தன் கையில் இருந்த பணம் போன பின்தான் வேலப்ப னுக்கு புத்தி புரிந்தது. இனி சொந்தத் தொழிலுக்கும் நமக்கும் சரிப்படாது என்று முடிவெடுத்தான்.

அவன் பள்ளியில் படிக்கும் காலத்தில் இருந்து கதை, கவிதை, கட்டுரை என்று எழுதி வைத்திருந்தவைகள் துருப்பிடித்து தகரப் பெட்டிக்குள் அடைந்து கிடந்தவைகளை எடுத்துப் பிரித்துப்படித் தான். இனிமேல் தொடர்ந்து கதை, கவிதை, கட்டுரை, எழுத வேண்டும் என்று உள்மனதில் ஆவல் ஏற்பட்டது. பல கதைகளை எழுதிக்கொண்டு வானொலி நிலையம், தொலைக்காட்சி நிலையம் என்றும், சினிமாக் கம்பெனி, தயாரிப்பாளர்கள், பத்திரிகை அலுவலகங்கள் தேடி தன் ஓட்டை சைக்கிளில் சுற்றி அலைந்தான். எழுதியவைகளை பத்திரிகைகளுக்கு அனுப்பி வைத்திருந்தான்.

தன் பழைய சைக்கிளுக்குக் காற்றடிக்கக்கூட கையில் காசில் லாமல் வேகாத வெய்யிலில் தன் வீடு வந்து சேர்ந்தான்.

''என்னங்க! ஒரு நல்ல செய்தி பலநாள் பட்ட கஷ்டம் இன்றோடு தீர்ந்தது''—என்று பொடிவைத்துப் பேசிக்கொண்டே போன மனைவியைப் பார்த்த வேலப்பன் ''சீக்கிரம் விஷயத்தைச் சொல்லிட்டு, தாகமாக இருக்கிறது கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா'' என்று ஆணை பிறப்பித்தான்.

''இதோ பாருங்க, அரசாங்கத்திலிருந்து இரண்டு கடிதம் வந்திருக்கிறது, சீக்கிரம் பிரித்துப் படித்து பார்த்து என்ன என்று சொல்லுங்கள் இப்பொழுதுதான் போஸ்ட்மேன் கொடுத்து விட்டுப்போனார்'' என்று அவசரப்படுத்தினாள்.

''இந்திய அரசுப் பணிக்கு மட்டும்'' என்று இருந்த அந்த இரண்டு கவர்களையும் இருவரும் ஒரே நேரத்தில் பிரித்துப்பார்த் தார்கள். அதில் ஒன்று வருமான வரி செலுத்த வேண்டிய விவரமும், இன்னொன்று பிற்படுத்தப்பட்டோர் மற்றும் சிறு பான்மையினர் நல இயக்கத்தில் இருந்து வருமான சான்றிதழும், சாதி சான்றிதழும் கேட்டும் எழுதப்பட்டு இருந்தது.

சுமார் நூற்றம்பது ரூபாய் எல். ஐ. சி.யில் கிடைத்த ஏஜெண்ட் கமிஷனுக்காக வருமான வரி அலுவலகத்திலிருந்தும், அதே அளவு ரூபாய் தன் மகளின் பள்ளியில் கிடைத்த உதவிப் பணத்துக்காக சாதி சான்றிதழும், வருமான சான்றிதழும் காண்பிக்க அனுப்பப்பட்ட செதியை அறிந்து தன் குடிசைக்கு எதிரே வானொலி நிற்கும் மாடியில் உள்ளவர்களை

கேட்க வேண்டியவைகளை தன்னிடம் கேட்க பட்டதை நினைத்து வேலப்பனுக்கு தலையே சுற்றியது ''உலகம் எங்கே போய்க்கொண்டு இருக்கிறது'' என்று நினைத்து மறுபடியும் தனக்கு வந்த இரண்டு கடிதங்களின் முகவரியையும் பார்த்தான், அதில் வேலப்பனின் விலாசம் தெளிவாக எழுதப்பட்டு இருந்தது.

கையில் இரண்டு கடிதங்களையும் வைத்துக்கொண்டு பரந்த வானத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தான். ''சார் போஸ்ட்'' என்று போஸ்ட் மேன் ஒரு கடிதத்தை நீட்டினார். இது எந்தக் கஷ்டத்தை உண்டாக்குமோ என்று பயந்து கடிதத்தை மெதுவாக பிரித்தான். அதில் ''எங்கே இந்த உலகம்'' என்ற தன்னுடைய கதைக்காக தமிழக அரசு தனக்கு சிறப்பு விருதாக ரூபாய் இருபத்தைந்தாயிரம் பரிசாகத் தர அழைப்பு விடுத்து இருந்ததை படித்தான்.

''லக்ஷ்மி, லக்ஷ்மி இந்த உலகம் இனி நம் கையில்தான் என்று ஆனந்த பூரிப்புடன் பரவசமடைந்தான்.

தன் வாழ்க்கையின் உண்மைக் கதைதான் இந்த ''எங்கே இந்த உலகம்'' என்பது இந்த உலகத்திற்கு எப்படித் தெரியும்.



# உயர்வு

பல ஆயிரம் ஏக்கர்களுக்கும், மாட மாளிகைகளுக்கும் சொந்தக்காரரான ஞானசேகரன் என்ற முதியவர் ஒருவர் ஒரு ஊரில் வாழ்ந்து வந்தார்.

தான் இறப்பதற்குள் தன் நான்கு மகன்களின் உயர்வு, தாழ்வை அறிய எண்ணி, தன் நான்கு மகன்களையும் கூப்பிட்டு "பிள்ளைகளே! நீங்கள் இதுவரையில் என் பாதுகாப்பில் நான் ஈட்டிய சொத்தில் வாழ்ந்து வந்தீர்கள். இனி உங்கள் நால்வரின் திறமையையும், புத்திசாலித்தனத்தையும் நான் உயிருடன் இருக்கும்போது பார்த்துவிட ஆசைப்படுகின்றேன். அதற்கு நீங்கள் என்ன சொல்கின்றீர்கள்" என்றார்.

''தங்கள் ஆசை அதுவானால், நாங்கள் நால்வரும் இதற்கு ஒப்புக் கொள்கின்றோம். நீங்கள் எதைச் சொன்னாலும் அதை ஏற்று அதன்படி நடந்து காட்டுகின்றோம்'' என்று நால்வரும் ஒரு மித்த குரலில் கூறினார்கள்.

முதியவர் ஞானசேகரனின் நான்கு பிள்ளைகளில் மூத்தவன் பெயர் மெய்கண்டன், இரண்டாமவன் பெயர் அறிவழகன், மூன்றாமவன் பெயர் குமணன், நான்காமவன் பெயர் ஸ்ரீனிவாசன்.

''இந்த உலகத்தில் மற்றவர்கள் சாதிக்காததை நீங்கள் ஒவ்வொருவரும் தனித் தனியாக சாதித்துக் காட்ட வேண்டும்; ஒருவர் உதவியை மற்றவர் நாடாமல் தனித்தனியாகவே சென்று உங்கள் சாதனைகளை, பத்து ஆண்டுகள் கழித்து மாதக் கடைசியில் சித்திரா பௌர்ணமி அன்று கூடுங்கள். இதில் யார் சாதனை தனித்தன்மை பெற்று, சிறப்புடையதாக தோன்றுகிறதோ, அவர்களுக்கு இதுவரையில் நான் ஈட்டிய மொத்த சொத்தையும் தந்துவிடுவேன். அவனே எனது உண்மையான வாரிசாகும். மற்றவர்கள் இந்த ஊரைவிட்டு வெளியே சென்று விட வேண்டும். இதற்கு சம்மதிக்கின்றீர்களா?'' என்றார், தன் நான்கு மகன்களையும் பார்த்து ஞானசேகரன்.

''தந்தையே! நாங்கள் சாதனைகள் செய்து, பத்தாண்டுகள் கழித்து உங்களை வந்து பார்க்கின்றபோது, நீங்கள் உயிருடன் இல்லையானால் நியாயமான தீர்ப்பை நாங்கள் யாரிடம் பெறுவது? என்றான் மூத்தமகன், மெய்கண்டன்.

''ஆமாம் சரியாக கேட்டாய், மெய்கண்டா, நாம் வசிக்கும் இந்த ஊருக்கு வடக்குப் பகுதியில் இருபது மைல்(கல்) தூரத்தில் சஞ்சீவி மலை இருக்கிறது அல்லவா! அங்கே இப்பொழுது பதினாறு, முப்பது, அறுபது வயதில் மூன்று ரிஷிகள் இருக்கின்றார்கள். நீங்கள் பத்தாண்டு கழித்து வரும்போது அந்த மூவரில் யாரேனும் ஒருவரோ அல்லது மூவரும் உயிருடன் இருந்தால் அவர்களிடம் நடந்ததைக் கூறி நியாயமான தீர்ப்பை பெறுங்கள். நானும் இந்த எல்லா சொத்துக்களையும் விட்டு விட்டு தெற்கு நோக்கி போய் காலத்தை கழிக்கின்றேன். பத்தாண்டுகள் கழித்து உயிருடன் இருந்தால் திரும்பி வந்து உங்களுக்கு நானே தீர்ப்புக் கூறுகின்றேன், சரிதானே! என்றார் ஞானசேகரன்.

இந்த நால்வரில் ஒருவரின் உதவி மற்றவர் பெறக்கூடாது என்பதால் மூத்தமகன் மெய்கண்டன் கிழக்கு திசையை நோக்கிச் சென்றான். இரண்டாம் மகன் அறிவழகன் மேற்கு திசையை நோக்கிச் சென்றான். மூன்றாவது மகன் குமணன் தெற்கு நோக்கிச் சென்றான். நான்காவது மகன் ஸ்ரீனிவாசன் வடக்கு நோக்கிச்சென்றான். கிழக்கு திசையை நோக்கிச் சென்ற மெய்கண்டன் அஞ்ஞான இருள் அகல மெய்ஞ்ஞான வாழ்வே உயர்வானது என்று எண்ணி மெய்ஞானத்தை அறிய ஞானம் பெற்ற ஞானிகளையும், சித்திபெற்ற சித்தர்களையும், யோகம் பெற்ற யோகிகளையும் நாடிச் சென்றான். ''அணுவை மேலும் மேலும் பிரிக்கலாம், அதற்கோர் எல்லை இல்லை. மலையை பல அணுக்களாகப் பிரிப்பதுவும் ஒன்றுதான், உருவில் வேறுபாடு உண்டே தவிர அதனதன் குணத்தில் வேறுபாடு கிடையாது. மெய்ஞானமும் அவ்வாறானதேயாகும். உலகம் அழிவுப் பாதையை நோக்கிப் போய் விஞ்ஞானத்தை தழுவியபோது அதைப் பாதுகாப்பது மெய்ஞானமேயாகும்.

வல்லரசு நாடுகள் விடும் ஏவுகணைகள் வானத்தில்ஒன்றுடன் ஒன்று மோதி, உலகத்தை அழிக்காமல் இருக்க, மெய்ஞானமே அதைக் காப்பாற்றும். ஆன்மீக வழியில் நின்ற எதுவும் அழிவைத் தருவது இல்லை.

மெய்கண்டனின் தொண்டு உலகத்திற்கு உயர்வானது என்பதை மெய்பிக்கும் வகையில் பத்து ஆண்டுகளில் பல நாடுகளிலிருந்து வந்த அழைப்பே அதற்கு ஆதாரமாகும். மெய்கண்டன் உலகத்தில் போகாத இடம் இல்லை, சந்திக்காத தலைவர் இல்லை. இராசாயனப் போரை நிறுத்த வேண்டுமா? அங்கே சமாதானத் தூதுவனாக மெய்கண்டன் இருப்பார். ஆயுதப் போரை நிறுத்தி உலகத்து மக்களை காப்பதிலே இன்று மெய் கண்டனைப் போல் வேறு யாரும் இல்லை என்ற நிலை ஏற்பட்டது.

கிழக்கு திசையை நோக்கிப் புறப்பட்ட மெய்கண்டன் எட்டு திசைக்கும் சமாதானத் தூதுவன். இவர் சமாதானத்தில் மதம் என்றோ நாடு என்றோ வேறுபாடு இல்லை.

இன்றைய இயந்திரமய நாகரிக வாழ்க்கையில் மெய்கண்டனின் ஆன்மீக சமாதான வழியே சாலச் சிறந்ததென்று அவரின் முழு நம்பிக்கையும் உலகத்தின் பெரும்பாலோரின் நம்பிக்கையும் அதுவேயாகும்.

மேற்கு திசையை நோக்கி புறப்பட்ட அறிவழகன், அறிஞர் பெருமக்களின் வழி நின்று தானும் ஒரு அறிஞனாக வரவேண்டும் என்று எண்ணி இரவு பகலென்று பாராமல் உழைப்பது, ஓய்வு நேரத்தில் இலவச நூலகங்களுக்கு சென்றுபடிப்பது, உழைக்கின்ற காசை வீண் செய்யாமல் மாலை நேர வகுப்பில் சேர்ந்து இறுதி ஆண்டு படிப்பு, பின் இளங்கலைப் படிப்பு, பின் முதுநிலை படிப்பு படித்து, ஒரு நிலையான உயர்வுக்கு வந்தபின், தானே அறிவொளி இயக்கம், அறிவியல் இயக்கம் நடத்த முற்பட்டான். இதனால் அறிஞர் பெருமக்களின் நெருக்கம் அதிகம் ஏற்பட்டது.

ஒரு ஈயின் தலையைவிட சிறிய கைக்கடிகாரத்தை மாஸ்கோ உக்ரெய்னைச் சேர்ந்த நிகோலய் என்பவர் தயாரித்தார். தானும் ஒரு தொலைக்காட்சிப் பெட்டியை ஒரு எறும்பின் தலையைவிடச் சிறிய அளவில் தயாரிக்கத் திட்டம் தீட்ட அதில் அவர் வெற்றியும் கண்டார். அந்தத் தொலைக்காட்சிப் பெட்டியை கண்ணால் பார்க்க மிக அதிநவீன தொலைநோக்கிக் கருவியை அறிவழகன் கண்டார்.

காது கேளாதவர்களுக்கான கருவி, தலையை அசைத்தால் நகரும் நாற்காலி, நடக்க வைக்கும் செருப்பு, வாயசைத்தால் பாடும் ரேடியோ இன்னும் பல அறிவியல் கருவிகள் உதயமாகின.

மணலைக் கயிறாகத் திரிப்பதும், மண்ணிலிருந்து எண்ணெய் எடுப்பதுவும் வீண் முயற்சி என்பதை நாம் அனைவரும் ஒப்புக் கொள்வோம். ஆனால் அறிவழகன் மட்டும் எதிலும் முயற்சி செய்வதைப்பற்றி கவலை கொள்ளாமல், வெற்றியைக் கண்டு ஆனந்தப்படாமல் அறிவுப்பூர்வமான விஞ்ஞான ஆராய்ச்சிக் கான முயற்சிகளைத் தொடர்ந்து செய்துகொண்டு இருந்தார். எரிமலை வெடிப்புப் பற்றியும், காற்று மண்டலத்தில் கந்தக அமிலப்படலம் பற்றியும் வாயு மண்டலத்தில் மிதக்கும் கந்தக அமிலத் துகள்கள் அமில மழையாகப் படிப்படியாக பூமியை அடையும் தன்மையைப் பற்றியும் விண்வெளியில் நிலவும் எடை யற்ற தன்மை பற்றியும் அறிவழகன் ஆராய்ச்சியில் பங்கு பெற்றன.

ஒரே சாதாரண கருமானின் மகனான மைக்கில் பாரடேஸ், படிக்க வசதி இன்றி தன்னிடம் பைண்டிங் செய்வதற்கு வரும் புத்தங்களைப் படித்து உலக விஞ்ஞானி ஹம்புரி டேவிட்டிடம் உதவியாளராக சேர்ந்து "மின் ாந்த கடத்தலை கண்டறிந்து" உலகத்திற்கு தந்ததைப் போல் தானும் புகழ்பெற்றதை எண்ணி பூரிப்பும் பெருமையும் அடைந்தான் அறிவழகன்.

தெற்கு திசையை நோக்கிப் புறப்பட்ட குமணன் (தான் ஒரு) மருத்துவப் படிப்பு படித்த காரணத்தில் மேலும் மருத்துவ சம்பந்தப்பட்ட நூல்களையும் மருத்துவ வித்தகர்களையும் சந்தித்தான். தான் மருத்துவனாக என்னென்ன செய்ய வேண்டுமோ அதை அவன் தந்தையுடன் இருந்தபோதே செய்து முடித்த மருத்துவனுக்குரிய சான்றிதழ்களையும் பெற்றி ருந்தான். ஆகவே அவன் மருத்துவ ஆராய்ச்சி மட்டும் தான் இப்பொழுது செய்ய வேண்டியிருந்தது அன்றி வேறு அல்ல.

மலேரியா நோய் முதல் இன்று உலகை அச்சுறுத்திக் கொண் டிருக்கும் 'எய்ட்ஸ்' நோய் வரை மருத்துவ ஆராய்ச்சியில் இடம் பெற்று' அவன் அந்த நோய்களைத் தீர்க்கும் வழிமுறைகளையும் அவன் கண்டுபிடித்தான்.

ஒரு வகை பெண் கொசு கடியால் வரும் மலேரியா, 'நிமோக்கஸ்' என்னும் ஒரு வித கிருமிகள் மூலம் வரும் நிமோனியா, "இன்புளுயன்ஸா பாசில்லஸ்" என்ற ஒருவித கிருமி களால் வரும் இன்புளுயன்ஸா, வைரஸ் என்னும் கிருமிகளால் வரும் பெரியம்மை, "பாசில்லஸ் பெஸ்டிஸ்" என்ற கிருமிகளால் உண்டாகும் பிளேக் (Plague) "டிப்தீரியா பாஸில்லஸ்" என்ற கிருமிகளால் உண்டாகும் டிப்தீரியா என்ற

தொண்டை அடைப்பான் ''டியூபர் குலோசிஸ் பாஸில்லஸ்'' என்ற கிருமியால் உண்டாகும் க்ஷயரோகம் என்ற டி.பி., ''கோனோகாக்ஸ்'' என்ற கிருமிகளால் வரும் மேகவெட்டை போன்ற இன்னும் பல கிருமிகளால் வரும் நோய்களையும் தலையிலுள்ள இரத்தக்குழாய்கள் வெடித்து அதிகமான இரத்தம் தலையில் தேங்குவதால் வரும் ''அபோப் ளக்ஸி'' என்ற நோயையும், இரத்தத்திலுள்ள சிவப்பு கேபிகள் (அணுக்கள்) குறைவதால் வரும் இரத்த சோகை என்ற 'அனாமியா' என்ற நோயையும் பரம்பரை பரம்பரையாக வரும் எபிலஸ்பி என்ற காக்கை வலிப்பு என்ற நோயையும் 'பாங்க்ரியாஸ்' என்னும் அவயம் நோயுற்றால், இன்சுலின்' என்ற நீர் உற்பத்தியாகாமல் தடைபடும். அதனால் சாப்பிடும் ஆகா ரத்திலுள்ள சக்தியை தரக்கூடிய சர்க்கரைச் சத்துக்கள் சரீரத் தில் சேராமல் மூத்திரத்தில் வரும் மதுமேகம் என்ற டயாபடீஸ் என்ற நோயையும், (Hemiplegia) ''ஹெமீப்லிஜியா'' என்று சொல்லப்படுவது மூளையிலுள்ள இரத்தக் குழாய்கள் பாதிக்கப் படுவதனால் சரீரத்தில் ஒரு பக்கம் மாத்திரம் உணர்ச்சியற்று மரத்துவிடும் நோய்கள், (Paraplegia) ''ப்ராப்லிஜியா'' என்னும் ஒரு கையும் காலும் பாதிக்கப்படும் நோய்க்கும். (Infanrtleparalyis) ''இன்பென்டல்பராலஸி'' என்று சொல்லப் படும் நோய்களுக்கும், இன்னும் எண்ணற்ற நோய்களுக்கு நவீன மருந்துகளை கண்டுபிடிப்பதும். நோயைப் போக்கு வதும், குமணன் செய்வதால் உள்நாட்டில் மட்டுமின்றி வெளி நாட்டிலும் கூட இவர் புகழ் ஓங்கிவளர்ந்தது.

கத்தியின்றி இரத்தம் இன்றி பித்தப்பை அறுவை சிகிச்சை, குடல்வால் அறுவை சிகிச்சை, குடலிறக்கம் (Hernia) (ஹெர்னியா,) பெப்டிக் அல்சர் போன்றவைகளை ''லேப்ரான் கோபிக்'' சிகிச்சை மூலம் சிகிச்சை செய்த இடத்தில் தழும்பு ஏற்படாத வகையிலும் செய்யப்படும் முறையில் குமணன் சிறந்து விளங்கினான்.

எக்ஸ்ரே எடுக்கும் கதிர் வீச்சினால் பாதிப்பைத் தடுக்க ''அல்ட்ரா'' சவுன்ட் என்ற கருவியைக் கொண்டு பிறக்கப் போகும் குழந்தை தாயின் வயிற்றில் எந்த நிலையில் உள்ளது என்றும் பிறக்கப்போவது ஆணா? பெண்ணா? இரட்டைக் குழந்தையா? அல்லது ஒரே குழந்தையா? என்பதையும்' சிறு நீர்ப்பையில் மற்றும் கிட்னியில் கல் உள்ளதா? என்பதையும் இக்கருவி கொண்டு பரிசோதிக்கும் விதம், காந்த சக்தியைக் கொண்டு எம். ஆர். ஐ என்ற கருவி மூலம் ஸ்கேனைவிட மிக

தெளிவாக அறியவும், நுரையீரல் சம்பந்தப்பட்ட வியாதிகளைக் கண்டுபிடிக்க "பிரான்கோஸ்கோபி"யையும் மண்டையில் ஏற்படும் சில வியாதிகளைக் கண்டுபிடிக்க "எலக்ட்ரோ என்ஸ்பஹோ" கிராம் கருவி மூலமும், வயிற்றுக்குள் இருக்கும் எல்லா வியாதிகளையும் "லேபராஸ்கோபி" மூலமும் மூளையில் ரத்தகசிவு, கட்டி, கேன்சர், எலும்பில் டி.பி. எலும்பு முறிவு முதலியவைகளை மிக எளிதாகக் கண்டுபிடிக்க சி. எ. டி., (Computerised Axiap Tomo Graphy) என்ற கருவி மூலம் கண்டுபிடிக்கும் வகைகளை அறிந்து உலகத்தின் மிகச் சிறந்த வல்லுனர் என்ற சிறப்புப் பட்டத்தை இந்தப் பத்தாண்டுகளில் பெற்று பெற்ற தந்தையும், தன் சகோதரர்களையும் காண தன் இல்லம் நோக்கிப் புறப்பட்டான், குமணன்.

வடக்கு நோக்கிப் புறப்பட்ட ஸ்ரீனிவாசன், தான் படித்த ஆசிரியர் பயிற்சி சான்றிதழைக் கொண்டு வடக்கு தேசத்தில் மிக மிக பின்தங்கிய ஏழைகள் நிறைந்த கொல்லிமலை பகுதிக்குச் சென்று அங்கு இருக்கும் அக்கூட்டத்தின் தலைவனைச் சந்தித்து அந்த காட்டுபகுதி மக்கள் கல்விக் கண்ணைத் திறக்க எண்ணி ஒரு சிறு கல்விக்கூடம் திறந்தான். எழுத்தறிவு சிறிதும் இல்லாத அம் மக்களை ஒன்று திரட்டி அறிவொளி இயக்கம் ஒன்றை ஆரம் பித்து இரவும் பகலும் அம்மக்களின் கல்வி அறிவுக்காகவே தன் நேரம் முழுவதையும் செலவு செய்தான்.

முதல் ஓர் ஆண்டு கடுமையான சோதனைகள் ஏற்பட் டாலும், அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் மக்களுக்கு மிகப் பொருமையாக நிதானமாக போதித்ததின் பயனாக மக்கள் கல்வியின் பயனைப்பற்றியும், நாகரீக வாழ்க்கையின் பயனைப் பற்றியும் உணர்ந்து மக்கள் நிம்மதியுடன் வாழ முற்பட்டார்கள்.

தன் உழைப்பின் பயனால் இரண்டாம் ஆண்டில் கல்வியில் ஒரு சில பண்டிதர்களை உருவாக்க முடிந்தது. அவர்களைக் கொண்டு அந்த மலைப் பகுதி முழுக்க கல்வியின் அருமைகளை யும் அதன் சிறப்புக்களையும் எடுத்துக் கூறி அதிகமான உறுப் பினர்களை அறிவொளி இயக்கத்தில் சேர்க்க முடிந்தது.

காடுகளில் விலங்குகளாய், புழுக்களாய், பூச்சிகளாய் வாழ்ந்த அம்மக்கள் இன்று கல்வி கற்றதினால் வெளி உலகத்தைப்பற்றி யும் நகர மக்களைப் பார்த்து ஒதுங்கி இருப்பதைத் தவிர்த்து சேர்ந்து வாழவும், நகர மக்களைப் போல நாகரீகமான முறை

யில் உண்பது, உடுப்பது, இருக்கும் இடத்தை சுகாதாரமான முறையில் பாதுகாத்து நல்ல நீர், நல்ல உணவு, நல்ல காற்று சுவாசித்து வாழக் கற்றுக் கொண்டார்கள்.

பேய் என்றும் பிசாசு என்றும் இருட்டைக் கண்டு வாழ்ந்த அம்மக்கள் தனக்கு என்னென்ன வசதிகள் வேண்டுமோ அவை அனைத்தையும் தாங்கள் ஓட்டுப்போடும் அதிகாரத்தின் மூலமும் ஆட்சி செய்பவர் மூலமும் சலுகைகளையும் பெற்று தெரு வசதி, தெரு விளக்கு வசதி, கண்ட இடத்தை அசுத்தம் செய்யாதிருக்க நவீன கழிப்பிட வசதி போன்ற மிக அவசியமான உதவிகளை அரசாங்கத்திடம் பெற்று நலமுடன் வாழும் வகைக்கு வந்தனர் ஐந்தாண்டுகளில்.

மரத்தையும் கல்லையும் கடவுள் என்று வணங்கி வந்த அவர்கள், தங்கள் இனத்திற்கென ஒரு கடவுளை ஏற்படுத்திக் கொண்டு அதற்கு பூஜை நடத்தி ஆரத்தி எடுத்து, பஜனை செய்து தெய்வீக முறையில் வணங்கத் தொடங்கினார்கள் என்றால் அதற்குக் கல்விக் கண்ணைத் திறந்து வைத்த ஸ்ரீனிவாசனே முதற்காரணமாகும்.

ஸ்ரீனிவாசன் காலடி எடுத்து வைத்த அந்தக் கொல்லி மலைக் காடு இன்று இருள் என்ற அறியாமை விலகி, ஒளி என்ற ஜோதி சுடர்விடத் தொடங்கியது. தன் இனத்துக்குள்ளேயே சமா தானம் கொண்டு வாழத் தொடங்கினார்கள். ஊர் ஊராக சென்று நாடோடிகளாய் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை, இன்று மாட மாளிகையாகும் நிலைக்கு வரக் காரணம் உலகத்திற்கு ஒரு சூரியன், இருளுக்கு ஒரு ஒளி அகிம்சைக்கு ஒரு காந்தி அறி யாமை இருளை அகற்றுவதற்கு ஒரு ஸ்ரீனிவாசன் என அம்மக்கள் எண்ணத் தொடங்கினார்கள்.

பத்தாண்டுகள் முடிந்தது, பௌர்ணமி வரும் நாளை எதிர் பார்த்திருந்த ஸ்ரீனிவாசன், தன் தந்தையையும், தன் தனயன் களையும் காணும் நாளில் தந்தையின் ஊரை நோக்கி வரும் போது அவனுடன் காட்டுப் பகுதியில் மக்களும் நவநாகரிக முறையில் அறிவொளி பெற்றுப் புத்தொளியோடு புதுவாழ்வு பெற்ற மகிழ்ச்சியோடு வந்து கொண்டு இருந்தார்கள்.

தன் நான்கு மகன்களையும் நான்கு திசைகளுக்கு அனுப்பி விட்டு, தான் தன் நிலபுலன்களையெல்லாம் கண்காணிப்பவர் களிடம் விட்டு விட்டு, தெற்கு திசை நோக்கிச் சென்ற முதியவர் ஞானசேகரன், ஊர் ஊராகச் சென்று, கோயில்களில் தங்கி ஆண்டவனை தரிசிப்பது, கால் நடையாகச் செல்லும் வழியில் இருக்கும் பள்ளிக்கூடங்கள் கேட்பாரற்றுச் சீர் இழந்த

நிலையில் இருப்பதைப் பார்த்து வருங்கால வாரிசுகள் உற்பத்தியாகவேண்டிய புனித இடம் மாட்டுத் தொழுவமாய் இருப்பதைக் கண்டு அந்த ஊரில் கல்வியைப்பற்றி எடுத்துக் கூறி, கல்விக்கூடங்களை சீராக்குவது அவரின் பணியானது.

தென்னிந்தியாவுக்குச் சொந்தமான, விலை மதிப்பற்ற ஐம் பொன் சிற்பச்சிலைகள் உள்ளகோயில்கள் கேட்பாரற்று புல்லும் பூண்டும் நிறைந்து மனிதன் உள்ளே செல்ல முடியாத அளவுக்கு இருக்கும் நிலையை செப்பனிட எண்ணி அதற்காக உழைப்பது.

சுகாதராம் என்றால் என்னவென்று தெரியாத பட்டிதொட்டி களுக்குச் சென்று அங்கு வாழும் ஏழைகள்ச் அனாதைகளைக் கண்டு அவர்களுக்குத் தன்னால் ஆன உதவிகளைச் செய்ய அப் பகுதியில் உள்ள பெரிய செல்வந்தர்களைக் கண்டு தன்னுடைய நிலை, தன் சொந்தத்தின் நிலையைக் கூறித் தன் தனிப்பட்ட நம்பிக்கையின் பேரிலும், அந்த ஏழைகளுக்கு உதவ முற்பட்டு பலன் இல்லாமல் தானே மறுபடியும் தன் ஊருக்கு வந்து மகன் களிடம் பந்தயத்திற்க்காக ஒதுக்கிய நிலம் போக மற்ற நிலங் களை விற்றுக் காசாக்கி, பின் பாதிக்கப்பட்ட கிராமங்களுக்கு வந்து அந்த மக்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்.

முதியவர் ஞானசேகரனின் தொண்டு உள்ளத்தைப் பார்த்த மற்ற செல்வந்தர்களும் போட்டி போட்டுக் கொண்டு நான் நீ என உதவ முன்வந்தனர். அவர்கள் உதவியைப் பெற்று மருத்துவமனை அமைப்பது, மருத்துவ மனைக்கு வேண்டிய உபகரணங்களை வாங்கி மருத்துவ வசதியை நவீனப் படுத்துவது, கல்விச் சாலைகளில் கல்வியை சீர் அமைப்பதோடு அதற்குரிய ஆசிரியர்களை நியமிப்பது சிறுவர் சிறுமியர் வேலைக்குச் செல்வதை தடுத்து அவர்களைக் கல்விச் சாலைக்குச் செல்ல வகை செய்வது,

மின் வசதி, குடிநீர் வசதி, போக்குவரத்து சாலை வசதி, கிராம மக்களை சுகாதாரமாக வாழ என்னென்ன வசதிகள் வேண்டுமோ அவை அத்தனையையும் ஒவ்வொரு, கிராமம் கிராமமாகச் செய்து கொண்டு வந்தார் முதியவர் ஞானசேகரன். செய்யும் தொண்டில் ஜாதி, மத, இன, மொழி வித்தியாசம் இல்லவே இல்லை.

மனிதன் நீதி நேர்மையோடு வாழ ஒரு தொழில் வேண்டும். அதற்கு அவனுக்கு ஒரு தொழிற்கூடமோ அல்லது சொந்தத் தொழிலோ தேவை. அதை அமைத்துத் தருவதில் தன் பங்கு சொத்தையும்; கொடையாகக் கொடுத்த செல்வந்தரின்

சொத்தையும் சேர்த்து ஒரு தொழிற்கூடத்தை ஏற்படுத்தி அதில் பல ஆயிரம் கிராம மக்கள் தொழில் செய்ய வழிவகை செய்தார் முதியவர் ஞானசேகரன்.

பல கோடி ரூபாய் மதிப்புள்ள கல்விக் கூடங்களை அவரின் உண்மையான உழைப்பால் நிறுவ முடிந்தது. ஆரம்பப் பள்ளிக் கூடம் முதல் முதுகலை படிப்பு வரையிலும், ஒவ்வொரு தொழிற் துறையிலும் நவீன தொழிற்கல்விக் கூடங்களும் இவரால் துவக்கப்பட்டது. அதுபோல் ஆரம்ப சுகாதாரம் முதல் வெளி நாட்டிற்குச் செல்லாமல் இங்கேயே மருத்துவம் செய்யும் அனைத்து வசதியுடன் கூடிய மருத்துவ கூடங்கள் நிறுவப்பட்டன.

இவரின் உழைப்பால் புன்செய் நிலங்கள் எல்லாம் நன்செய் நிலமாக மாறியது. தரிசு நிலங்களை விவசாய நிலங்களாக மாற்ற அங்கங்கு ஆழ்கிணறுகளும் நவீன விவசாயம் செய்ய டிராக்டர் களும் வாங்கி ஏழைகளுக்கு இலவசமாகக் கொடுக்கப்பட்டது. எதற்கும் அரசாங்கத்தையும், அரசியல்வாதியையும் எதிர்பார்க் காமல் ஏழை மக்கள் முன்னேற என்னென்ன வழியோ அத்தனை வழிகளையும் செய்துவந்தார் முதியவர் ஞானசேகரன்.

அன்பு, கருணை, ஒழுக்கம் நிறைந்த அவர் உண்மை, உழைப்பு, உறுதியைக் கொண்டு அறியாமையால் மக்களிட மிருந்த கோபம், பேராசை, பொறாமை வெறுப்பு ஆகியவை களை நீக்கினார்.

அவசரம், ஆத்திரம், ஒழுங்கின்மையில் வாழ்ந்த மக்களை, தியாகம், தியானம், நன்னடத்தைக்கொண்டு வாழச் செய்தார்.

“மனிதர்களே! நீங்கள் வாழப் பிறந்தவர்கள், அந்த வாழ்க்கை அர்த்தமுள்ளதாக இருக்க வேண்டும். பசிக்கு, ருசிக்கு சாப்பிடுவதாக இருக்காமல், கண்ணியம் நிறைந்த வாழ்க்கையில், கடமையைத் தோள்மேல் சுமந்து கட்டுப்பாடோடு வாழுங்கள். அது கசப்பானாலும் இறுதியில் இனிப்பான வெற்றி தரும். காம, குரோத லோபத்தைத் தூக்கி எறிந்து கர்மாவின் வழி நின்று கருணையோடு உங்களுக்குரிய இறைவனை நாடுங்கள். தெய்வீகமான செயலை நீங்கள் செய்கின்றபோது, தெய்வம் உங்களுக்குள் ஐக்கியமாகிறது. தெய்வம் உங்களுக்குள் ஐக்கிய மானபோது, நீங்கள் உண்மையாக வாழப் பிறந்தவர்களாக இருப்பீர்கள்” என்று முதியவர் ஞானசேகரன் ஊர்தோறும் கூறி வந்தார். அவரின் செயல்களையும், அவரின் சொற்பொழிவையும் மக்கள் கேட்டு நடமாடும் தெய்வத்தைக்கண்டதைப்போல் மக்கள் பரவசம் அடைந்தனர். முதியவர் ஞானசேகரன் காலடிப்பட்ட

இடம் கருணை பொழிந்தது. அவர் கை பட்ட இடமெல்லாம் மக்களின் வாழ்வு மலர்ந்தது. அவர் கண்பட்ட இடமெல்லாம் ஆத்மஞானம் பிறந்தது. அவர் வாயிலிருந்து வந்த வார்த்தை யெல்லாம் "மகத்துவமானது."

முதியவர் ஞானசேகரனைப் பார்த்த அவரைவிட மூத்தவர்கள் தன் வீட்டு தம்பியைப் பார்ப்பது போலவும், இளையவர்கள் நடமாடும் தெய்வத்தைப் பார்ப்பது போலவும், தாயின் அன்புக்கு ஏங்கும் குழந்தை, இவரைப் பார்ப்பது தாயைப் பார்ப்பது போலவும், தந்தையின் அன்புக்கு ஏங்கும் மழலை இவரைப் பார்ப்பது தன் தந்தையைப் பார்ப்பது போலவும் மக்கள் நினைத்துக் கொண்டார்கள்.

கீதையைப் படிப்பவர்கள் இவர் உருவில் கண்ணனைக் கண்டார்கள்.

பைபிளைப் படிப்பவர்கள் இவர் உருவில் யேசுவைக் கண்டார்கள்.

குரானை ஓதுபவர்கள் இவர் உருவில் மெக்கா மதினாவைக் கண்டார்கள்.

மொத்தத்தில் இவர் எல்லோருக்கும் இறைவன். பொருள் இல்லாதவர்களுக்கு கருணைக் கடல் ஆகும்.

முதியவர் பத்து ஆண்டுகள் தன் பணிகளைச் செய்து கொண்டே சித்திரா பௌர்ணமி அன்று தன் நான்கு மகன் களின் வியத்தகு விந்தைகளைக் காண தன் ஊருக்குப் பயண மானவர்.

முதியவர் ஞானசேகரன் கூறிய பத்தாண்டு முடிய, அந்த ஆண்டின் சித்திரா பௌர்ணமி இரவு வர சில மணி நேரங்களே பாக்கி இருந்தது. தன் நான்கு மகன்களும், தானும் பிரிந்த இடத்தில் கூடினர். பேரானந்தம் அடைந்து ஒருவரை ஒருவர் கட்டித் தழுவி மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர்.

பின் முதியவர் ஞானசேகரன், "பிள்ளைகளே! ஒவ்வொரு வராக வரிசைப்படி உங்கள் சாதனைகளைக் கூறுங்கள். முதலில் மெய்கண்டனும், முடிவில் ஸ்ரீனிவாசன் கூறும்படி வரிசைப்படி கூறுங்கள்" என்றார்.

மெய்கண்டன் தன் சாதனைகளையும், அதற்குரிய ஆதார சான்றுகளையும் கூறி முடித்தான்.

அடுத்து அறிவழகன் அவ்வாறு பட்டியல் போட்டு தன் சாதனைகளை அள்ளித் தெளித்தான்,

அடுத்து குமணன் தன் மருத்துவ சாதனைகளைத் தனித்தனி யாக விவரித்துத் தெளிவாகக் கூறி முடித்தான்.

கடைசியாக ஸ்ரீனிவாசன் தன் கல்வித் திறமையால் காட்டு மக்களை நாட்டு மக்களாக ஆக்கிய விவரங்களைக் கூறி முடித் தான்.

முதியவர் ஞானசேகருக்கு இந்த நால்வரின் சாதனையில் எது சிறந்தது? எப்படித் தீர்மானிப்பது? இந்த நால்வரின் சாதனைகளும் மிகச் சிறந்ததாகவே அவர் மனதிற்கு பட்டது. தன் தீர்ப்பு, ஒருவேளை தவறாக முடியுமோ என எண்ணி சிறிது சிந்தித்து, ''பிள்ளைகளே! உங்கள் நால்வரின் பத்தாண்டு சாதனையும் போற்றத்தக்கதுதான்; இதில் சந்தேகமே இல்லை. இருந்தாலும், இதில் நான் ஒருதலைபட்சமாக தீர்ப்புக் கூறி விடுவேனோ என்ற எண்ணம் எனக்குள் ஏற்பட்டதால், எனக்கு இத்தீர்ப்பில் தனிப்பட்ட ஒரு பிள்ளையின் பாசம் அதிகரித்துத் தவறாக தீர்ப்பு கூறிவிடுவேனோ என்ற பயமும் ஏற்பட்டுள்ளது. ஆகவே, நீங்கள் பத்தாண்டு கழித்து வரும்போது நான் உயிருடன் இல்லாமல் இருந்தால் சஞ்சீவிமலையில் மூன்று முனிவர் (ரிஷிகள்) இருப்பதாகக் கூறினேன் அல்லவா? நாம் அனைவரும் அவர்களைப்போய் பார்த்து அவர்கள்கூறும் தீர்ப்பை ஏற்போம்! என்ன சொல்கின்றீர்கள்?'' என்றார் முதியவர் ஞானசேகரன்.

ஐவரும் சஞ்சீவிமலை ரிஷிகளைப்பார்க்கப் புறப்பட்டுச் சென்றார்கள். இந்த ஐவரையும் பார்த்த மூன்று ரிஷிகளும் அவர் களை வரவேற்று, ஒரு அறையில் அமர வைத்தார்கள். அந்த மூன்று ரிஷிகளில் வயதில் மூத்தவரான மாபெரும் சக்தி வாய்ந்த ரிஷி இவர்களின் அனைத்து விஷயங்களையும் கேட்டு, ரிஷிகள் இருக்கும் மலைக்குகைக்குள் செல்லும் வழிப்பாதையில் ஐந்து கோடுகள் கிழித்தார்கள். பின் ''நீங்கள் ஐவரும் மிக மிக முக்கியமான அனைத்து மக்களுக்கும் பயன்படும் நல்ல காரியங் களைச் செய்கின்றீர்கள், இதில் யாரின் சாதனை உயர்வானது என்பதை தெய்வமே முடிவு செய்ய வேண்டும். நான் கோயிலின் மூலஸ்தான வழிக்குள் ஐந்துகோடுகளைப்போட்டுள்ளேன். அதை தாண்டி யார் கால் வைக்கின்றார்களோ அவர்களின் சாதனையே உயர்வானது. மகன்கள் நால்வரின் சாதனையுடன் பெரியவரின் சாதனையும் சிறப்பாக உள்ளதால், நீங்கள் ஐவருமே இக் கோட்டை தாண்டிச்செல்ல முற்படுங்கள்'' என்று கூறி முடித்தார் பழுத்த ஞானப்பழமான பெரிய மகரிஷிகள்.

''அப்படியே ஆகட்டும் சுவாமிகள்'' என்று கூறி முதலில் மெய்கண்டன் கோட்டை கடக்க முயற்சிக்கும்போது அது

முடியாமல், அவன் கால்கள் தோய்ந்து துவண்டு கீழே விழுந் தான். அடுத்து அறிவழகனும் அவ்விதமே ஆனான். அடுத்து குமணனும் அவ்விதமே ஆனான். அடுத்து ஸ்ரீனிவாசன் கால் எடுத்து வைக்கும்போது அவன் கால்களும் துவண்டன. அதற்கு அடுத்து பெரியவர் ஞானசேகரன் கோட்டை கடக்க கால்களை எடுத்து வைக்கும் போது அவரால் அந்த ஐந்து கோடுகளையும் கடந்து செல்ல முடிந்தது மட்டுமல்ல, சென்றவர் சென்று கொண்டே இருந்தார்.

மூன்று ரிஷிகளும் நான்கு மகன்களும் பார்க்க கோயிலுக்குச் சென்றவர் சென்றுகொண்டே இருந்து, கடைசியில் மிகப் பெரிய ஜோதி பிம்பமாகக் காட்சி தந்து பின் யாருமே இந்த உலகத்தில் கண்டு இராத ஒளி பிம்பம். ஆயிரம் சூரிய பிரகாச ஒளி ஒரு பந்து வடிவில் வந்தால் எப்படி இருக்கும்? அப்படி இருந்தது. முதலில் ஒளியின் பிரகாசம். பின் அது சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே கோயிலின் மூலக்கருவறைக்குச் சென்று, கருவறைக்கு வலப்பக்கம் உள்ள பகுதியில் அமர்ந்தது. இதைக் கவனித்த முதியவர் ஞானசேகரனின் நான்கு மகன்களுக்கும் உள்ளத்தில் அச்சம் ஏற்பட்டது. அந்த நால்வரும் கோவில் அறையில் ஐந்து கோடுகளைப் போட்ட மகரிஷியைப் பார்த்து "சுவாமி, எங்கள் தந்தை என்ன ஆனார்கள்? திரும்பி வரவில் லையே? எங்களுக்குப் பயமாகஇருக்கிறது!" என்று கூறினார்கள்.

அதற்கு அந்த மூத்த மகரிஷி, "குழந்தைகளே! பயப்படாதீர் கள். நான் பத்து வயது முதல் இல்லறத்தை துறந்து, துறவரம் பூண்டு இக்கோயில் குகையில் தவம் இருந்து வருகின்றேன். எனக்கு மோட்சம் கிடைக்கவில்லை. உங்கள் தந்தை இந்த உலகத்திற்குத் தன்னால் ஆன உதவிகளை, செய்தார்கள். அவருக்கு இவ்வளவு எளிதில் மோட்சம் கிடைத்தது, அவரின் பூர்வ ஜென்ம பலனும், இந்த ஜென்மத்தின் உண்மையான தொண்டேயாகும். அதை நினைந்து நீங்கள் சந்தோஷப் படுங்கள். மேலும் உங்கள் தந்தை உங்களுக்குத் தருவதாக இருந்த சொத்துக்களை தானம், தர்மம் செய்து வாழுங்கள். உங்கள் தந்தை பூரணத்துவம் பெற்ற யோக சித்தியின் மூலமாக பிரபஞ்சத்தில் தெய்வீக ஜோதியாகி, மோக்ஷத்தைப் பெற்று விட்டார்கள். அவருக்கு நீங்கள் மகன்களாகப் பிறந்தது, நீங்கள் பூர்வ ஜென்மத்தில் செய்த பலன்களேயாகும். மேலும் இந்த ஜென்மத்தில் நீங்கள் கற்ற வித்தைகளைப் பல கோடி மக்களின் நன்மைக்கு மட்டுமே பயன்படுத்திப் பல நலமும் பெற்று நீண்ட நெடுநாள் வாழுங்கள்" என்று வாழ்த்தினார்கள்.

# யாருக்கு மோட்சம்

ஆடு மேய்க்கும் ஆனந்தவல்லி தன் ஐந்து வயது முதல் இன்று பதினைந்தாவது வயது வரை ஆடுகளை மேய்த்தே வாழ்ந்து வந்தாள்.

தான் வளர்க்கும் ஆடுகளில் சங்கரன் பார்க்கத்தான் சாதுவே தவிர அவளுக்கு வேறு யாராலும் தீமை வந்தால் அதனால் தாங்கிக் கொள்ள முடியாது. அவளுக்குத் தீங்கு செய்பவரை முட்டி மோதித் தள்ளிவிடும். ஆகவே அதை ஆடாக நினைக்காமல் தன் சொந்த சகோதரனாகவே நினைத்து அதை உபசரித்து வாழ்ந்து வந்தாள்.

அவள் ஆடு மேய்க்கும் ஆற்றங்கரை மேட்டுப் பகுதியில் ஒரு சிறு குடில் இருந்தது. இந்தக் குடிலில் ஒரு யோகி வாழ்ந்து வந்தார்.

காட்டுப் பகுதி மிக்க அப்பகுதியே அந்த யோகிக்கு மன நிம்மதியைக் கொடுத்தது: ஆரவாரமற்ற தனிப்பகுதி. சில நேரங்களில் காட்டு விலங்குகள்கூட தலைகாட்டும் அந்தப் பகுதியில்.

சலசலக்கும் ஆறு ஓடை, இயற்கை எழில் கொஞ்சும் குன்றுகள், மா, பாலா, வாழை என முக்கனிகள் காய்க்கும் தோப்பு, தோப்புப் பகுதிக்கும் ஆற்றுப் பகுதிக்கும் இடையே உள்ள மேட்டுப் பகுதியில் யோகிகளின் ஆசிரமம் இருந்தது.

ஆடு மேய்க்கும் ஆனந்தவல்லி தினம் தினம் அந்தயோகிகளின் ஆசிரமத்தைத் தூய்மைப்படுத்துவாள். யோகிகளுக்கு வேண்டிய சிறு சிறு பணிவிடைகளைச் செய்து வந்தாள். அவளைச் சுற்றி அவளின் சகோதரன் சங்கரனும் உடன் வருவான். சில நேரங்களில் யோகிகளுக்கு சங்கரன் மீது கோபம். இடம் காலம் தெரியாமல் கண்ட இடத்தில் அவரை விதை சாணத்தை அள்ளி தெளிப்பதால். என்ன செய்வது வாய்இல்லாதவன். சொன்னால் புரிந்து கொள்ளும் சக்தி இருந்தாலும் அவன் சுபாவத்தை மாற்ற முடியாதே!

யோகிகள் ஒரு நாள் தவத்தை முடித்துக் கொண்டுகுடிலை நோக்கி வந்துகொண்டு இருந்தார். அந்த நேரம் பார்த்து

தானா சங்கரன் எதிரில் வரவேண்டும். யோகிகளுக்கு உள்ளத்தில் ஒரு வித எரிச்சல்; ஆனந்தவல்லியைக் கூப்பிட்டு "என்னை அழைத்துச் செல்ல நகரத்திலிருந்து சில பெரிய மனிதர்கள் வரப்போகின்றார்கள். அப்பொழுது சங்கரனை இங்கேயும் அங்கேயும் அலையவிடாதே. அவன் அசுத்தம் செய்தால் அவ்வளவு நன்றாக இருக்காது" என்றார்.

"ஆனந்தவல்லியும் அப்படியே ஆகட்டும் சுவாமி" என்றாள். ஆசிரமத்தை நோக்கி ஒரு புதிய மாருதி கார் வந்தது. காவி உடையோடு காட்சி அளித்த நான்கு ஐந்து பேர் யோகிகளை அழைத்துச் சென்றார்கள்.

"எல்லா உயிர்களையும் சரிசமமாகவே ஆண்டவன் படைத்தான். எறும்புக்கு தன் உயிர் எப்படி முக்கியமோ அதே போல் புழுவுக்கும் அதன் உயிர் அதற்கு முக்கியம். நாம் நம்மைப் பற்றியே அதிகம் சிந்தித்து வாழ்கின்றோம். பிற உயிர்களையும் தன் உயிர் போல் போற்றுதல் வேண்டும். இலக்கியங்களும், காவியங்களும் நமக்குச் சொல்லித் தருவது இதுவேயாகும். வேதங்களில்கூட இதைத்தான் வற்புறுத்திக் கூறப்படுகிறது" "யோகிகள் அருளுரையில் அரங்கத்தில் உள்ள அனைவருமே மெய்மறந்து கேட்டுக் கொண்டு இருந்தனர். மேலும் யோகிகள் பேசும்பொழுது வேதாந்தத்தைப் பற்றி விளக்கிக் கூறிக் கொண்டு இருந்தார். அப்பொழுது,

"வேதம் என்ற சொல்லும் அந்தம் என்ற சொல்லும் சேர்ந்த தேவேதாந்தமானது. வேதம் என்றால் சமயம் அல்லது சமயநூல். ஒரு முடிவை சொல்லுகின்ற மறைபொருளே வேதாந்தம் என்று மட்டும் பொருள் கொள்ளக் கூடாது. வேத காலத்தில் கடைசியாக ஆக்கப்பட்டதே வேதாந்தம் என்றும் பொருள் கொள்ளலாம்.

உலகம் என்பது பொய்யானது என்று எண்ணி வாழக் கூடாது. மெய்யாவது என்று எண்ணி வாழ வேண்டும். அப்பொழுதுதான் நாம் வாழ்கின்ற வாழ்க்கையில் ஒரு அர்த்தம் உண்டு. பிறப்பு முதல் இறப்பு வரை தொடர்ந்து வரும் வாழ்க்கை சக்கரம், சீராக சுழன்று கொண்டே இருக்க சிறப்பான பல சாதனைகள் உண்டு. சாதனைகளை சாதிக்கத்தானே வாழ்க்கையே அன்றி, சோர்ந்து சோம்பேறித்தனமாக வீணே கழிப்பது வாழ்க்கை அல்லவே அல்ல.

ஒரு காலத்தில் ரயில் தண்டாவாளங்கள் மரத்தினால் செய்யப்பட்டவைகளாகவே இருந்தன. இப்பொழுது எங்கு

இரும்பினால் செய்யப்பட்டவைகளாக உள்ளன. இன்று மின் காந்த சக்தியால் இயங்கும் தண்டவாளங்களே ரயிலை மிக வேகமாக ஓடச் செய்யும் சக்தியைப் பெற்று இருக்கிறது. சுமந்தவை இன்று இயங்குபவையாக மாறியது போல் நாமும் புதுப்புது யுக்திகளைக் கண்டுபிடித்து வாழ்க்கையைச் செம்மை படுத்தவேண்டும். மரணம் என்பது இயற்கையானது; அந்த இயற்கையின் இயக்கத்தைத் தடுத்து நிறுத்த முடியாது. வேண்டு மானால் இறப்பை முக்தி நிலைக்குக்கொண்டு செல்லலாம். முக்தி என்பது மோட்சம் என்பதாகும். ஒருவன் முக்தியடைய வேண்டு மானால் உண்மையான பக்தி வேண்டும். உண்மையான பக்தியே முக்திக்கு (மோட்சத்திற்கு) நல் வழியாகும்.

இராமாயணத்தில் காட்டுப் பகுதியில் வாழும் சபரி என்ற பெண் இராமபிரானை தன் குடிசைக்கு அழைத்து தான் சேகரித்து வைத்திருந்த சுவை மிக்க கனிகளை உண்மையான பக்தியோடு கொடுத்து உபசரித்தாள். இவளின் பக்தியை மெச்சி இராமபிரான் இவளுக்கு மோட்சத்தை அளித்தார். அந்த மோட்சமே இவளை எல்லோரும் வணங்கும் அளவிற்கு உயர்த்தியது. மோட்சத்தைப் பெற இறைவன்பால் உண்மை யான பக்தி ஒன்றே வழியாகும்'' என்று கூறி முடித்தார் யோகி அவர்கள்.

யோகிகளின் அருளுரையைக் கேட்ட கூட்டம் கலைந்து வீட்டிற்குச் சென்றது. யோகியாரும் தன் காட்டுப் பகுதி குடி லுக்குக் காரில் சென்று இறங்கினார். காரில் அழைத்துச் சென்ற வர்கள் யோகிகளைக் குடிலில் விட்டுவிட்டு வந்து விட்டனர். யோகிகள் குடிலுக்குச் சென்றபோது, அங்கு ஆனந்தவல்லியும் அவளின் ஆடுகளும் புல் மேய்ந்து கொண்டிருந்தது. ஆனந்த வல்லியின் சகோதரனைப் போன்ற சங்கரன் என்ற ஆடு அவள் செல்லுமிடமெல்லாம் அவளுடன் சென்றதால் ஆசிரமத்தைச் சுற்றி ஆட்டு புழுக்கை அதிகம் காணப்பட்டது இதைக் கண்ட யோகிகளுக்கு அருவெறுப்பாகவும் மிக எரிச்சலாகவும் இருந்தது. 'இந்த ஆனந்தவல்லிக்கு எத்தனை முறை எச்சரித்தாலும் அந்த சங்கரன் ஆட்டை தோட்டத்தில் விடாமல் தன்னுடனே வைத்து இருக்காளே. நாளை இதற்கு ஒரு முடிவு கட்டிவிட வேண்டியது தான், என்று யோகிகள் நினைத்துக் கொண்டார்.

மறுநாள் காலை ஆனந்தவல்லி தன் ஆடுகளை தன் ஆட்டு தொழுவத்திலிருந்து ஆசிரமம் உள்ள காட்டுப் பகுதிக்கு ஓட்டிக் கொண்டு வந்து கொண்டு இருந்தாள்.

ஆதவன் பரிச்சிட, அருவி சலசலக்க இலைமேல் பட்ட பனித்துளிகள் காற்றில் தள்ளாட, ஆறங்கற்றை அருகே

யோகிகள் தவநிலையில் இருந்தார். ஆனந்தவல்லியின் கண் இமைக்கும் நேரத்தில் யோகிகளை நோக்கி காட்டுப் புலி ஒன்று பாய்ந்து வர ஆனந்தவல்லி யாது செய்வது என்று திகைத்து நிற்க, தன்னுடன் தொடர்ந்து வந்த சங்கரன் அவள் முகத்தைப் பார்க்க, யோகிகள் கண்களை மூடியோகத்தில் அமர்ந்து இருக்க, வேகமாகப் பாய்ந்த புலியை நோக்கி சங்கரனும் பாய, யோகிகளைத் தாக்க நினைத்த புலிக்கு இந்த திடீர் தாக்குதலை சமாளிக்க முடியாமல் புலி சங்கரன் மீது பாய, புலியும் ஆடும் மோத, புலியின் கோரப்பற்கள் சங்கரின் கழுத்தை பதம்பார்க்க, ஐயகோ...சங்கரன்! புலியின் நான்கு கால்களுக்குள் சிக்கி சின்னா பின்னமாகக் குற்றுயிராய் இருக்க, இந்த சத்தத்தைக் கேட்டு யோகிகள் தவநிலையை விட்டு எழுந்து நடந்ததை அறிய தன்னைத் தாக்க வந்த புலியை தடுத்தது சங்கரன் என்ற ஆட்டிற்கு இந்தக் கதியா? யோகியின் உள்ளத்தில் இரத்தம் வடிந்தது.

'ஆறு அறிவு படைத்த ஆனந்தவல்லியால்கூட தன் உயிரைக் காப்பாற்ற முடியாத நிலையில், ஐந்து அறிவு படைத்த ஒரு ஆட்டால் தன் உயிர் காப்பாற்றப்பட்டது. தன் உயிரைக் கொடுத்து என்னுயிரை மீட்ட ஆனந்தவல்லியின் ஆடு ஒரு சாதாரண பிராணி அல்ல. தன் இனத்தோடு சண்டை செய்வது வேறு, தன் உயிரை மாய்த்து தன் உடலை உண்ணும் ஒரு விலங் கோடு சண்டை இட்டு மாண்ட சங்கரனே உண்மையான ஜீவன்.

தான் இதுவரையில் செய்த தவப்பயனைவிட ஆட்டின் மகத்தான கொண்டே மிகச் சிறந்தது' என்று யோகி மயங்கி விழ யோகியின் உயிரும் ஆட்டின் உயிரும் பரலோகத்தை அடைந் ததும், ஆட்டின் ஆத்மா மோட்சத்திற்கும், யோகியின் ஆத்மா மறு பிறவியைத் தேடியும் சென்றது.



# முன் ஜென்ம வினை

"கடவுளே! ஏன் எனக்கு இந்தச் சோதனை? எதற்காக இந்த வேதனை!" மனம் நொந்து மன்றாடினார் மாதவன்.

போகாத கோவில் இல்லை. வணங்காத சாமி இல்லை. கடைசியில் 'முருகனை விட்டால் வேறு ஆளில்லை' என்று ஒரே முடிவோடு இங்கு வந்தார் மாதவன். மாதவன் மனைவி சீதா லட்சுமிக்கு சில நாட்களாகவே உடல் வலி, அந்த வலியைப் போக்க பார்க்காத வைத்தியம் இல்லை. சாப்பிடாத மருந்தில்லை. கடைசியில் சித்த வைத்தியர் முருகன்தான் இதற்குத் தகுந்த வைத்தியம் செய்வார் என்பது அவரின் இன்றைய அசைக்க முடியாத நம்பிக்கை.

"எத்தனை பிரார்த்தனைகள்! எத்தனை அபிஷேகங்கள்! எதற்குமே பலனில்லாமல் போய் விட்டது. கடவுள்கூட காசு உள்ளவர்களைப் பார்த்துத்தான் காதை நீட்டுகின்றாரோ!" என்று கூட மாதவன் எண்ணினான்.

"சாதாரண உடல்வலிதானே! என்று ஆரம்பத்தில் நினைத்தது, எவ்வளவு பெரிய தப்பாய் போய் விட்டது. எந்த மருத்துவருக்கும் இது என்ன வியாதி என்று புரியவில்லையே, இந்த சித்த வைத்தியர் முருகனாவது இந்த நோயைத் தீர்ப் பாரா பார்ப்போம்" என்று அலுத்துக் கொண்டு ஆண்டவனை வேண்டி அமர்ந்தார் மாதவன்.

வைத்தியர் முருகன், அந்த அம்மையாரின் இடது கை நாடியைப் பார்த்தார். பின் இருகண்களையும் பரிசோதித்தார். நகக்கண்களை ஆழ்ந்து பார்த்தார். நாக்கை நீட்டச் சொல்லி நாக்கில் உள்ள புள்ளிகளைக் கணக்கெடுத்தார். அவருக்கு ஒன்றுமே புரியவில்லை. இருந்தாலும் வீடு தேடி வந்த வரை, எப்படி விட்டுவிடுவது. வைத்தியர், முருகன். மாதவனைப் பார்த்து, "இந்த அம்மையாரின் உடல் வலி தீர 'சஞ்சீவி மலையிலிருந்து கொண்டு வந்து தயார் செய்த சகவலி

நிவாரணி சூரணம்' தருகின்றேன். இதை ஒரு மண்டலம் உட்கொள்ள வேண்டும். இதை உட்கொண்டு உடல் வலி தீர்ந்தால் எனக்குக் காசு கொடுங்கள், இல்லை என்றால் பழனிமலை பக்கத்தில் உள்ள பர்வதமலையில் இருக்கும் குகை சாமியாரை போய்ப் பாருங்கள்!'' என்று கூறி மருந்தைக் கொடுத்து அனுப்பினார், வைத்தியர் முருகன்.

கேன்சர் எனப்படும் நோய் ஏற்பட்டால் உடல் முழுவதும் வலி ஏற்படும் என்று ஒரு சிலரும், எலும்பு உருக்கு நோய் வந்தால் உடல் முழுவதும் வலி ஏற்படும் என்று ஒரு சிலரும், பேசியதை நினைத்த போது சீதாலஷ்மியைவிட மாதவனுக்கு பயமாகவே இருந்தது.

மூன்று பெண் பிள்ளைகள், இரண்டு ஆண் பிள்ளைகளை எப்படி வைத்துக் காப்பாற்றுவது என்ற கவலையும். மன வேதனையும் இருக்காதா? மாதவனுக்கு.

வைத்தியர் முருகன் கொடுத்த மருந்து சாப்பிட்டு நாட்கள் ஓடியதே தவிர, சீதாலஷ்மியின் நோய் மட்டும் உடலை விட்டுப் போகவில்லை. வைத்தியர் முருகன் சொன்னபடி பழனி மலை பக்கத்தில் உள்ள பர்வதமலை 'குகை' சாமியாரைப் போய் பார்த்துவிட வேண்டியதுதான் என்ற முடிவோடு இருவரும் பர்வதமலையை நோக்கிப் பயணமானார்கள்.

அடர்ந்த காடு என்பதைவிட இயற்கை எழில் கொஞ்சும் சோலை வனமாகக் காட்சி தந்தது, பர்வதமலைக்குகை. குகைக்கு முன்பாக பக்தர்கள் கூட்டம் பெருகி இருந்தது. குகையை விட்டு ஒரு நாளில் ஒரு முறையே வெளியே வரும் சாமிகளைச் சந்திக்கக் கூட்டத்ினர் மிக ஆவலாய் காத்திருந்தனர்.

மாதவனும், சீதாலஷ்மியும் சென்று ஆறுமணி நேரம் கழித்து சாமிகள் குகையை விட்டு வெளியே வந்தார்கள். சாமிகள் வெளியே வரும்போது தலையைத் தரையில் கவிந்து கண்களை மூடித்தான் இருக்க வேண்டும் என்ற ஐதிகம் உள்ளதால் பக்தர் கூட்டமும் அப்படியே இருந்தது.

குகையைவிட்டு வந்த சாமிகள் சீதாலஷ்மி, மாதவனைப் பெயர் இட்டு கூப்பிட்டார்கள். ''அம்மா! சீதாலஷ்மி என்னால் உனக்கு இப்பொழுது உன் உடல்வலியை தீர்க்க முடியாது. ஏன் என்றால் முன் ஜென்மத்தில் மாடுகளை வைத்து வாழும்

குலப்பெண்ணாக நீ இருந்தாய், அப்பொழுது பால் கறக்காமல் இருக்கும் மாடுகளைப் பலமாக அடித்து துன்புறுத்தியதால். அந்த மாட்டு ஜீவன்கள் வலி தாங்காமல் கதறிய காரணத்தால் ஆண்டவன் இட்ட சாபம் உன் உடல்வலி. அது தீர இன்னும் மூன்று ஆண்டுகள் இருக்கிறது. இன்று போய் மூன்று ஆண்டுகள் கழித்து என்னைப் பார்!'' என்று கூறிவிட்டு சாமிகள் குகைக்குள் போய்விட்டார்கள்.

பக்தர் கூட்டம் சாமிகளைப் போற்றியது. அன்றைய கூட்டம் களைந்தது. மாதவனும், சீதாலஷ்மியும் வைத்தியத்தை மறந்து, ஆண்டவனை நினைத்து மூன்று ஆண்டுகளை எண்ணி வீடு வந்து சேர்ந்தார்கள்.



# மலரை நாடும் நார்

காலையில் தூங்கி எழுந்தவுடன், குளித்து முடித்து, இடுப்பில் ஒரு துண்டைக் கட்டிக் கொண்டு, பூஜை அறையில் நுழைந்த சேகர், அரை மணி நேரத்திற்குள் பூஜை செய்து முடித்துக் கொண்டு, அறையை விட்டு வெளியே வந்து உணவுக்குத் தயாரானான்.

அவன் மனைவி மாலதி உணவு பரிமாறினாள். அசைவம் சாப்பிட்டுக் கொண்டிருந்த அவன், இன்று சைவமாக மாறியதில் ஆச்சிரியம்தான். காலம் ஒரு மனிதனை எப்படி மாற்றி விடுகிறது. மூன்று ஆண்டுகளுக்குமுன் வீதியில் சேகர் வருகின்றான் என்றால் அந்தத் தெருவே முணுமுணுக்கும்.

கண்கள் கோவைப்பழம் போல் சிவந்து, முன்னங்காலும், பின்னங்காலும் ஒன்றை ஒன்று மோதி, தஞ்சாவூர் பொம்மை போல் அவன் உடலும், தலையும்...! அந்த சேகரா இந்த சேகர்... ! !

ஆச்சரியமாக இருக்கிறது என்று அந்தத் தெருவெல்லாம் சொல்ல மாலதி காதுபடக் கேட்டதுண்டு.

அவனுக்கு மாலதி வாழ்க்கைப்படும்போது, இப்படியா இருந்தான்? இல்லவே இல்லை! கூட சேர்ந்தவர்களின் பழக்கத் தால் அவன் கால்கள் போனபோக்கில் பயணம் போனது, அவன் மனம் போன போக்கே வாழ்க்கையானது.

சேகருக்குத் தாய் இல்லை, தந்தை என்ற பெயரில் ஒரு மனித உருவம் அவனை ஆட்டிப் படைத்தது.

''டேய் சேகர், நீ படித்து கிழித்தது போதும், போயி, சால்னா கடையிலே கறியும், நாயர் கடையிலே பரோட்டாவும் வாங்கிட்டு, அப்படியே சரக்குக் கடையிலே இரண்டு கிளாஸ் வாங்கிட்டு வா!'' என்று எந்த பகுத்தறிவு தந்தையாவது கூறக் கேட்டதுண்டா? தன் காதுகளை நம்பாத சேகர், தன் தந்தை யின் வாயிலிருந்து வரும் அசிங்கத்தைக் கேட்டு—கேட்டு மனம் உருகி, பின் இறுகிப் போனதுண்டு;

தந்தையின் வாழ்க்கைச் சேற்றிலேயே உழன்று எழும் பன்றி யாகத்தான் அவனால் வாழ முடிந்ததே அன்றி, அந்த சகதியை விட்டு அவனால் கரையேற வயதும் இல்லை, அவனைத் தூக்கி விட உறவும் இல்லை.

சாக்கடைகளைச் சுத்தம்செய்யும் குலத்தொழில் அல்ல அவனு டைய தந்தையின் தொழில். இருந்தாலும், அவன் தந்தைக்குத் தெரிந்த தொழில் அது ஒன்றுதான் என்பதால், காலை முதல் மாலை வரை அந்தப் பத்து வயதிலே அவன் தந்தையைச் சுற்றியே வாழ வேண்டிய நிலையும், தந்தைக்குப் பணிவிடை என்ற பெயரில் அசிங்கத்தைச் செய்யும் தொண்டையும் செய்து வந்தான் சேகர்.

'தனக்கு தாய் என்ற தெய்வம் இருந்தால் இப்படி ஒரு நிலை ஏற்பட்டிருக்காது' என்பது அவனின் உள்மனதின் கணிப்பு. தாயின் முகத்தைப் பார்த்து அறியாத அந்தப் பிஞ்சு உள்ளத்தில் எத்தனை எத்தனை ஏக்கங்கள், எத்தனை துக்கங்கள்.

தன் மகனும் படித்து உயர வேண்டும் என்று அவன் தந்தை விஜயன் ஒரு பொழுதும் சிந்திக்கவில்லை. சிந்தித்திருந்தால், இப்படி அசிங்கமான இடங்களுக்கு வளரும் பிஞ்சு உள்ளத்தை அரும்பு பிஞ்சியிலே பழுக்கும் நிலைக்கு உட்படுத்தி இருப்பானா? பசி, பட்டினி உண்டு சேகருக்கு பழகிவிட்ட நிலை: குடி, ஆட்டம், கொண்டாட்டம் அவன் தந்தை விஜயனுக்குப் பொழுது போக்கும் நிலை.

ஆடி, பாடி, தாயுடனும், தந்தையுடனும் இன்முகத்தைக் காட்டிப் பூத்துக் குலுங்கும் புன்னகையை மந்தாரப்பூவாக உதிரச் செய்ய வேண்டிய கிழிந்த உடையும், விரித்த தலை முடியும், கைகளும், கால்களும் குச்சிக் குச்சியாக இருக்கும் நிலைக்கு அவன் தந்தை காரணமா? அல்லது அந்தத் தந்தையை யும், அவனையும் நிர்வகிக்கும் அரசாங்கம் காரணமா? அல்லது இந்த நாட்டை வழிநடத்த எந்தப்பெரியவர்கள் காட்டிய பாதை யின் வளைவு நெளிவு காரணமா?

நிச்சயமாக ஆண்டவன் காரணம் இல்லை. ஏன் என்றால், இந்த உலகத்தை ஆண்டவன் படைத்ததே, புதுமைகளையும், பெருமைகளையும் வளமையாக்கத்தான். அவற்றைக்கெடுக்கவோ குறைக்கவோ அல்ல.

சிறுமதி கொண்ட சின்னத்தனமான மனிதர்களின் கீழ்த்தர மான ஆசாபாசங்களுக்கு வளரும் குழந்தைகள் பலி ஆவதை நாடும், நாட்டு மக்களும், பார்த்துக் கொண்டு தான் இருக்க

வேண்டும். ஏனென்றால், சுயநலம் என்ற வளையத்தில் சூழ்ச்சிகள் நிறைந்த கூட்டில், மனிதன் 'சூன்னியம் என்ற இருட்டில் இருந்து இன்னும் வெளிச்சம் என்ற ஞானத்தைப் பெறாததுதான் இதற்குக் காரணம்.

''அப்பா! ஏன்ப்பா இப்படி செய்யறீங்க...! எப்பொழுது பார்த்தாலும், குடித்து விட்டு வந்து கத்தறீங்க. நாம் இருந்த குடிசை வீடும், பேய்க் காற்றில் போய், இன்று நடுத்தெருவிலே, இந்த மரத்தடியிலே வாழ்கின்றோம். மதியம் மட்டும், சத்துணவு ஆயா கொஞ்சம் சாதம் கொடுத்தது. இப்பொழுது ரொம்ப பசியாக இருக்குப்பா! நீங்க சம்பாதிக்கும் பணத்தைக் குடிச்சே அழிக்கிறீங்களே இது உங்களுக்கு நல்லா இருக்கா?'' என்று சேகருக்குத் தன் தந்தையைக் கேட்டுவிட வேண்டும் என்ற ஆசைதான். கேட்டால் அடி விழுந்தால் என்ன செய்வதென்று மவுனமாக இருந்து விட்டான்.

'கோழி தன் குஞ்சுகளைப் பருந்திடமிருந்து, பாதுகாத்து தன் இரு பக்க கை சிறகுகளால், அடைக்கலம் கொடுத்து, தான் உண்பதை மறந்து தன் குஞ்சுகளுக்கு இரையை ஊட்டு கிறது. காக்கை தான் உண்ணும்போது தன் இனத்தையே கூவி அழைத்து உணவைப் பகிர்ந்துண்ணுகிறது. ஆனால், மனிதன் மட்டும் தான் மது என்ற மயக்கத்தில் வாழும்போது, தன்னை மட்டுமே நினைத்து தன் உடலுக்கு வேண்டியதை மட்டுமே உண்டு விலங்கினும் கீழாக வாழ்கின்றான்! என்பதை உணர்ந்து பார்க்கும் பக்குவம் இன்னும் சேகருக்கு வர வில்லையானாலும், தான் தன் தந்தையை விட்டுத் தனித்து எங்கேயாவது போய்விடவேண்டும் என்று எண்ணிக் கொண்டு இருந்தான்.

'வீடே இல்லாத அவனுக்கு வானமே கூரை, இந்த மண் மாதாவே அன்னை. அன்னையின் மடியில் பூத்துக் குலுங்கும் இயற்கையின் நீர் ஊற்றே அருமருந்து. அதில், காய்க்கும் கனிகளே உணவு' — என்று அவன் எண்ணியும் வாழ முடியாது. ஏனென்றால் பேராசைக் கொண்ட மனிதனின் சிறுமதியால் எல்லாமே பிரிக்கப்பட்டு பணம் உள்ளவனுக்கு மட்டும் சொந்தம் என்ற நிலையில், அவைகள் சிறைப்படுத்தப்படுவதால் உணர்ச்சி களின் சிறகுகளை ஒடித்து மனிதன் வாழ்ந்து கொண்டு இருக் கின்றான். இதற்கும் ஒரு விடிவு வரத்தான் போகிறது. புண்ணி யங்கள் இந்த நாட்டில், புதை பொருளாகக் கருதப்படும்போது, இயற்கையின் சீற்றங்கள் எரிமலைகளாகவும், பூகம்பங்களாகவும்

பெரும் புயலாகவும் உண்டாகி, மனிதனால் கட்டுப்படுத்தப்பட்ட இயற்கை அன்னையின் விலங்குகள் அறுபட்டு விடுதலை பெற்றுத்தீரத்தானே வேண்டும். இதையாரும் எந்த சக்தியாலும் மாற்ற முடியாது!' — என்று தன் இருபதாவது வயதில் சேகர் நினைத்துக் கொண்டே ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் கோவிலுக்கு நடந்துக் கொண்டே இருந்தான்.

தன் தந்தையின் குடியால், தீய வழியில் தன் இளமையின் ஆரம்பம் துன்பமாக இருந்தாலும், தன் தந்தை மறைந்து மூன்று ஆண்டுகளில் அவன் ஒரு தனியார் கம்பெனியில் கூலி வேலையில் சேர்ந்தான். அவன் செய்யும் வேலை மிகக் கடின மானது, இரும்பைக் காய்ச்சி உருக்கி கம்பிகளாகச் செய்யும் தொழிலில் அவன் சில நுணுக்கங்களைக் கற்றுத் தேர்ந்ததால் அவனுக்கு மாதம் ரூபாய் ஐந்து நூறு சம்பளம் கிடைத்தது. அதில் வாடகைக்கும், உடுக்கவும், உண்ணவும் சரியாக இருந்தது.

கோயில் வாசலில் நுழைந்து கிணற்று அருகில் உள்ள குழாயில் கால்களையும், முகத்தையும் சுத்தம் செய்து கொண்டு, சுவாமிகளின் சமாதியை ஆறுமுறை சுற்றி வந்து, ஓர் இடத்தில் அமர்ந்தான். தன் பக்கத்தில் தன் தந்தைக்கு மிக வேண்டியவர் பெரியவர் மாணிக்கம் அமர்ந்திருக்க, இவனும் அவரைப் பார்க்க, அவரும் இவனைப் பார்த்து, "தம்பி! நீ எப்படி இருக்கே?"

"நான் நல்லா இருக்கேன் ஐயா"

"இப்போ எங்கேயாச்சும் வேலை செய்கிறாயா?"

"ஆமாங்கையா, இந்துஸ்தான் ரோலிங் மில் கம்பெனியில் வேலை செய்கின்றேன்."

"அதில் மிகக் குறைந்த வருமானமாச்சே! அதில் உனக்கு நிரந்தர வேலையா அல்லது தற்காலிகமான வேலையா?"

"மூன்று வருடமாகத்தான் இந்த கம்பெனியில் வேலை செய் கின்றேன். தற்காலிக வேலைதான்" — என்றான் சேகர்.

"தம்பி, உனக்கு ஓய்வு கிடைக்கும் போது நான் தரும் இந்த விலாசத்தில் என்னை வந்து பாரு.' என் கம்பெனி வேலைக்கு, உன்னையே வேலைக்கு வைத்துக் கொள்ள முயற்சி பண்றேன்" என்று கூறி, அவனிடம் விடை பெற்றார் பெரியவர் மாணிக்கம்.

மாணிக்கம், சேகரின் அப்பாவைப் போல தீயவழிக்கு போகாதவர்; மாணிக்கம் உணவுக்குத் துன்பப்படும் போது, பல நேரங்களில் சேகரின் தந்தை அவருக்கு உதவி செய்தார். சேகரின் தந்தை குடிக்கு அடிமையானபின்,அவரைவிட்டு விலகி இருந்தார் மாணிக்கம். மாணிக்கத்தின் உயர்ந்த பண்புகள் சேகருக்குப் பிடித்திருந்தது. கோயிலை வணங்கி வீட்டுக்கு வந்த சேகருக்கு மனநிம்மதியும், உள்ளத்தில் இனம் புரியாத ஆனந்தமும் குடி கொண்டிருந்தது. 'கடவுள், மனித உருவில் உதவியை நிச்சயம் செய்வார்' என்ற நம்பிக்கைத்தான் மாணிக்கத்தைக் கோவிலில் சந்திக்கக் காரணம் போலும். 'எழுதப் படிக்கத் தெரியாத இந்த இருபதாவது வயதில்தான் எப்படி முன்னுக்கு வருவது' என்று எண்ணியபடியே ஞாயிறு அன்று விடியற்காலை பெரியவர் மாணிக்கம் கொடுத்த முகவரிக்குச் சென்றான் சேகர்.

சேகரைக் கண்டு இன்முகத்துடன் வரவேற்ற மாணிக்கம் "சேகர், நான் சைக்கிள் கம்பெனியின், சைக்கிளின் உதிரி பாகங்களுக்கு வேண்டிய பொருட்களை உற்பத்தி செய்யும் சிறு கம்பெனி வைத்திருக்கின்றேன். அதில் எனக்கு நம்பிக்கையுடன் வேலை செய்யவும், மேற்பார்வை செய்யவும் ஆள் தேவைப் படுகிறது. அதை நீ ஒழுங்காகச் செய்தால் உனக்கு மாதம் ரூபாய் ஆயிரம் சம்பளம் தருகின்றேன்" என்று கூறி முடித்தார்.

"ஐயா...நான் ஆனா...ஆவன்னா கூட படிக்கத் தெரியாதவன், நான் தங்கள் கம்பெனியில் வேலை மட்டும் செய்கின்றேன். மேற்பார்வை செய்ய எனக்குத் தகுதி இல்லை" என்று சோர்ந்த முகத்துடன் கூறி முடித்தான் சேகர்.

"நீ படிக்க வேண்டும்; அவ்வளவுதானே, நான் பார்த்துக் கொள்கின்றேன். நீ...நாளை முதல் வேலையில் வந்து சேரு" என்றார் கருணை மனம் கொண்ட மாணிக்கம். சேகரின் அயராத உழைப்பு பகல் பொழுதில், சோர்வு அடையாதபடிப்பு. இரவுப் பொழுதில், காலசக்கரத்திற்கு ஈடுகொடுத்து, உழைப்பு, படிப்பு இவை இரண்டின் நடுவில், அவனின் உண்மை, நேர்மை அவனுக்கு ஒளிமிக்க எதிர்காலத்தைத் தந்தது. அவனின் இருபத்து ஐந்தாவது வயதில்.

பெரியவர் மாணிக்கத்தின் கம்பெனி ஒன்று இன்று, ஐந்தாக உயர்ந்தது. ஐந்து ஆண்டுகளில் ஐந்து கம்பெனி உற்பத்தி என்றால் பெரியவர் மாணிக்கத்தின் கடின உழைப்போடு, சேகரின் பணியும் அதில் அடங்கும்.

பெரியவர் மாணிக்கத்தின் மனதில் சேகருக்கு ஒரு நல்ல காரியம் செய்ய வேண்டும் என்று பட்டது. அத்தோடு தன்னால் நடத்தப்பட்டு வரும் ஊனமுற்றோர் காப்பகத்திலிருந்து, அவனுக்கு ஒரு பெண் எடுத்து திருமணம் செய்து வைக்க வேண்டும் என்ற எண்ணமும் ஏற்பட்டது. இதைப் பற்றி சேகரிடம் எப்படி சொல்வது? அவன் தப்பாக நினைத்துக் கொள்வான் என நினைத்து, தன்னைவிட தாழ்ந்த சாதியில் பெண் எடுப்பதோடு, அப்பெண் உடல் ஊனமுற்றவளாக இருக்க வேண்டும் என்று கருதி, தன் ஒரே மகனுக்குப் பெண் எடுத்ததைக் கூறி அதைப்போல் சேகருக்கும் திருமணம் செய்ய தன் மகனையேசேகரிடம் கேட்கச் சொன்னார்பெரியவர் மாணிக்கம்.

''ஐயா, கொடுத்த பிச்சை என் வாழ்க்கை, தெய்வத்தின் பேச்சை எப்படி மீற முடியும்? தான் பெற்ற பிள்ளையான உங்களுக்கே ஒரு நல்வழி காட்டும் போது, எனக்கும், அவர் காட்டிய, வழியே சிறந்தது'', என்று பெரியவரின் மகன் கூறிய வார்த்தைக்கு பதில் வார்த்தை பேசினான் சேகர்.

சேகர், மாலதி திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மணமகள் மாலதிக்குக் கால்களில் தான் ஊனமே தவிர உள்ளத்தில் இல்லை. மாலதியின் அன்புக்கும், வாழ வைத்த தெய்வம், மாணிக்கத்தின் பண்புக்கும் கட்டுப்பட்டு, . வாழ்க்கையின் வெற்றிப் படிகளை நோக்கிச் சென்று கொண்டிருந்தான் சேகர்.



# ஓர் இரவுப் பொழுது

''என்னங்க ராத்திரி மணி பத்து ஆகுது, வானத்தைப் பார்த்து ஒரு மாதிரியாக—யோசித்துகிட்டு இருக்கீங்க.''

''நான் யோசிப்பது உனக்கு ஒரு மாதிரியா தோணுதா, எல்லாம் காரணத்தோடுதான்''

''அப்படி என்னங்க வானத்திலே இருக்கு''

''இப்ப காரணம் எதுவும் கேட்காதே, சமயம் வரும்போது நானே சொல்றேன்''

''உங்க செயல், நடைமுறையே சரியில்லீங்க! இப்ப நீங்க சிரிச்சதுக்கு காரணம் கேட்டா, சமயம் வரட்டுங்கிறீங்க! ஏதோ உங்க விருப்பம்'' என்று கூறி முகத்தை சுளித்துக் கொண்டாள் மார்தாண்டராயனின் மனைவி கனகம். மார்தாண்டராயனுக்கு குணசேகரன் என்ற தம்பி உண்டு. கனகத்தை அவன் திருமணம் செய்யும் வரை அண்ணன் உயிரும், தம்பி உடலுமாக இருந்தார்கள். 'காலம் தங்களைப் பிரித்தது' என்று மார்தாண்டராயனும், 'அண்ணனின் மனைவி தனக்குத் தாயாக இருக்க வேண்டியவள், பேயாக வந்து பிரித்தாள்' என்று குணசேகரனும் நினைத்துக் கொண்டார்கள்.

''எனக்கு என்னமோ பயமாக இருக்குதுங்க! எப்பவும் இல்லாம இந்த ஒரு நாள் பொழுதில் எதையோ இழந்து பறிகொடுத்தது போல் இருக்கீங்க. உங்க முகத்தைப் பார்க்கவே முடியல, சில நேரங்களில் பேய் பிசாசு அறைந்தது போல் இருக்கீங்க! எதை நினைத்து உங்க மனம் வேதனைப்படுது? அல்லது உங்களை காத்து கருப்பு ஏதாச்சும் தீண்டி இருக்கா? எனக்கு பயமாக இருக்குதுங்க, நாளைக்கு நம் ஸ்ரீ [illegible]

பொன்னம்பலத்தை வர சொல்லட்டுங்களா? என்ன சொல்றீங்க'' என்று மூச்சு விடாமல் மறுபடியும் பேசி முடித்தாள் அவன் மனைவி கனகம்.

''பூசாரியும் வேண்டாம், பூசணிக்காயும் வேண்டாம், உண்மையைச் சொல்றேன், நீ எங்கையாச்சும் போய் உளறி வைக்காதே! என் உயிர் போய்விடும்.''

''உங்க உயிர் போற அளவு உள்ள ரகசியத்தை நிச்சயம் நான் யார்கிட்டேயும் சொல்ல மாட்டேன், இது சத்தியம்! கொஞ்சம் இருங்க பிள்ளைகள் தூங்கிட்டாங்களா! வேலைக்கார செவிடன் வேலாயுதம் தூங்கிட்டானா என்று பார்த்துவிட்டு வந்து விடுகின்றேன். நடு ராத்திரி ஆனதாலே யாரும் இல்லீங்க, இப்ப சொல்லுங்க'' என்றாள் கனகம்.

''ஒருவன் சாவில் மற்றவன் வாழ்வு என்று சொல்லுவாங்க, அது உண்மையோ பொய்யோ, ஆனா குணசேகரன் சாவில் நமக்கு வாழ்வு உண்டு என்பது நிச்சயம். அப்பா, அம்மா சேர்த்து வைத்த எல்லா சொத்துக்களையும் தானே ஆண்டு கொண்டு வந்தான். நான் கேட்டால் சரியான பதில் கூறாமல் அடாவடித்தனம் செய்தவன் இன்று பவுர்ணமி இரவோடு அவன் கதை முடிந்தது. அவன் கதையை முடித்ததும் நான் தான்! இனி அனைத்து சொத்தும் நமக்குத்தான்.''

''என்ன சொல்றீங்க, உங்க தம்பியை நீங்களா கொன்னுட் டீங்க?''

''வெள்ளை சோத்தை போட்டா, கருப்பு காக்கா நான் நீன்னு போட்டி போட்டுக் கொண்டு வரும். போட வேண்டியதை போட்டு, அந்த போக்கத்த பயலின் உயிரை எடுத்துட்டேன். இதில் நான் சம்மந்தப்பட்டது யாருக்கும் தெரியாது. நீ போய் எங்கேயும் சொல்லித் தொலைக்காதே.''

''எனக்கு என்ன பைத்தியமா நான் ஏன் சொல்றேன்!'' பயத்தோடு கூடிய சந்தோஷத்தில் மூழ்கினாள் கனகம்.

''நாம் பேசறதை யாராச்சும் கேட்டிடப் போறாங்க,''

''என்மனசு படக் படக் என்று அடிக்குதுங்க, மணி யாகுது நீ போய் படுத்துக்க,பிறகு நான் வாரேன்'', மார்தாண்டராயன் உள் மனதில் தன் கூலிப் படைகள் தன்னை காட்டிக் கொடுத்து விடுவார்களோ என்ற பயத்தில் ஆழ்ந்து இருந்தான்.

"மாரியாத்தா சத்தியமா சொல்றேன், அப்பா, அம்மா சேர்த்து வைத்த நகைகளையும் காசுகளையும் என்னிடம் தர வில்லை. அதை என்ன செய்தார்கள் என்று எனக்குத் தெரியாது, நீ என் பேரில் வீண் பழி சுமத்துவது அபாண்டம், அப்பா உயிரோடு இருந்தபோது சரியான முறையில்தான் சொத்தை பிரித்துக் கொடுத்தார். நீ தான் அப்பாவையும், அம்மாவையும் அனாவசியமாக திட்டி அசிங்கப்படுத்திட்ட, மானம் தாங்காமல் இருவரும் ஒருவர் பின் ஒருவராக மனம் நொந்து உயிர் விட்டாங்க, பாக்கி இருப்பது நான்ஒன்று தான், நான் செத்தா எல்லா சொத்துக்களையும் நீயே அனுபவிக்கலாம் என்று எண்ணாதே, எல்லாம் அந்த மாரியாத்தா பார்த்துட்டு இருக்கா, வானத்தில் உள்ள சந்திரன் மேல் சத்தியமா சொல்றேன், நீ செய்வது நல்லது அல்ல. பவுர்ணமி இரவு இன்று எல்லாத்திற்கும் சந்திரன் சாட்சி, மரியாதையா போய்விடு"

"பகல்ல சூரியன் சாட்சி, இரவிலே சந்திரன் சாட்சி, சந்திரன் மேல் சத்தியம் என்று கதையா சொல்ற, கூடப் பிறந்த தம்பி யாச்சே என்று பார்க்கின்றேன். இல்லே உன்னை இங்கையே வெட்டி குழிதோண்டி புதைச்சுடுவேன், நீ செத்தா ஏன் என்று கேட்க என்னை விட்டா வேறு நாதி இல்லை.

நாலு எழுத்து படித்து விட்டோம் என்ற திமிரில், என்னை விட பேரும் புகழும் பெற்று வாழ்ந்திடுவோம் என்று மட்டும் நினைக்காதே! மரியாதையா மறுபடியும் சொல்றேன், அப்டன் செத்த பிறகு ஆத்தா எல்லா நகைகளையும் காசுகளையும் உன்னிடம் தான் கொடுத்து வைத்தாள். அதை நீ ஊர் பொது காரியம், பொது நலம் என்று வீண் செலவு செய்யலாம் என்று நினைக்கிறே, அதை நான் விட மாட்டேன். உனக்கு கல்யாணம் பண்ணி வைக்கலாம் என்று கூட நினைச்சேன், ஆனா! நீ ஊர் பசங்கள் கூட சேர்ந்து நம் சொத்தை எல்லாம் அழிப்பதை பார்த்து, கலியாணம் செய்வதை விட கருமாதி செய்வது மேல் என்று நினைக்கின்றேன். பொழுது விடிவதற்குள் வயக் காட்டிற்கு நீர் பாய்ச்சிட்டு போவதற்கு முன் நீ உண்மையைச் சொல்லலே, நீ அவ்வளவுதான்."

ஊருக்குத் தெற்கால் அரை கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கும் வயக்காட்டில் நீர் பாய்ச்சுவதற்குச் சென்ற தம்பி குணசேகரனை அண்ணன் மார்தாண்டராயன் வழி மறித்துப் பேசி நின்றான். அவர்கள் இருவரின் இருபது ஏக்கர் நிலம் இதில் தலா பத்து ஏக்கர் என்று பிரித்துக் கொள்ள உடன்பாட்டில் மனத்தாங்கல் உள்ளதாலும் தம்பியிடம் தாய், தந்தை பிரிய

மானவர் என்பதால், மேலும் அவர்களின் நகைகளும் காசும் தம்பியிடம் இருப்பது என்பதோடு, தம்பி தனக்கு மரியாதை தர வில்லை என்றும் தன் சொற்படி நடக்கவில்லை என்பது மட்டு மல்ல மார்தண்டராயனின் மனதில் வேறு ஒரு எண்ணமும் குடிகொண்டு இருந்தது. மனைவி குழந்தை குடும்பத்தோடு இருக்கும் தனக்கு எட்டு ஏக்கர்கள், திருமணமே ஆகாமல் தனி மரமாய் இருக்கும் தம்பிக்கும் திருமண செலவிற்கும் சேர்த்து, பன்னிரெண்டு ஏக்கர்கள். இதில் நியாயமில்லை என்பதும், தன் தம்பி இறந்தால் அந்த பன்னிரெண்டு ஏக்கருக்கும், தாயின் நகை களும் தனக்கு மட்டுமே சேரும் என்று அவன் உள் மனது அடிக்கடி அவனுக்கு ஞாபகப்படுத்திக் கொண்டே இருந்தது. அதன் எதிரொலிதான் வாய்சண்டை உயிர் பிரிப்பு நிகழ்ச்சிகள்.

* * *

"டேய் முனுசாமி, கந்தசாமி, நீங்க இருவரும் யாருக்கும் தெரியாமல் இன்று இரவு என் தம்பி குணசேகரன் தனியாக காளிமேடு நிலத்திற்கு தண்ணீர் பாய்ச்ச வரும்போது, அவனைக் கொலை செய்து, பக்கத்தில் இரயில் தண்டவாளத் தில் போட்டுடுங்க! விடியற்காலை நாலேகால் மணிக்கு முதல் இரயில் வரும், அதில் அவன் தற்கொலை செய்து கொண்டதாக ஊர்ல சொல்லி விடுவோம். நான் உங்களுக்குப் பேசிய தொகையை கொடுத்துடுறேன், இப்பப் இந்த பணத்தை அட்வான்ஸா வச்சிக்கங்க, இன்று இரவு பவுர்ணமி சந்திரன் வெளிச்சம் அதிகமாக இருக்கும்; பார்த்து காரியத்தை முடிச் சுடுங்க" என்றான் மார்த்தாண்டராயன்.

"சரி அண்ணே நாங்க கச்சிதமா காரியத்தை முடிச் சுடறோம். கவலையை விடுங்க. உங்க தம்பி இந்தப் பக்கம் வரட்டும் நாங்கள் தீர்த்திடுறோம்"— என்று முள் வேலி புதருக்குள் மறைந்து இருந்த முனுசாமியும் கந்தசாமியும் கூறினார்கள்.

* * *

"டேய் முனுசாமி...அதோ போறது குணசேகரன் மாதிரி யாக இல்ல..."

"மாதிரி என்ன மாதிரி...அவனே தான்...அவன் எங்கே போறான் என்று உன்னிப்பாக பார்த்துக் கொண்டே பின் தொடர்வோம். உசாரா பள்ளத்தாக்கு நிலத்திற்கு வரும் போது...பக்கத்திலேயே தண்டவாளம் இருக்கு அங்கு கொலை செய்தாதான் வசதி—வா பின் தொடர்வோம்." என்றான் முனுசாமி.

''போறவன் உயரத்தைப் பார்த்தா குணசேகரன் மாதிரித் தான் இருக்கு; ஆனா நடைதான் வேறு ஆள் மாதிரி இருக்கு, எதுக்கும் பின் தொடர்ந்து செல்வோம்; வெளிச்சம் வேற கம்மியாக இருக்கு, அப்பப்ப சந்திரனை கருமேகம் வந்து மறைத்து நமக்கு தொல்லை கொடுக்குது.'' மெல்லிய குரலில் சொன்னான் கந்தசாமி.

''டேய்...டேய்...என்ன ஆச்சரியமாக இருக்கு! இரயில் வந்து கொண்டே இருக்குது. நாம் கொலை செய்ய வந்த ஆளும் தண்டவாளத்தின் குறுக்கே போய் நிற்கின்றானே! இப்ப நாம் என்ன செய்வது. ரயில் வந்து அவன் மேலே ஏறி செத்துடுவான் போல இருக்கே—இப்ப என்ன செய்றது?''

ரகசிய குரலில் சொன்னான் முனுசாமி.

''நமக்கு வேலை மிச்சம், நம் கையால் கொலை செய்ய வேண்டிய பாவமும் மிச்சம். சரி அவன் தண்டவாளத்திலேயே நிற்கின்றான் வண்டியும் வேகமாக வருது. என்ன நடக்குதுன்னு பார்ப்போம்'' என்றான் கந்தசாமி.

''என்ன இப்படி ஆச்சே...அவனைக் கொலை பண்ண வேண்டிய அவசியமே இல்லாம போச்சே... தண்டவாளத்தில் நின்றவனுடைய உடம்பு பீஸ்...பீசா போச்சு, மார்தாண்டராயனிடம் நாம் தான் குணசேகரனைக் கொலை செய்து தண்டவாளத்தில் போட்டு விட்டோம் என்று கூறி முழுபணத்தையும் வாங்கிக் கொண்டு நம் வீடு போய்ச் சேர்வோம் வா''— என்றான் முனுசாமி.

* * *

''ஐயா உங்க தம்பியை நாங்க கொலை செய்து தண்டவாளத்தில் போட்டுட்டோம்; காலையில்'பாடி'தண்டவாளத்தில் இருக்கும். நீங்க போய் பார்த்து, மற்ற காரியங்களை சமாளிச்சுக்குங்க எங்களுக்குச் சேர வேண்டிய முழுத் தொகையை குடுத்துடுங்க; பொழுது விடிவதற்குள் நாங்க போறோம்'' என்று பரப்பரத்தார்கள் முனுசாமியும், கந்தசாமியும். அவர்களுக்கு பேசிய தொகையை;கொடுத்து விட்டு, கண் விழித்துக் கொண்டு இருந்தான்; தண்டவாளத்தில் தம்பியின் பிணத்தின் மீது ஒப்பாரி வைத்து அழுது புரள காத்திருந்தான் மார்தாண்டராயன். தண்டவாளத்தில் இருந்த உடல் உருவம் தெரியாமல் சின்னாபின்னமாக சிதறிக் கிடந்தது. அவனும் அவன் மனைவியும் அழும் 'துக்க ஒலியைக் கேட்டு ஊரே கண்ணீர் விட்டது.

மனத்திற்குள் மார்த்தாண்டராயன் வெற்றி பெற்றான். தம்பியை இழந்து சொத்தைப் பெற போகும் சந்தோஷத்தில் அண்ணன் மார்த்தாண்டராயன் வயற்காட்டில் வாய் சண்டை போட்ட குணசேகரன் மேற்கொண்டு மனம் சரியில் லாததால் பள்ளத்தாக்கு நிலத்திற்கு நீர் பாய்ச்ச செல்லாமல் மறுபடியும் வீட்டிற்கு வந்து பக்கத்து கிராமத்தில் காதொலி சித்தர் வந்து இருப்பதால், தன் வீட்டில் வேலை செய்யும் வேலா யுதத்தை அந்த சித்தரிடம் அழைத்துக் கொண்டு செல்லும் போது, ஒரு புதரில் தன் அண்ணனும் முனுசாமி, கந்தசாமியும் பேசியதைக் கேட்டுவிட்டு, அவர்கள், இவர்கள் இருவரையும் பார்க்காதவாறு பக்கத்து கிராமத்திற்கு சென்று சித்தர் இருக்கும் இடத்திற்கு வேலாயுதத்தை விட்டு விட்டு அண்ணனின் கொடூர எண்ணத்தை அறிந்து உயிர் தப்பித்தால் போதும் என்று எண்ணி மனம் நொந்து பக்கத்து ஊருக்குச் சென்று விட்டான். குணசேகரன்.

காதொலி சித்தரின் அருளால் காது கேட்கும் நிலையை அடைந்த வேலாயுதம், தனக்கு காது கேட்பதை யாரிடமும் கூற வாய்ப்பு இல்லாமல் பழையபடி அவன் படுக்கும் இடத்திலே படுத்துக் கொண்டான்.

வேலாயுதத்திற்கு முழு காதும் கேட்காது, என்ற எண்ணத் தில் மார்தாண்டராயனும் அவன் மனைவி கனகாவும் மறுபடியும் பேசியதைக் கேட்ட வேலாயுதம் பொழுது விடிவதற் குள் பக்கத்தில் உள்ள காவல் நிலையம் சென்று தன்னை சித்தரிடம் விட்டு விட்டு வீடு வந்த குணசேகரனை மார்தாண்ட ராயன் கொலை செய்து தண்டவாளத்தில் போட்டு விட்டதாக நினைத்து காவல் துறையில் புகார் செய்ய, பிணத்தை கைப் பற்றிய காவல் துறை அதிகாரிகள், மார்தாண்டராயனை போலீஸ் காவலில் வைத்தார்கள். கொலை செய்ததாக கூறி சென்ற முனுசாமி, கந்தசாமியும் குடிவெறியில் தள்ளாடி தள்ளாடி காவல் நிலையம் சென்று கொலை செய்ய தூண்டிய மார்தாண்டராயனுக்கு எதிராக போலீசில் சாட்சி சொன்னார்கள்.

தம்பியின் சொத்து முழுவதும் தனக்கு மட்டும் சேரும் என்று எண்ணிய மார்த்தண்டராயன் காவல் துறையின் பலமான தாக்குதலுக்கு உடலும் உள்ளமும் தளர்ந்து கண்ணீர் விட்டுக் கதறி அழும்போது—மனம் நொந்து பக்கத்து ஊருக்கு சென்ற தம்பி குணசேகரன்,தன் அண்ணனை காவல் துறையினர் பிடித்து அடித்து சித்திரவதை செய்து உண்மையை வரவழைக்க முயற்சிப்

பதைக் கேள்விப்பட்டு உடனே காவல் துறையை நோக்கி ஓடி வந்து அண்ணன் எதிரில் நிற்க...ஆடி...அசந்து...அதிர்ச்சி அடைந்த மார்தாண்டராயன் புது உயிர் பெற்று ஆண்டவன் செயலால் தன் தம்பி இறக்கவில்லை. அவன் இறந்திருந்தால் தன் உயிரும், தன் சொத்தும் போய் இருக்கும் என்று எண்ணி தம்பி குணசேகரன் கால்களைப் பிடித்துக் கொண்டு,

'தம்பி!, நான் எண்ணியது;நான் செய்தது எவ்வளவு பெரிய பாவமான செயல், 'உயிர் கொடுப்பான் தம்பி' என்பதை நீ நிரூபித்தாய், தம்பியின் உயிர் எடுக்கும் பாவியாக நான் மாறினேன்! என்னை ஆண்டவனும் மன்னிக்க மாட்டான், நான்—பாவி... மகாபாவி... என்னை நீ மன்னிக்க வேண்டும்' என்றுத் தேம்பித் தேம்பி அழுதான் மார்தாண்டராயன். அன்று இரவு தண்டவாளத்தில் இறந்தது கனகத்தின் ஒரே தம்பி இராஜகோபால் தான் என்று பிறகு தெரிய வந்தது. பக்கத்து கிராமத்திலிருந்து குடிவெறியில் அக்கா வீட்டை நோக்கி வந்த இராஜகோபாலன் தன் அக்காவின் கணவரும், அவர் தம்பியும் சண்டை போட்டுக் கொண்டு இருப்பதை பார்த்து அவர்கள் அருகே செல்ல நினைத்தவன்,ஒரு புதரில் இரு கருத்த உருவங்கள் மறைந்து நின்று கொண்டிருப்பதைப் பார்த்து பயந்து பள்ளத் தாக்கு நிலத்துப் பக்கம் போய் தண்டவாளத்திற்கு அடுத்த கிராமத்தில் சாராயம் விற்பதை அறிந்த அவன் தண்டவாளத் தைக் கடக்கும் போது போதை வெறியில், குடிவெறியால் தண்டவாளத்தினிடையே நின்று விட, இரயில் மோதி அவன் உடல் துண்டு துண்டாக போக, பிறகு தான் தெரிந்தது கனகத் திற்கு இறந்தது தன் உடன் பிறந்த தம்பி என்று. அன்று இரவு முனுசாமியும், கந்தசாமியும் 'குணசேகரன்தான் இறந்தான்' என்று நினைத்தார்கள்.

எல்லாம் ஓர் இரவுப் பொழுதில் முடிந்தது. அவர்களின் குடும்பம் சேர்ந்தது. குழப்பமும் தீர்ந்தது. பொழுதும் விடிந்தது.



# இறைவன் எங்கே?

''அல்லல்போம் வல்வினைபோம்
அன்னைவயிற்றிற் பிறந்த
தொல்லைபோம் போகாத்
துயரம்போம் — நல்ல
குணமதிகமாம் அருணைக்
கோபுரத்துள் மேவும்
கணபதியைக் கைதொழுதக்கால்''

ஆடி மாதம் நான்காவது வாரத்தின் ஞாயிற்றுக் கிழமை. பாடி படவட்டம்மன் திருக்கோயிலிலிருந்து தென்றலில் மிதந்து வரும் தெய்வீக தேனிசை விநாயகர் துதிப்பாட்டை பல மைல் தூரம் ரசித்து இன்புற்றுக் கொண்டே கோவிலை நோக்கி நடந்து வந்து கொண்டு இருந்தார் முதியவர் குமரகுரு.

முதியவர் குமரகுரு அம்பாள்மீது கொண்ட பக்திக்கு அளவே இல்லை. நிமிடப் பொழுதும் அம்பாளின் திரு அருளின் சக்திகளையும், பெருமைகளையும் எண்ணிக் கொண்டே இருப்பார்.

அம்பாள் குடிகொண்ட புற்றையும், வேப்பமரத்தையும், உயிரையும் உடலையும் போல் எண்ணி வாழ்ந்து வந்தார். புற்று மண்ணை எடுத்து நெற்றியிலேயும், உடம்பிலேயும் பூசிக் கொள்வதும், வேப்ப இலைகளை மென்று விழுங்கியும், வேப்ப இலை கலந்த மஞ்சள் நீரை மட்டுமே உண்டு விரத நாட்களைக் கழித்தும் வந்தார். அவர் அந்த கோயிலுக்கு வருவதை அம்பாளே வருவதாக அப்பகுதி மக்களும், வெளியூர் பக்தர்களும் எண்ணி வாழ்ந்தார்கள்.

முதியவர் குமரகுரு கோவிலை நோக்கி வந்து கொண்டிருந்த வழியில் நான்கு ஐந்து வாலிபர்கள் சூழ்ந்து அவர்களுக்குள் விவாதம் செய்து கொண்டு இருந்தார்கள்,

அம்மன் சன்னிதானத்தில் கூழ் ஊற்ற முனைந்து செயல் படுபவர்கள் ஒரு பக்கம்.

பக்தர்களுக்கு கூழை ஊற்றிவிட்டு, பொங்கல் பானையை வரட்டிகள் அடுக்க வைக்கும் முன் கற்பூரத்தை அதில் ஏற்றி வைத்து பொங்கல் பொங்கி வழியும் திசையை எதிர்பார்த்து இருப்பவர்கள் ஒரு பக்கம்.

''ஆடுகள், கோழிகள் இங்கு பலியிடக்கூடாது. மீறினால் தண்டிக்கப் படுவார்கள்''—என்ற பெயர் பலகையைப் படித்து விட்டு போகும் பக்தர்கள் ஒரு பக்கம்.

வேப்பிலை தோரணத்தை இடுப்பில் ஆடைபோல் சுற்றி திருக்கோயிலை வலம் வரும் பக்தர்கள் ஒரு பக்கம்.

கோவிலின் வாசலின் முன்புறம் சின்ன சின்ன கடைகளை வைத்து பொருள்களை விற்கும் கடைகளில் பொருட்களை வாங்கும் மக்கள் ஒரு பக்கம்.

எப்பக்கம் திரும்பினாலும் அம்மன் பக்தர்களின் தெய்வீக செயல்கள் மிக புனிதமாகவும், புண்ணியம் நிறைந்ததாகவும் இருந்தது.

ஆனால்—

முதியவர் குமரகுரு வரும் பாதையில், விண்வாதம் செய்து கொண்டு இருந்தவர்களின் செயல்களோ விந்தையாக இருந்த தால், அவர்களின் அருகிலே சென்ற முதியவர், எங்கே இவர் களின் வாதம் முற்றி விவாதமாகி அவர்களின் மனமும், உடலும் சர்வ ரோகமாக ஆகிவிடுமோ என நினைத்து,

''என்னப்பா கோயிலுக்கு அருகில் வாதம் செய்துகொண்டு இருக்கின்றீர்கள்''—என்று கேட்டார்.

அதிலிருந்த முருகவேல் என்பன்—

''ஐயா! இதோ நிற்கும் ராஜராஜன் இறைவன் எங்கே இருக்கின்றான், அவனைக் காட்டமுடியுமா?—என்று, புதிய கேள்வியைக் கேட்டு விண்வாதம் செய்கின்றான், அதோ நிற்கும் அருணாசலம் கடவுள் மனிதனைப் படைத்தாரா? அல்லது மனிதன் கடவுளை படைத்தானா?—என்று கேட்கின்றார்கள்.

அவர்கள் கேட்கின்றவைகளுக்கு நான் சொல்லும் பதில் சரி இல்லை என்று விவாதம் செய்கின்றார்கள். இதுவே இந்த பரப்பான விவாதத்திற்குக் காரணம் ஐயா—!''

என்று மிக பணிவாகக் கூறி முடித்தான் முருகவேல்.

''தம்பிகளா! முட்டை முன்பு தோன்றியதா?

கோழி முன்பு தோன்றியதா? என்பது பழைய வாதம்.

இறைவன் தோன்றி உலகைப் படைத்து, மனிதர்களை படைத்தாரா? அல்லது தோன்றிய உலகத்தில் இருக்கும் மனிதன் இறைவனை உண்டாக்கிக் கொண்டானா? என்பதும் இறைவன் எங்கே? என்கின்ற எல்லா கேள்விகளும் மிகமிக பழைமையானது தான். இதில் புதிய கேள்வி என்பதற்கு இடமே இல்லை.

'கடவுள்தான் உலகத்தைப் படைத்தார்' என்று நான் சொல்ல, அதை சிலர் மறுக்க.

தோன்றிய உலகத்தில் தற்காப்புக்காக,வும் தன்னை மீறிய ஒரு செயல் இருக்கிறது என்றால் மனிதன் அச்சப்படுவான் என்பதற்காகவும் மனிதன் இறைவனை உண்டாக்கிக் கொண்டான்' என்று நீங்கள் சொல்ல, மறுபடியும் வீண் வாதங்கள் அதிகமாகும்.

என்னை நீங்கள் கேட்டதால் நான் எனக்குத் தெரிந்த சில பொது கருத்துக்களை சொல்கின்றேன், அதன் மூலம் 'இறைவன் எங்கே?' என்பதுவும், இறைவனை மனிதன் படைத்தானா? மனிதனை இறைவன் படைத்தானா? என்பதை எது மூலம், எது காரணம் என்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளுகள்.''

என்று கூறி முடித்தார் முதியவர் குமரகுரு.

''அப்படியே கூறுங்கள் ஐயா''

என்று அனைவரும் ஒருமித்த குரலில் கூறினார்கள்.

''கல்லுக்குள் தேரை இருப்பதையும்,
கடலுக்குள் முத்து இருப்பதையும்,
பூமிக்குள்ளே தங்கம் இருப்பதையும்,
பிரபஞ்சத்திலே கிரகங்கள் இருப்பதையும்,

—மனிதன் திடீரென்று கண்டு பிடித்துவிடவில்லை. பல சிந்தனைகள் செய்து பல ஆராய்ச்சிகள் செய்து கண்டுபிடித்தான். அவன் சிந்தனைக்கும் ஆராய்ச்சிக்கும் விருந்தாகவும் மருந்தாகவும் இருப்பது எதுவோ...?

கல்லுக்குள் தேரை இருக்கிறதா இல்லையா என்பதை நீயோ! நானோ கல்லை தட்டிப்பார்த்து கூற முடியுமா?

முடியாது!

கடலுக்குள் குதித்தவன் கடலின் அடி ஆழத்திற்குச் செல்ல அங்கு இருக்கும் ஆயிரமாயிரம் பொருட்களில் எது முத்து சிற்பி என்று கண்டு பிடிக்க உன்னால்! என்னால் முடியுமா?

முடியாது!

மேலை நாட்டில் யூரிகெல்லர் என்பவர் தன் இருக்கும் இடத்திலிருந்தே உலகப்படத்தினைப் பார்த்து இந்த 'இடத்தில் தங்கம் இருக்கிறது' என்று சொல்லி கோடிகோடியாகப் பணம் சம்பாதிக்கும் சக்தியைக் கொடுத்தது எது? நம் நாட்டில் சாதாரண ஒரு குச்சியை இரு கைகளின் பாதங்களின் இடையே வைத்து 'இந்த இடத்திலே நீர் ஊற்று இருக்கிறது'—என்று கூறுகின்றார்களே அதை நீங்களும், நானும் கூறமுடியுமா?

முடியாது!

எந்த வைத்தியராலும், எந்த வைத்தியத்தாலும் தீர்க்க முடியாத ஒரு நோயை ஒரு மகரிஷியால், ஒரு ஞானியால் தரப் படும் நீரால் அல்லது தொட்டுப் பார்ப்பதால் தீர்க்கப்படுகிறதே! அதைப் போல் உங்களாலும் என்னாலும் தீர்க்கமுடியுமா?

முடியாது!

பிரபஞ்சத்தில் நிகழும் (விண்வெளியில்) அதிசயத்தை முன் கூட்டியே விஞ்ஞான படிப்பறிவு இல்லாத ஒரு மனிதனால் தான் அமர்ந்த இடத்திலிருந்தே அறிந்து சொல்லப்படுகிறதே. அதை உங்களாலும், என்னாலும் சொல்ல முடியுமா? முடியாது!

**''கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்**
**குறுகத்தறித்த குறள்''**

—என்றார் இடைக்காடர் என்னும் சித்தர்.

**''அணுவைத் துளைத் தேழ் கடலைப் புகட்டிக்**
**குறுகத்தறித்த குறள்''**

—என்றார் ஔவை மூதாட்டி

கடுகைத் துளைத்தேழ் கடலைப் போன்ற சக்தியைப் புகட்டும் காலம் வந்து கொண்டு இருக்கிறது.

அணுவைத் துளைத்து (பிளந்து)

1. எலக்ட்ரான்
2. புரோட்டான்
3. நியூட்ரான்
4. பாசிட்ரான்
5. நியூட்ரினோ
6. ஹைபெரான்
7. மெசான்

—போன்ற அணு துகள் சக்தி வடிவாக வந்து வெளி வந்து கொண்டு இருக்கிறது. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அணுவை பிளக்க முடியும் என்று சொன்ன திருவள்ளுவருக்கு அடுத்து வந்த பல விஞ்ஞானிகளில் ஔவைப்பாட்டியாரும் இடைக்காடனாரும், மருத்துவ விஞ்ஞான அகத்தியர் போல் உலகில் வேறு யாரேனும் உண்டா? இதை உங்களாலும் என்னாலும் சொல்ல முடியுமா?

முடியாது!

முடியாது! முடியாது! முடியாது! என்ற பதிலுக்குப் பின்னாலும் மற்றுமொரு கேள்வி கேட்கின்றேன்! ஒரு மனிதன் இந்த உலகத்தில் பிறக்கின்றான்; அவன் பிறப்பிற்கு அவன் தாயும் தந்தையும் காரணமாகின்றார்கள் என்பது உங்களுக்கும் எனக்கும் தெரியும்.

அந்த தாயும் தந்தையும் பிறப்பிற்கு முன்பு ஒரு தாயும் தந்தையும் காரணமாகின்றார்கள் என்பது உங்களுக்கும் எனக்கும் தெரியும். இப்படியே இன்று உள்ள ஒரு மனிதன் இப்படியே தன் பிறப்பைக் குறித்து பின் நோக்கிப் போனால் சுமார் ஐயாயிரம் அல்லது பத்தாயிரம் ஆண்டுகளுக்குப் பின் போனால் அல்லது உலகம் தோன்றும் வரையில் போனால் முடிவில் அவன் மூதாதையர் எதிலிருந்து தோன்றினார்கள்?

'புல், பூண்டு, புழு, குரங்கு மற்றும் ஏதேனும் ஒரு ஜீவன் காரணமாக இருக்கும்' என்று நீங்கள் சொல்லலாம்.

அந்த ஜீவன் எதிலிருந்து உண்டானது?
'இயற்கை மாற்றத்தால்' என்று நீங்கள் சொல்லாம்
அந்த இயற்கை மாற்றம் எதிலிருந்து உண்டானது?
இயற்கை...இயற்கை—என்று திரும்பத் திரும்ப நீங்கள் சொல்லலாம்.

ஒரு மாற்றத்தை உண்டாக்க ஒரு இயக்கம் வேண்டும்.

அந்த இயக்கமான தூண்டுகோல் எது?

'சூரியன்' என்று சட்டென்று சொல்வீர்கள்!

அந்த சூரியனுக்கு தூண்டுகோலானது அல்லது சக்தியைத் தந்தது யார்? இன்று நாம் கண் கூடாகப் பார்த்த ஜூபிடர் வியாழன் (குரு) கிரகத்தில் ஷூமேக்கர்—லெவி என்ற வால் நட்சத்திரம் மோதியதால் ஜூபிடரின் மேற்பரப்பில் திரவ ஹைடிரஜன் உள்ளதால், ஷூமேக்கர்லெவி மோதிய காரணத்தால் அங்கு ஆக்ஸிஜன் உண்டாக்கலாம் என்றும் ஹைட்ரஜனும் ஆக்ஸிஜனும் சேர்ந்து நீர் உண்டாக்கி ஜீபிடரில் இனி உயிரினங்கள் உண்டாகலாம் என்று விஞ்ஞானம் கூறப்படுகிறது. அதுபோல் பூமியிலும் ஒரு தாக்கல் ஏற்பட்டு அதன் மூலம் ஒரு உயிரினம் ஏற்பட்டிருக்கலாம் அல்லவா! இந்த தாக்குதல் உண்டாகி உயிரினம் உண்டாக யார் காரணம்?

''இறைவன் எங்கே?'' என்று கேட்ட உங்கள் கேள்வி உலகம் தோன்றிய நாள் தொட்டு கேட்கப்பட்டுத் தான் வருகிறது? கேள்வி கேட்டால் தானே, பதில் கிடைக்கும்! இல்லை என்றால் தானே, இருப்பதற்கு மூலம் கிடைக்கும்!

இறைவன் மனிதனைப் படைத்தானா?

மனிதன் இறைவனைப் படைத்தானா?

என்ற கேள்வி வந்தால்தானே!

சித்தாந்தம் பிறக்கும்,

சித்தாந்தத்திலே மெய்ஞானம் பிறக்கும்!

மெய்ஞானத்திலே விஞ்ஞானம் பிறக்கும்!

இப்பொழுது சொல்லுங்கள், உலகில் யார் யாரால் உண்டானார்கள்?'' என்று முதியவர் குமரகுரு ஒரு பெரிய பிரசங்கமே செய்து முடித்தார்.

அப்பொழுது வானம் கருத்து வர, கார்மேகம் திரண்டுவர, பன்னீர் துளிபோல் மழைத் துளி விழ, அருணாசலமும் ராஜ ராஜனும் பின்னால் திரும்ப ''பாம்பு...பாம்பு'' என்று கத்திக் கொண்டே முன் நோக்கி ஓடினார்கள்.

பாம்புக்குப் பயந்து ஓடும் கூட்டத்தைப் பார்த்து முதியவர் குமரகுரு ''பயந்து ஓடுபவர்களே நில்லுங்கள், ஒரு சிறிய பாம்பைக் கண்டு ஓடுகின்றீர்களே, நான் சொன்னவைகளுக்கு சிந்தித்து பதில் சொல்லாமல் போகின்றீர்களே! வாருங்கள்''

என்று கூறிக்கொண்டே பின் நோக்கிக் காலை வைக்க, கருநாகம் முதியவர் குமரகுருவின் காலில் தீண்டியது.

முதியவர் குமரகுருவை கடித்து விட்டு ஓடும் பாம்பை அடிக்க கம்பு தேடினான் முருகவேல்.

கம்பை கொண்டு வரும் முருகவேலின் கையில உள்ள கம்பைப் பிடுங்கி தூர எறிந்தார் முதியவர் குமரகுரு.

''தம்பி! பாம்பு கடித்து நான் இறந்துவிட மாட்டேன் பாம்பு இறந்து விடுமோ என்றுதான் நான் பயப்படுகின்றேன். எனக்கு புத்திதெரிந்த நாள் முதல் தினம் தினம் அம்பாளின் பிரசாதமா ஒருவேப்பிலை சாப்பிட்டு வருகின்றேன். மேலும் பாம்பின் புற்றில் உள்ள மண் விஞ்ஞானியால் செய்யப்படாத ஒரு சஞ்சீவி இதை நான் பயன்படுத்துவதால் என் உயிருக்கு எந்த ஆபத்தும் வராது. அதோ...பார்...பாம்பு மயங்கிக் கிடக்கிறது...'' என்று கூறிக் கொண்டே மயங்கி இருக்கும் பாம்பின் அருகில் சென்று பாம்பை தன் கையால் தூக்கி, அருகம்புல் அருகில் உள்ள மூலிகை பக்கம் சென்று அங்கு உள்ள ஒரு மூலிகையை எடுத்து பாம்பின் உடலின் மீது தடவிக் கொண்டே இருந்தார், மயக்க நிலையில் இருந்த பாம்பு மயக்கம் தீர்ந்து துள்ளி குதித்த ஓட ஆரம்பித்தது, முதியவர் குமரகுருவின் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது. முருகவேல் மற்றும் வேடிக்கைப் பார்த்த கூட்டத்தினருக்கு ஆச்சரியம் ஏற்பட்டது.

முதியவர் குமரகுருவை சுற்றி நின்ற கூட்டத்தை விலக்கிக் கொண்டு வந்த தெய்வீக பொலிவு ஒரு பெற்ற அம்மையார்...

''மனிதனுக்கு சக்தி வர பக்தி மட்டுமே போதும், அந்த பக்தி உண்மையானதாக, உறுதியுடன் உள்ளதாக இருக்க வேண்டும். பக்தியிலே சந்தேகம் கூடாது. கர்மா, அறிவு பக்தியைப்பற்றி அர்ஜுனனுக்கு ஸ்ரீகிருஷ்ணபகாவன் கூறுகின்றபோது ''பக்தி ஒன்றே சிறந்தது, சகலமும் தருவது, கர்மாவைவிட அறிவைவிட பக்தியே உயர்ந்தது'' என்று, அதைப்போல் ஆண்டவனிடம் பக்தி, அனைவரிடம் வைக்கும் பக்தியாகும், எல்லா உயிர்களிடம் வைக்கும் பக்தியே இறைவனிடம் வைக்கும் பக்தியாகும் ''இறைவன் எங்கே? என்று கேட்டவர், இங்கு இப்போது இல்லை. இது எதைக் காட்டுகிறது? துன்பம் வரும் போது சோர்ந்து போய் இறைவனை நினைப்பதுவும், அல்லது தூற்றுவதும், இன்பம் வரும்போது இறைவனை மறப்பதுவும், அல்லது நினைத்து ஏங்குவதும் தவறு. இன்பத்திலும், துன்பத்

திலும் தன்னை நினைத்து தன் பலத்தை அறிவதுவே இறைவன் உள்ள இடத்தை அறிவதாகும்.

புத்தர், காந்தி, யேசு, நபி நாயகம், விவேகானந்தர் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள், ஸ்ரீதோபா சுவாமிகள், அருட்பெரும் ஜோதி வள்ளலார் சுவாமிகள் ஸ்ரீ இராம கிருஷ்ண பரமஹம்சர் ஸ்ரீசத்தியசாய்பாபா, இன்னும் எத்தனையோ மனித உருவ தெய்வங்கள் வாழ்ந்து கொண்டே இருக்கின்றார்கள். அந்த மகான்களில் குமரகுருவும் ஒருவர், என்றுகூறி மறைந்தார், அந்த அம்மையார். இதைக் கண்ட அனைவரும் மெய்யைப் புரிந்து கொண்டு அம்பாளின் திருக்கோயிலை வலம் வந்தார்கள். அப்பொழுது திருக்கோயிலில் பொருத்தபட்டுள்ள இசை தட்டு பாடலிலிருந்து

**''கற்பூர நாயகியே! கனக வல்லி!**
**காளி மகமாயி! கருமாரியம்மா!**
**பொற் கோயில் கொண்ட சிவகாமியம்மா!**
**பூவிருந்த வல்லி தெய்வ யானையம்மா!**
**விற்கோல வேத வல்லி! விசாலாட்சி!**
**விழிக் கோல மா மதுரை மீனாட்சி!**
**பொற் கோயில் நானமைத்தேன் இங்கு தாயே!**
**சுடராக வாழ்விப்பாய் என்னை நீயே!**

என்று ஒலித்துக் கொண்டே இருந்தது.

முதியவர் குமரகுரு அம்பாளின் பொற்பாத மலரை வணங்கி இல்லம் நோக்கி நடந்தார்.

அவர் வீட்டு வசாலில் ஏகப்பட்ட கூட்டம் கூடி இருந்தது கூட்டத்தினைர விலக்கிக் கொண்டு அவர் உள்ளே சென்றபோது அவர் வீட்டு வாசலில் உள்ள வேப்பமரத்தின் அடியில் ஒரு புற்று தோன்றி அதில் ஒரு நாகம் படமெடுத்துக் கொண்டிருந்தது.

''பல மைல் கோயிலை நோக்கி நடந்து வரும் முதியவர் குமரகுருவின் பொற்பாதங்கள் நோகக் கூடாது என்பதற்காக அந்த அம்பாளே அவர் வசிக்கும் வீடு தேடி வந்திருக்கிறாள். என்று கூட்டத்தினர் பேசிக் கொண்டார்.

இப்பொழுது சொல்லுங்கள் இறைவன் எங்கே இருக் கின்றார்?

• • •

# நன்றி நன்றி நன்றி

* **"T.T.D. Editor Section"** *(திருப்பதி திருமலை தேவஸ்தான நூல் வெளியீட்டு பிரிவு) என் மனம் தித்திக்கும் வகையில் இப்புத்தகத்தின் முழுத் தொகையையும் தந்தமைக்கு முதற்கண் நன்றி! வணக்கங்கள்.*

  *திருப்பதியை நம்பி திருமலைக்கு சென்றால் கரியும் வைரமாகும், கறிவேப்பிலையும் மருந்தாகும் என்பதற்கு நானே சாட்சி.*

* *சற்குரு வணக்கம் சொன்னேன், என் குரு* **ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளுக்கு.**

* *சமர்ப்பணம் என்று சொன்னேன், இப்புவியில் உலவவிட்ட என்* **தாய், தந்தையருக்கு.**

* *''யாருக்காக உலகம்?'' என்னும் தமிழ் நாடு அரசு முதல் பரிசு பெற்ற நூலை உலகிற்குத் தந்தமையால் பலகோடி தமிழ் நெஞ்சங்களில் பாசத்தோடு குடிகொண்ட இலக்கியச் சுடர்* **டாக்டர் மூவேந்தர் முத்து** *என்னும் தமிழறிஞர் இந்நூலைச் சிறப்புடனே அச்சிட்டு அழகிய உருவில் தந்தது பாராட்டுரையும் தந்த அவருக்கும் அவர் அச்சகத்தில் பணிபுரியும் இல்லத்தாருக்கும், தொழிலாளர் தோழர்களுக்கும் பணிவான வணக்கங்கள் பல ஆயிரங்கள்.*

* *உங்களால் முடியும் என்று ஊக்கம் தந்து, இந்நூல் முடியும் வரை ஆக்கத்தோடு ஊக்கம் ஊட்டி, ஆன்மீக உணர்வோடு அட்டைப் படத்தினை அழகாக வரைந்து தந்த திரு.* **எஸ். வி. குமார் டி. எப். ஏ., பி. டி.** *(இன்டர்சியல் டிசைன்) டி.டி.சி எஸ். யூ. பி. டபிள்யூ., (நியூ டெல்லி) என்னும் உலகம் போற்றும் உத்தமர் நண்பருக்கு என் உயர்வான நன்றி! வணக்கங்கள் பல.*

* *வள்ளுவர் வள்ளலார் வழிபாட்டு மன்றம் கண்ட, திருநெறி தொண்டர், திருக்குறள் படைப்புச் செம்மல், இராம கவிச் செல்வர், இன்னிசைப் புலவர்* **கா. ச. கஜேந்திரன்**

M. A. Bed அவர்கள் இன்னிசைச் சொற்பொழிவால் கோடானு கோடித்தமிழ் நெஞ்சங்களில் குடிகொண்ட செந்தமிழ் தென்றலான அவர் இச்சிறு நூலுக்கு அருளுரை தந்தமைக்கு இரு கரம்கூப்பி சிரம் தாழ்த்தி வணங்குகின்றேன். அன்னவரின் புகழ் புவியுள்ளளவும் நிலைக்க வேண்டுமென்று இறைவனை இறைஞ்சுகின்றேன்.

டாக்டர் நா. பாரி எம். பி. பி. எஸ்.; எப். ஆர். எஸ். எச். (இலண்டன்) அவர்களுக்கு

* காரிருளை விரட்ட வந்த கதிரவனோ—டாக்டர் பாரி
கார்முகில் பொழிவதிலே மாரிதானோ!—நெஞ்சம்
கார்வண்ணன் துயில் கொள்ளும் பாற்கடலோ—கருணை
கார்த்திகேயன் கையிலுள்ள ஞான வேலோ! !
பாரி என்னும் 'நா' 'தன்' புகழ் நாயகனோ—பாரி
வாரி வழங்குவதிலே அமுத ஊற்றுத்தானோ!
வாழி! தெய்வத் தமிழ் சங்கம் கண்ட கோமான், வாழ்க,
ஆழியான் அருள் வழிவரைப் பெற்று, வாழ்க! வாழ்க!

புலவர்க்கரசன் : புலவர் பொன்னரசன் M. A., BEd., தலைவர், தெய்வத்தமிழ்ச்சங்கம்

* பொன்னரசன் புவிபுகழும் பண்ணரசன்—இவர்
என்னரசன் நற்றமிழ் சொல்லரசன்
மன்னரசன் மண்டியிடும் புகழரசன்—இவர்
விண்ணரசன் போற்றும் கவியரசன்
பக்தி சக்தி முக்தி நூலுக்கு
சக்தி தரும் அருளுரை வாழ்த்துரைக்கு
முக்தி பின்னே வர சித்தி பல பெற்று
எத்திக்கும் புகழ் மணக்க வாழ்க, வாழ்க!!

திருமிகு Ln. T. K. திவாகரன்
அரிமா சங்கத் தலைவர் அவர்களுக்கு

* பத்தாம் நூற்றாண்டின் நிகண் டிவரோ—வரும்
இரு பத்தாம் நூற்றாண்டின் நிகரில் லாதவரோ!
நானிலம் போற்றும் நாயகனோ
"நா" நலம் காக்கும் திவாகரனோ!!
அரிமா சங்கத் தலைமகனோ—இவர்
பரிவு காட்டும் பரந்தாமனோ—ஏழை
அறிவு சாலைக் காவலனோ—பூமாரி
பெரியர் போற்றும் திவாகரனோ!!!

* நீதி, நேர்மைச் செம்மல், தன்னலமற்ற சமூகத் தொண்டர் விடுதலைப் போராட்ட வீரர், உலகம் தன் பாதையினை ஒழுங்காக நடத்திச் செல்ல, உன்னத கருத்துக் கூறும் அறிவு சுடர், நீதியரசர், "அசோக்கா சொசைட்டி"—என்னும் அமைப்பின் மூலம் 'திக்கற்ற ஏழைகளுக்கு வாழ்வு தரும் 'வழியினைக் கண்டு வாழ்பவர், மேலும் 'சென்ட்ரல் போர்டு

ஆப் பிலிம் சென்சார்'—அமைப்பின் உறுப்பினருமான, முதுமையிலும் இளைஞராக வாழும் திரு. T. **நீலகண்டன்** J.P. என்னும் மூதறிஞர் முன்னாள் கவுரவ நீதிபதி அவர்கள் ஆய்வுரை ஆங்கிலத்தில் தந்தமைக்கு ஆயிரம் வணக்கங்கள்.

* மருத்துவ வித்தகராம்,மாமேதை **டாக்டர்** T.A. **சிங்காரவேலு** M.B.B.S. அவர்கள் மருத்துவ சேவையோடு, பொது நலத்தொண்டு செய்து, ஏழை எளிய படைப்பாளி, பாட்டாளி வர்சகத்திற்கு "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற அப்பர் அடிகளாரின் அருள்வாக்கை மெய்ப்பிக்கும் என் ஆசான் இந்த நூலுக்கு வாழ்த்துரை தந்தமைக்கு வணங்குகின்றேன், கரம் கூப்பி, சிரம் தாழ்த்தி.

* நாளைய இளநெஞ்சங்களின் நெஞ்சில் நற்றமிழைக் கற்பிக்கும், நல்லொழுக்கம், நல்லாசிரியை, நல்வழி காட்டி திருமதி. **ஜி.. சாரதா** M.A .MEd., என்னும் அன்பு, சகோதரிக்கு என் நெஞ்சார்ந்த நன்றி. மேலும் வழக்கமான எழுத்துப் பிழை நீக்கும் பணியினையும், இச்சிறு நூலுக்கு நகலுரையும் தந்தமையால் மற்றுமொரு வணக்கம்! நன்றியுமாகும்.

* "அரிது அரிது,மானிடராகப் பிறத்தலரிது"—என்ற மூதுரை யின்படி பகவான் ஸ்ரீசத்யசாயி பாபாவின் "அன்பு, இரக்கம், தியாகம்" இவைகள் நறுமணமிக்க நந்தவனம். நல்லுரையின்படி வாழ்ந்து வழிகாட்டி வரும் உழைப்பின் சிகரம், உண்மையின் விளக்கம், பண்பின் உறைவிடம் திரு. **து. பரமசிவம்** ஐயா அவர்கள் ஆசியுரை தந்தமைக்கு நன்றி! வணக்கங்கள்.

* இருபதாண்டு காலம் எழுத்துப் பணியில்
மக்கள் மனமாற்ற புரட்சியில் புயலாகவும்
அறிவு எழுச்சியில் புதுமை சேர்க்கவும்
தமிழ் மறுமலர்ச்சியில் தூண்டு கோலாவும் விளங்கும்

திரு. புயல்சிங்காரவேலு என்னும் எழுத்துச் சிற்பி எம் நூலுக்கு மதிப்புரைதந்தமைக்கு, 'நாடி, நரம்புகள் உணர்ச்சிபொங்க நன்றி என்று கரம் கூப்பி, வணக்கம் என்று சிரம்தாழ்த்தி வணங்குகின்றேன்.

- பழகுவதில் உயிர் நண்பர், பாசத்திலே அண்ணன், நேசத்திலே தந்தை, கருணையிலே தாய் திரு. P. பூபால் M.A. டி. வி. எஸ். ஸ்டோர் மானேசர் அவர்கள் இந்நூல் சிறப்பாக அமைய சில திருத்தங்களும்,விளக்கங்களும் தந்து உதவியதற்கு அன்னாருக்கு நன்றி! வணக்கம்.

- அகத்தியர் போல் அருள்வாக்கு, சொல்லிலே செல்வாக்கு, ஸ்ரீமத் பாம்பன் பத்தியிலே இறைநோக்கு திரு. பி. குமரேசன் என்னும் பெரியவர் இந்நூலுக்கு சில குறிப்புக்களைத் தந்து உதவியதற்கு நன்றி!

- கருணை பெருக்கு, கருத்து பெட்டகம், பண்பின் சிகரம், அன்பின் உருவம் வில்லிவாக்கம் திரு P. R. கைலாசம் L. F. Ten. D. R. A. E. (Tech) B. A. L. F. T. &N. D. R. A. E.(Tech) டெப்புடி ஜெனரல் மானேஜர் என்னும் இனியவருக்கு எண்ணற்ற நன்றி! வணக்கங்கள்.

ஏழையின் வாழ்வின் இருளை அகற்றி ஒளியை ஏற்றும் உத்தம மைத்துனர் திரு. R. ஆறுமுகம் என்னும் பண்பாளருக்குப் பல வணக்கங்கள்

- குண குன்று என்று நல்லோர் நெஞ்சிலும் இடம் பிடித்த தேனினும் சுவை, தென்றலினும் மென்மை பாலினும் வெண்மை, பண்பிலே சிகரம் கொளத்தூர் திரு. K. இராமன் என்பவருக்கு என் பணிவான வணக்கங்கள்.

- இளமை காலத்து என் இனிய நண்பர்கள் திரு. A.K. பழனி B.E. மானேசர் B. H. E. L. அவர்களுக்கும் ஒரகடம் திரு. C. முனுசாமி அவர்களுக்கும் என் வணக்கங்கள்.

- தெய்வவாக்கு E. V. வெங்கடாசலபதி அவர்கள் மற்றும் அவர் மகன் முரளிதரன் திருக்கழுக்குன்றத்தில் திருகோயில் எழுப்பி சிறப்பு பெற்றவருக்கு வணக்கங்கள் பல.

- உண்மை, அன்பு, நேர்மை உன்னத ஹோமியோபதி டாக்டர் திரு. K. ஸ்ரீ ராமுலு R. H. M. P. அவர்களுக்கு அன்பு சகோதரர் திரு. T. சிவராமகிருஷ்ணன் அவர்களுக்கும் நன்றி, வணக்கம்.

# முடிவுரை

உலக நன்மைக்காகப் பாம்பன் பதியில் உள்ள பிரப்பன் வலசைக் காட்டில் முப்பத்தைந்து நாட்கள் அருந்தவமிருந்து ஞான உபதேசம் பெற்று, துறவறம் பூண்டு பக்திப் பரவசமூட்டும் 6666-பாடல்களை அருளிச் செய்த, அத்தியாச்சிரம சுத்தாத்வைத வைதிக சைவ சித்தாந்த ஞானபானு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளை ஈன்றெடுத்த அன்னை செங்கமலத்தம்மையாரைப் பெற்றெடுத்த புண்ணியத் திருநாடு நம் பாரத திருநாடு.

இன்று இந்த உலகத்தில், நடமாடும் தெய்வமாக அவதரித்து நம்முடனே மானுட உருவில் வாழ்ந்துவரும், சிருடி சாய்பாபா வின் மறுபிறப்பு, மறு அவதாரப் புருஷர் பகவான் ஸ்ரீசத்திய சாய்பாபாவை ஈன்றெடுத்த தாய் ஈஸ்வராம்பாவை பெற் றெடுத்த தெய்வீகத் திருநாடு நம் இந்தியத் திருநாடு .

எழுமின்! விழுமின்!! என்ற ஆன்மீகப் புரட்சிகளை அள்ளித் தெளித்துத் தெய்வீக மணத்தை வீசச் செய்த சுவாமி விவேகானந்தரை ஈன்றெடுத்த அன்னை புவனேஸ்வரி தேவியை பெற்றெடுத்த புண்ணிய பூமி இந்த பூமி.

கருணையே வடிவமான புத்தர் பெருமானை ஈன்ற தாய் மாயாதேவி அன்னையைப் பெற்றெடுத்த கருணை பொழியும் நாடு, நம் புனிதநாடு.

திரு அருட்பாவை உலகிற்குத் தந்த அருட்பெரும்ஜோதி, தனிப்பெரும் கருணையாம் இராமலிங்க அடிகளின் தாய் அம்மணியை ஈன்றெடுத்த திரு அருட்பெற்ற தாய்த்திருநாடு நம் இந்திய நாடு.

இறைவனை நேருக்கு நேர் பார்ப்பதற்கு பக்தியின் வகை யினை உலகத்திற்கு சொல்லித்தந்த ஸ்ரீ இராமகிருஷ்ண பரம்ஹம்ஸரை ஈன்றெடுத்த அன்னை சந்திரமணியைப் பெற்றெடுத்த புண்ணிய திருநாடு நம் பாரத நாடு.

இமயம் முதல் குமரிவரை மொழியால் வேறுபட்டாலும் சமய, ஜாதியால் வேறுபட்டாலும், கலாச்சார பண்பாட்டால் வேறுபட்டாலும், பக்தியால் நாம் அனைவரும் இந்தியரே! எந்தப் பக்தியால்? தேசபக்தியால்; தேசியபக்தியால் நாம் அனைவரும் இந்தியத் தாயின் குழந்தைகளேயாகும்.

தீண்டாமை இங்கு துவண்டு போனால், வேண்டாத கசப்பு உணர்வு அறுந்து போகும். வீட்டில் சாமி படத்தை வணங்கும் பக்தியைவிட இந்திய தேசப்படத்தை வணங்கும் பக்தியே உயர்ந்த பக்தியாகும். அந்த பக்தியே நம் அனை வருக்கும் சக்தியைத்தரும், முக்தியைத் தரும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை! இல்லை!! இல்லை!!!

பாரதப் பெருமைபினைக் காக்க ஆறுகளுக்கு அணையிட்டு காடுகளை வளமாக்குவோம்.

தொழிற்புரட்சி இங்கு தொடரும் வகை செய்வோம.

தேசிய ஒருமைப்பாடு வேஷம் போட்டுக் கத்துவதை விட்டு விட்டு, கங்கையைக் காவேரியோடு இணைப்போம்.

எழுத்தறிவற்றோர் இந்தியாவில் இல்லவே இல்லாத நிலையை கொண்டுவருவோம். வேலையின்மை இங்கு இல்லை, அதனால் இங்கு வறுமை இல்லை என்பதே உண்மையான பக்திக்கு வழி சொல்லும் உத்தியாகும்.

பள்ளிச்சாலைகளைத் திறந்து, ஆயுதச்சாலைகளை மூடு வோம். சீர்கேடுகளைப் போக்கி, மக்களை அமைதியான நேர் கோட்டிற்க்கு அழைப்போம். ''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்''— என்ற திருமந்திரத்தைக் கண்டிப்பாக உலகெங்கும் ஆன்மீக பயிர் செய்வோம்.

சக்தி அளிக்கும் மூலங்களான பெட்ரோலியம், நிலக்கரி, நிலவாயுவை வெளிக்கொண்டு வந்து பயனாக்குவோம்.

முக்தி அளிக்கும் ஞான உபதேசத்தைக் கொண்டு தர்மத்தை யும் நீதியையும் நிலை நாட்டுவோம். பக்தி அளிக்கும் சாத்திரங்கள் பல கற்போம். சக்தி அளிக்கும் இலக்கியங்களைப் படைப்போம். முக்தி அளிக்கும் இறைவனின் தோத்திரங்களை மனனம் செய்வோம்.

**அஹிம்சா நாடு நம் அன்னை பூமி—நமக்குள்**
**பனிபோன்ற பகை உணர்வு இல்லாமல்—சமாதான**
**கதிர்பட்டு பகைமை காய்ந்து போகட்டும்.**

*இல்லாமை இல்லாத, கொல்லாமையைப் போற்றாத பிற உயிரைத் தன் உயிர்போல் போற்றும் மஹா வீரரின் தாய் திரிசலா தேவியை ஈன்றெடுத்த அறநெறி நாடு நம் பாரத நாடு.*

*இம்சை இங்கு இல்லை. அஹிம்சையே எங்கள் கொள்கை என உலகத்திற்கு வழங்கிய அண்ணல் மகாத்மா காந்தியை ஈன்ற அன்னை புத்திலிபாயை ஈன்றெடுத்த அன்புத் திருநாடு நம் அன்னை பாரதத் திருநாடு.*

*மண்ணுக்குள் மண்டிக் கிடக்கும் பொன்,*
*ஆழ்கடலில் குவிந்து கிடக்கும் முத்துக்கள்,*
*அலை போல் மின்னும் இரத்தினங்கள்,*
*குன்றுபோல் குவிந்து கிடக்கும் புட்பராகம்,*
*வானவில் ஒளியோ, இது வைடூரிய வைரமோ,*
*வைர கோமேதகச் சுடரோ என திகைக்கும்*
*கடல்போல் விரிந்து கிடக்கும் திகைப்போ!*
*மரகத, பவளம், நீலம் கண் சிமிட்டும்! ஜாலங்களோ!!*

*இதைக் கண்டு விண்மீன்கள் நாணிக் குறுகி தலைசாயும் நகைப்போ, ஆம்! இங்கு இல்லா செல்வங்கள்! வேறு எங்கு உண்டு!!*

*கருணை உண்டு, அன்பு உண்டு, அறநெறிப் பண்பு உண்டு தெய்வீக உணர்வு உண்டு. என்ன இல்லை இங்கு! எல்லாம் உண்டு ஒன்றைத் தவிர! அது ஒற்றுமை, என்ற உணர்வைத் தவிர.*

*''பாருக்குள்ளே நல்ல நாடு நம் பாரதநாடு'' இது வீண் பெருமைக்காக பாரதியால் சொல்லப்பட்டவை அல்ல. நம் நாட்டில், விலையும், விளைந்த வித்துக்கள் எதுவும் சோடையானவை அல்ல. அப்படி சோடையானவைகளாக ஒரு சில இருந்தால் அது எங்கிருந்தோ இங்கு இறக்குமதி செய்யப் பட்டவையாகத்தான் இருக்க வேண்டும்.*

*அன்று முதல் இன்று வரை இந்த உலகத்திற்கு அறமாகவும் நல்ல உரமாகவும் இருந்து வருவது நம் பக்தி நெறியும், அதை வழிநடத்தும் சக்தி முறையுமே யாகும்.*

பக்தியுடன், சக்தி (உறுதி) சேருகின்றபோது அது சத்தியத்தைத் தருகின்றது. சத்தியம் பிறந்த இந்த மண்ணால் தான் உலகத்திற்கு சமாதானத்தைப் போதிக்க முடியும்.

உண்மையான வீரம் என்பது தெய்வீக நம்பிக்கையுடன் கூடிய சமாதானத்திலேதான் உண்டு. பஞ்சசீலத்தைப் போதிக்கும் இந்த இந்திய பூமியால் தான் உலகத்திற்கு உண்மையான அமைதியைத் தர முடியும்.

''யாதும் ஊரே! யாவரும் கேளிர்!''—இருபது நூற்றாண்டு களுக்கு முன் தமிழன் உலகத்திற்கு சொல்லித் தந்த பாடமிது.

பாடங்கள் புத்தகத்தோடு நில்லாமல், மனித வாழ்க்கைக்குப் பயன்பெற வகை செய்வோம். உடலில் சின்னங்களை அணிவது மட்டும் பக்தி இல்லை. உள்ளத்திலே உறுதியோடு உண்மையைப் பேசுவதும் செய்வதுமே உண்மை பக்தியாகும்,

**''பக்தியினாலே இந்தப்**
**பாரினிலெய்திடும் மேன்மைகள் கேளடி!**
**சித்தந் தெளியும்—இங்கு**
**செய்கை யனைத்திலும் செம்மை பிறக்கும்,**
**வித்தைகள் சேரும், கல்ல**
**வீரருறவு கிடைக்கும், மனத்திடைத்**
**தத்துவ முண்டாம்,—நெஞ்சிற்**
**சஞ்சலம் நீங்கி உறுதி விளங்கிடும்.''**

என மகாகவி பாரதி சொன்னதை ஏற்போம்.

பலவாயிரம் ஆண்டுகளாய் வளம் பெற்று வந்து நம் பக்தி யும்,சக்தியும் இருநூறு ஆண்டுகளாய் இடர்பட்டு, முடக்கப்பட்டு நாற்பத்தி ஏழு ஆண்டுகளாய் துளிர்விடப்பட்டிருக்கும் செடியை நம் புனிதம் என்ற தண்ணீரால், புண்ணியம் என்ற காற்றால் சத்தியம் என்ற உரத்தால் காப்பாற்றுவது ஒவ்வொரு இந்தியரின் தலையாயகடமையாகும்.

கருவூரில் புறப்பட்ட நம் பயணம் சுடலையூரில் முடியும் முன்னே, பம்பரமாய்ச் சுழன்றுகொண்டு இருக்கும் நம் வாழ்க் கையில், பக்தியில் செலுத்தி, சக்தியைப் பெற்று, முக்தியை அடைய வகை செய்வோம்.

- **சிறு கதைகளின் கதை சுருக்கம்**
  **பக்திக்கு விளக்கம்**

பரம்பொருளின் சக்தி உங்கள் மூலம் எனக்கும் கிடைக்கும் என்பதினால்... பகுத்தறிவுக்கு எட்டியவரை விளக்கம் சொன்னேன்.

* **உண்மை பக்தி**

நம்பினால் "சாமி" நம்பாதவருக்கு "ஆசாமி" என்பதை மட்டுமல்ல, நம்பினால் சக்தி வரும் என்பதையும், மனிதன் மகானாகலாம் என்பதைக் கூறவே இக்கதையை எழுதினேன்.

* **தெய்வ பக்தி**

துன்பங்கள் பெரும்புயலாகும் போது கூட, இறைவனின் திருநாமத்தை தினம் தியானித்து வாழ்ந்தால், இறைவன் திருவருள் நிச்சயம் கிடைக்கும் என்பதை கூறவே இக்கதையாகும்.

* **மெய் பொய்:**

"ஏய்த்து பிழைப்பவன் எந்த நாளும் உயர்ந்து வாழான்" என்பதையும், "அரசன் அன்று கொல்வன், தெய்வம் நின்று கொல்லும்" என்பன பழைய நிலை, ஆனால் இந்த தெய்வம் இன்றே பதில் சொல்லும் என்பதைக் கூறும் கதையாகும்.

* **திரும்பிப் பார் :**

மருத்துவர்களுக்காக மட்டும் இது சொல்லவில்லை, மனம் திறந்து சொல்லுகின்றவர் யாரும் இல்லை என்பதால் சமுதாயத்தின் எல்லாத் துறையிலேயும் இந்த நிலை ஒரு மவுனத்தின் போராட்டமாகும் என்பதை சிந்தை உளி கொண்டு சிறு சித்திரமாக்கினேன்.

* **சந்தேகம்**

சங்கடத்தை மட்டுமா உண்டாக்கும்! அதைத் தீர்க்க வருபவரைக் கூட தீண்டி தீக்கரையாக்கும் என்பதையும் இந்திய திருநாட்டின் ஒற்றுமைக்கு இது எடுத்துக்காட்டாகும் என்பதை சொல்லவே இதைச் சொல்லி வைத்தேன்.

* **சக்தி ஒரு விளக்கம்**

சிறுகதை படித்து சோர்வு பெறும் உங்களுக்கு ஒரு சிந்தனை விருந்து வைக்கவே "சக்திக்கு" ஒரு சக்தியை ஊட்டினேன். அது எனக்கு சக்தியைத் தருவதற்குப் பதிலாக விரக்கதிக்கு வழிவகுக்குமோ என சுருக்கமாக முடித்துவிட்டேன். இனி சக்தி உங்களுக்கு. விரக்தி......!!?

* **அவனுக்குள் ஒரு சக்தி**

உழைத்தால் உயரலாம், நல்லவரின் உதவி இருந்தால் வாழலாம். உயர்ந்த பின்னும், நன்றாக வாழும் போதும் நாம் கற்க வேண்டியவைகள் பல ஆயிரம்; அதில் ஒன்று

சின்னக் குருவியின் சொல்லும் செய்திகள் நல்ல பயனைத் தரும் என்பதைக் காட்டுவதே இக்கதையாகும்.

- **அவசரம் :**
  நீதி, நேர்மை, நியாயங்கள்க், கானல் நீர் என்று எண்ணி அவசரத்தில் துள்ளிக் குதித்தால் வாழ்க்கை துவண்டு போகும்... "பொறுத்தது போதும், இனி பொங்கி எழு" என்பதெல்லாம் வாழ்க்கைக்கு சரிபடுமா என்பதை பார்த்து சிந்தித்து செயல்பட வேண்டும் என்பதை கூறவே இக்கதை மலர்ந்தது.

- **காளியின் சக்தி :**
  தேரோடும் வீதியிலே விதைத்தால், போராடும் வாழ்க்கைக்கு இது சரிபடுமா! பாவம் நாமும் விதையைத் தூவ வேண்டிய நிலத்தை மறந்து எங்கோ, எதிலோ விதைக்கின்றோம் விதைத்தது முளைக்கும் போது அதை ஒரு நாள் அறுவடை செய்துதானே ஆக வேண்டும், அது தான் இக்கதையின் அம்சமாகும்.

- **சம்மதம்:**
  "எம்மதமும் சம்மதம் இதில் ஏது நமக்கு பேதம்" இதை உதட்டளவில் சொல்லாமல், உள்ளத்தில் சொல்ல வேண்டும். யார்? எல்லா மதத்தினரும் என்பதுவே இக்கதை சாரமாகும்.

- **அறியாமை :**
  தெரியாமை, மட்டுமா அறியாமை. இல்லை...இல்லை... புரியாமை, புரிந்தை செய்யாமை! உழைக்காமை, கற்பனை கோட்டைகளைக் கனவிலே மட்டுமல்லாது நினை விலே கூட நினைக்காமை வேண்டும், என்பதற்கான கதை.

- **உண்மை :**
  சோதிடம் உண்மையோ! பொய்யோ! அதுவல்ல "உண்மை"
  உழைப்பதே உண்மை!.
  பிறர் உழைப்பில் வாழாது இருப்பதுவே உண்மை !
  பட்டமரம் துளிராது! ஆனால் வெட்டுப்பட்ட மரம் துளிர வேண்டும் என்பதுவே உண்மை! விதவையின் வாழ்வும் துளிர வேண்டும் என்பதுவே உண்மை. 'சுட்டமரம் கரியாகும், கரி ஒரு நாள் வைரமாகும், என்பதுவே உண்மை. இதுவே கதையின் கருவாகும்.

* **புத்தி வந்தது**

'உழைக்காமல் ஏய்த்து வாழும் அட்டைப்பூச்சிகளை ஆண்டவன் கவனித்து வருகிறார் என்பதை இக்கதை கூறினாலும், ஏமாற்றுபவரின் நெஞ்சமும் திருந்தும் என்பதை கூறும் அருங்கதை இது.

* **நினைத்தது ஒன்று**

இளமையிலே துள்ளியது வெம்பியது ஆகாது! என்பதையும், கரை புரண்டு வரும் காட்டாற்று வெள்ளம் வருமுன்னே அணையிட்டு பாதுகாத்தால் காட்டாறு, தேன் ஊற்றுஆகும் என்பதை சொல்லும் கதை.

* **மவுனத் தின் மனசாட்சி** :

மனதில் எழும் உணர்ச்சிகளுக்கு எழுத்தே சாட்சி! ''படித்தவனுக்கு.'' குணத்தில் எழும் உணர்ச்சிகளுக்கு மனமே சாட்சி! ''அனைவருக்கும்.'' வருந்தாத, மனம் திருந்தாது. திருந்திய மனம் வருந்தாது. தீர்ப்பை போக்கி திருமலையை நாடினால் ''நன்மை''...நன்மை! அது ''உண்மை'' உண்மை...

* **நினைப்பின் நெடுந்தூரம்**

வாழ்க்கையின் நெடும்பயணம் நினைப்பாகும். நினைப்பின் நெடும்பயணம் ஞானியாக்கும். ஆண்டி, அமைச்சராகலாம். விதி வசத்தால், அமைச்சன் ஞானியாகலாம். மதியுகத்தால் நினைப்பை நோக்கி, நீங்களும் நெடும் பயணம் செய்து பாருங்கள், உங்கள் உண்மை உங்களுக்குப் புரியும்.

* **முக்தி ஒரு விளக்கம்**

முக்திக்கு வழி சொல்லும் நான் முனிவனல்ல. ஆனாலும் ''பக்திக்கும் சக்திக்கும் பலன் தருவது முத்தியாகும்'' என்று கூறி முக்தியைத் தேட முதுமை மட்டும் போதாது. சித்தி பெற்ற சித்தர்களை நாடுங்கள், **முக்திக்கு வழி** கிடைக்கும்.

* **எங்கே இந்த உலகம்**

காலத்தோடு பயிர் செய்ய வேண்டிய காலங்களை விட்டு விட்டு கடைசியில் சாட்சிக்குப் பொருளாய், கடமைக்கு மனிதனாய் வாழக்கூடாது என்பதே இக்கதை. ஆனாலும், கற்ற வித்தை கடைசியில் பலனைத் தரும். என்பது உண்மை.

* **உயர்வு**

உயர்வு!
எது உயர்வு

உழைப்பு உயர்வு!
உண்மை உயர்வு
அன்பு உயர்வு!
சத்தியம் உயர்வு!
சமாதானம் உயர்வு!
கடமை உயர்வு!
கட்டுப்பாடு உயர்வு!
கண்ணியம் உயர்வு!
உயர்வை நோக்கிப் போங்கள்! உண்மை உங்களுக்கு புரியும்!

**யாருக்கு மோட்சம்:**
மனிதனுக்கு கிடைக்கும் மோட்சத்தை விட, விலங்குகளுக்கு கிடைக்கும் இறப்பே உயர்வானது. அதன் அங்கங்கள் அத்தனையும் விருந்தாகிறது வெறி கொண்ட மனிதனின் பசிக்கு.

காலை முதல் மாலை வரை வண்டி இழுக்கிறது, மதம் கொண்ட மனிதனின் வயிற்றுப் பிழைப்புக்கு.
உண்ட உணவை பாலாக்கி சக்தி தருகிறது, மனிதனின் உடலுக்கும் அறிவிற்கும் விருந்தாக.
ஆனால் மனிதன் இறந்தால்...யாரின் மோட்சம் உயர் வானது...? நீங்களே அறிந்து சொல்லுங்கள்.

**முன் ஜென்ம வினை:**
எத்தனை ஜென்மங்கள் எடுத்தாலும், மனிதன், திருந்துவது என்பது கிடையாது. சுயநலத்திற்காக எதையும் பதை பதைக்க சுட்டு உண்பான். பிறர் நலம் தன் மூச்சு, பேச்சு என்று பிறரை ஏய்த்து வாழ்வான், அதற்கு இறைவன் தரும் தண்டனையே...சில...சில நிகழ்ச்சிகள். இதில் இதுவும் ஒன்று.

**மலரை நாடும் நார்:**
பருந்திடமிருந்து பாதுகாக்க தன் சிறகுக்குள்ளே அடைக்கலம் தருகிறது கோழி தன் குஞ்சுக்குக்கு.

தன்னினத்தை கூவி அழைத்து உண்கிறது காக்கை. ஆனால் நாமோ, நீந்தத் தெரியாதவரை பேதை, நீந்த தெரிந்தாலோ மேதை, பேதையை மேதையாக்கியும், மேதையை பேதையாக்கியும், காட்டும் வல்லமை அந்த இறைவன் ஒருவனுக்கே உண்டு. அதுவே இது.

**ஓர் இரவு பொழுது:**
ஓர் இரவுப் பொழுது எனக்கு மட்டுமா சொந்தம் உங்களுக்கும் சொந்தம். படித்துப் பாருங்கள், பயன்

என்றால் பத்திரப்படுத்துங்கள் இல்லையானால்...?

* **இறைவன் எங்கே?** உன்னுள் உள்ள இறைவனே இந்த. உலகத்தில் இருக்கின்றார். எண்ணில்லாத குழப்பங்கள், வாதங்கள் வேண்டாம் என்பதே இக்கதையாகும்.

* இந்த நூலில் தவறுகள் இருந்தால், எழுத்துப் பிழை இருந்தால், வார்த்தை கோர்வை தவறி இருந்தால், அறிஞர் பெருமக்கள் சுட்டி காட்டலாம். தலைவணங்கி தவறுக்கு வருந்துவேன் என்று கூறி, இந்த நூலை படித்த அனைவருக்கும் நன்றி கூறி! மேலும் உங்கள் நல்லாசியை எதிர் நோக்குகின்றேன்.

* திருப்பதி திருமலை தெய்வத்தை நோக்கி வணங்கி விடை பெறு முன்.

* இப்புத்தகத்தின் வெளியீட்டிற்கு முழுதொகையையும் தந்து உதவிய T.T.D. தேவஸ்தான எடிட்டருக்கும் அதன் ஆபீசுக்கும் நன்றி! நன்றி!!

முடிவுரை என்னும் சாரலில் நனைவதும் பக்தி, சக்தி! முக்தி என்னும் தூரலில் பட்டு, சிறுகதைகள் என்னும் கருத்து மழையில் நனைந்த உங்கள் அனைவருக்கும் நன்றி! நன்றி!

என் எண்ணங்களைத் தூவி விட்டேன் அதைப் படித்துப் பலனைப் பெறுவது உங்கள் கையில் மட்டும் உண்டு.

நன்றி! வணக்கம்.







ஆசிரியர் நாகு. ஆறுமுகம் (கு. ஆறுமுகம்) அவர்கள்

1947 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15-ம் நாள் (15-8-1947) இந்திய தாய் சுதந்திரம் பெற்றார். அன்று இவர் தாய் இவரைப் பெற்றெடுத்தார்.

1967 படிப்பு முடித்துவிட்டு, வாழ்க்கை படிப்பு ஆரம்பம்.

1974 ஹோமியோபதி மருத்துவப் படிப்பு.

1980 சித்த மருத்துவப் பயிற்சி

1991 "மனித தர்ம தத்துவம்" —நூல் எழுதி வெளியிடல்

1992 உறுப்பினர் ☐ Member of the Siddha Medical Practitioner's Association in Triplicane Ms-5
☐ Regd. Homoeopathy Doctors Association T. Nagar, Madras-17.

1992 World Academy of Arts & Culture (கலிபோர்னியா) கௌரவ டாக்டர் (D. Litt) பட்டம் வழங்கி வாழ்த்திச் சிறப்பித்தல்.

1993 இவரின் டில்லி பதிப்பகத்திற்கு Government of India Ministry of Human Resource Development of Education New Delhi-110 001 நிறுவனம் ISBN 85801 என்ற நிரந்தர உலக அளவில் எண் தந்துள்ளது.

1994 வள்ளுவர் வள்ளலார் சிறப்பு வழிபாட்டு மன்றத்தின் சார்பில் இன்னிசைப் புலவர் கா. ச. கஜேந்திரன் எம்.ஏ.பி.எட். அவர்கள் "இறைநெறிச் செல்வர்"— என்னும் பட்டத்தை வழங்கினார்கள்.

☐ இறைநெறிச் செம்மல் டாக்டர் நா. பாரி M.B.B.S., FRSH (London) நிறுவனர் தெய்வத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில், கேடயமும், பொன்னாடையும் அணிவித்து சிறப்பித்தனர்.
—டில்லி பதிப்பகம்

மூவேந்தர் அச்சகம், இராயப்பேட்டை, சென்னை-14